# சுகி.சிவம் படைப்புகள் - ஓர் ஆய்வு

(அழகப்பா பல்கலைக்கழகத்தில் தமிழ் முனைவர் (Ph.D)
பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு)

ஆய்வாளர்
**J. சுவேதா**
(பதிவு எண். 1514)

நெறியாளர்
**முனைவர் ச. முருகேசன்,**
தமிழ்த்துறை,
அழகப்பா அரசு கலைக்கல்லூரி,
காரைக்குடி - 630 003.




அழகப்பா பல்கலைக்கழகம்,
(தேசியத் தர மதிப்பீட்டுக்குழுவின் மறுமதிப்பீட்டில் “ஏ” தகுதி பெற்றது)
காரைக்குடி - 630 003.

திசம்பர் - 2012.

**முனைவர் ச. முருகேசன், எம்.ஏ., எம்.ஃ.பில்.,பிஎச்.டி.**
இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, அழகப்பா அரசு கலைக்கல்லூரி,
காரைக்குடி - 630 003.

**நாள்:**

# நெறியாளர் சான்றிதழ்

**"சுகி.சிவம் படைப்புகள்-ஓர் ஆய்வு"** என்னும் தலைப்பில் அமைந்துள்ள இவ்வாய்வுரை, அழகப்பா பல்கலைக்கழகப் பிஎச்.டி. பட்டத்திற்காக என் மேற்பார்வையில் **திருமதி. ஜெ.சுவேதா** என்பார் மேற்கொண்ட பகுதிநேர ஆய்வில் உருவாக்கப்பெற்றதாகும். இவ்வாய்வுரை அல்லது இதன் பகுதிகள் இதற்கு முன்பு வேறு எந்தப் பட்டத்திற்கோ அல்லது ஆய்வரங்கிற்கோ அளிக்கப்பெறவில்லை என்பதற்கும், இஃது ஆய்வாளர் தம் சொந்த முயற்சியினால் உருவாக்கப்பெற்றது என்பதற்கும் சான்றிதழ் வழங்குகிறேன்.

**(ச. முருகேசன்)**
நெறியாளர்

காரைக்குடி.

**ஜெ. சுவேதா,** எம்.ஏ., எம்.ஃ.பில்., எம்.சி.ஏ.,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
காரைக்குடி- 630 001.

**நாள்:**

# ஆய்வாளர் உறுதிமொழி

**"சுகி.சிவம் படைப்புகள்-ஓர் ஆய்வு"** என்னும் தலைப்பில் அமைந்துள்ள இவ்வாய்வுரை, யான் மேற்கொண்ட பகுதிநேர ஆராய்ச்சியின் பயனாக அமைந்ததாகிறது. இவ்வாய்வுரை இதற்கு முன்பு வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டம், சான்றிதழ், பல்கலைக்கழக உறுப்பினர் தகுதி போன்றவற்றிற்கு அளிக்கப்பெறவில்லை என்றும், இஃது என் சொந்த முயற்சியால் உருவாக்கப்பெற்றது என்றும் உறுதி கூறுகிறேன்.

காரைக்குடி **(ஜெ. சுவேதா)**

ஆய்வாளர்

உறுதிக்கையொப்பம்
**முனைவர் ச. முருகேசன்,**
இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, அழகப்பா அரசு கலைக்கல்லூரி,
காரைக்குடி- 630 003.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | |
|---|---|
| ஆ.ப. | ஆறாம் பதிப்பு |
| இ.ப. | இரண்டாம் பதிப்பு |
| இ.ப.த.ம. | இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம் |
| இளம். | இளம்பூரணர் |
| உரை.ஆ. | உரையாசிரியர் |
| எ.ப.ஆ. | எம்.ஃ.பில் பட்ட ஆய்வேடு |
| எ.ப. | எட்டாம் பதிப்பு |
| ஏ.ப. | ஏழாம் பதிப்பு |
| ஐ.ப. | ஐந்தாம் பதிப்பு |
| ஒ.ப. | ஒன்பதாம் பதிப்பு |
| கட்.ஆ. | கட்டுரை ஆசிரியர் |
| கழக வெளியீடு | திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு |
| குறள். | திருக்குறள் |
| சொல். | சொல்லதிகாரம் |
| தொகு.ஆ. | தொகுப்பாசிரியர் |
| தொல். | தொல்காப்பியம் |
| நா.ப. | நான்காம் பதிப்பு |
| நூ. | நூற்பா |
| ப. | பக்கம். |
| ப.ப. | பத்தாம் பதிப்பு |

| | |
|---|---|
| பக். | பக்கங்கள் |
| பதி.ஆ. | பதிப்பாசிரியர் |
| பதிப். | பதிப்பகம் |
| பா. | பாடல் |
| பி.ப.ஆ. | பிஎச்.டி.பட்ட ஆய்வேடு |
| புறம் | புறநானூறு |
| பொருள். | பொருளதிகாரம் |
| ம.ப. | மறுபதிப்பு |
| மு.ப. | முதற்பதிப்பு |
| மூ.ப. | மூன்றாம் பதிப்பு |
| மேலது. | மேலே குறிப்பிட்ட |
| மொ.பெ.ஆ. | மொழிபெயர்ப்பு ஆசிரியர் |
| வி.உ. | விற்பனை உரிமை |
| P. | Page |
| P P. | Pages |

# நன்றியுரை

முனைவர் பட்ட ஆய்வினை நிகழ்த்துவதற்கு எனக்கு வாய்ப்பளித்த அழகப்பா பல்கலைக்கழகத்திற்கு நன்றி தெரிவிப்பது எனது முதற்கடமையாகும்.

இவ்வாய்வினை மேற்பார்வை செய்து ஆய்வுத் தொடர்பான கருத்துகளை வழங்கி, நன்னெறிப்படுத்தி, உரியகாலத்தில் ஆய்வினைச் சமர்ப்பிக்க உதவிய நெறியாளர் முனைவர் **ச. முருகேசன்** அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வுப் பணியை எட்டும் அளவிற்குக் கல்வியில் என்னை ஆளாக்கிய என் பெற்றோர் திரு. **பாலசுப்பிரமணியன்**, திருமதி. **ஆனந்தா** ஆகியோருக்கும், தொடர்ந்து என் கல்வி வளர்ச்சியில் என்னை ஊக்கப்படுத்தி வரும் என் கணவர் திரு. **ஜீவானந்தம்**, மகள் **ஜனனி** ஆகியோருக்கும் நன்றி செலுத்துவது எனது தலையாய உள்ளக்கிடக்கையாகின்றது.

ஆய்வுக் காலத்தில் அணுகிய போதெல்லாம் ஆற்றுப்படுத்திய அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் **மு.பாண்டி**, அழகப்பா அரசு கலைக்கல்லூரி முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர் **பேரா.ம. கார்மேகம்,** மருத்துவர் **பழனிராஜன்** ஆகியோரை நன்றியுடன் நினைவு கூர்வதில் பெருமிதம் அடைகிறேன்.

ஆய்வுக்காலத்தில் பல்வேறு நூல்களைக் கொடுத்துதவிய அழகப்பா பல்கலைக்கழ நூலகர், அழகப்பா அரசு கலைக்கல்லூரி நூலகர், மறைமலை அடிகள் நூல்நிலைய நூலகர், ஆய்வுப் பணியின்போது துணைநின்ற அன்புச் சகோதரிகள் **முத்துவள்ளி, தென்றல், இலக்குமி, சரஸ்வதி, வனிதா, காந்தி, உமா, பிரமிளா, காளியம்மாள், நிறைமதி, கனகா, நிர்மலா**, அன்புச் சகோதரர்கள் **ராமன், இலட்சுமணன், சிங்காரம், சதீஸ்** ஆகியோர் என்றும் என் நன்றிக்குரியவர்கள்.

உரியகாலத்தில் ஆய்வேட்டினைச் செப்பமுற வடிவமைத்துக் கொடுத்த கோட்டையூர் **சிடிஎஸ்** நிறுவனத்தாருக்கு நெஞ்சார்ந்த நன்றி.

காரைக்குடி

**(J. சுவேதா)**
ஆய்வாளர்.

# உள்ளடக்கம்

# ஆய்வு அறிமுகம்

**ஆய்வுத்தலைப்பு**

இருநூற்றாண்டுகளாக இலக்கியத் திறனாய்வு மிக வேகமாக வளர்ந்து வரும் ஒரு துறையாக விளங்குகிறது. ஆங்கிலேயரின் வருகைக்குப்பின் தமிழில் தோன்றிய உரைநடை இலக்கியம், இன்று பல ஆய்வுகளை மேற்கொள்ளவதற்கு இடமளிக்கிறது. ஆன்மிகம் மற்றும் சுயமுன்னேற்றம் குறித்துச் சொற்பொழிவாற்றிவரும் சுகி.சிவத்தின் படைப்புகளை மையமிட்டு, **“சுகி.சிவம் படைப்புகள் - ஓர் ஆய்வு”** என்னும் தலைப்பில் இவ்வாய்வு மேற்கொள்ளப்பெறுகிறது.

**முன்னாய்வுகள்:**

ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பெற்றுள்ள சுகி.சிவத்தின் படைப்புகளை மையமிட்டு முழுமையான ஆய்வு மேற்கொள்ளப்படவில்லை. இருப்பினும், சுகி.சிவத்தின் நூல்களை ஆய்வு செய்து எழுதப்பெற்ற ஆய்வுக்கட்டுரைகள் தொகுக்கப்பெற்று, ‘சொல்வேந்தர் சுகி.சிவம் ஒரு பன்முகப்பார்வை’, ‘சுகி.சிவம் வாழ்வியல் சிந்தனைகள்’ என இருநூல்களாக வெளியிடப்பட்டுள்ளன. இந்நூலை துரை.அங்குசாமி தொகுத்துள்ளார். அந்த வகையில் சுகி.சிவம் படைப்புகளை மையமிட்டு, **‘சுகி.சிவம் படைப்புகள்-ஓர் ஆய்வு’** என்னும் தலைப்பில் மேற்கொள்ளப்பட்டுள்ள இவ்வாய்வே முதன்மையானதாகும்.

**ஆய்வு நோக்கம்:**

சுகி.சிவம் படைப்புகளில் ஆன்மிகம், இலக்கியம், பெண்ணியம், தன்னம்பிக்கை, உளவியல் சிந்தனைகள் எந்த அளவிற்கு இடம்பெற்றுள்ளன என்பதை ஆய்வதோடு படைப்புகளில் நடைத்திறன் எவ்வாறு அமைந்துள்ளது என அறிய வேண்டும் என்பதற்காகவும் இவ்வாய்வு மேற்கொள்ளப்பெற்றுள்ளது.

**ஆய்வு மூலங்கள்:**

**முதன்மை ஆதாரங்கள்:**

சுகி.சிவம் படைத்துள்ள கந்தர் அநுபூதி, கம்பன் நேற்று- இன்று- நாளை, மனசே நீ ஒரு மந்திரச்சாவி, ஞான மலர்கள், நல்ல வண்ணம் வாழலாம், கனவு மெய்ப்படும், ஒரு தலம், ஒரு பாடல், ஒரு நயம், மனிதனும் தெய்வமாகலாம், வெற்றி நிச்சயம், நல்ல குடும்பம் நமது லட்சியம், வாழ்தல் ஒரு கலை, சுந்தரகாண்டம், நினைப்பதும் நடப்பதும், உணவே உயிரே, சிந்தனை முத்துக்கள், படிக்க ஜெயிக்க, சொன்னார்கள் -பாகம்-1, அர்த்தமுள்ள வாழ்வு, இந்தநாள் இனியநாள், அச்சம் தவிர், சொன்னார்கள் பாகம்-2, ஆன்மிகப் பூங்காவில் அதிசயத் துளசி, வாழ்ந்து பார்க்கலாம் வா, ஏமாறாதே ஏமாற்றாதே ஆகிய இருபத்துநான்கு நூல்களும் இவ்வாய்விற்குரிய முதன்மை ஆதாரங்கள் ஆகின்றன.

**துணைமை ஆதாரங்கள்:**

தமிழ் இலக்கிய, இலக்கண நூல்கள், ஆய்வேடுகள், ஆய்வுநெறிமுறை பற்றிய நூல்கள், பெண்ணியம், ஆன்மிகம், சுயமுன்னேற்றம் குறித்தத் திறனாய்வு நூல்கள், ஆங்கில நூல்கள்,

கட்டுரைகள், கலைக் களஞ்சியங்கள், நேர்காணல் முதலியவை இவ்வாய்விற்குரிய துணைமை ஆதாரங்கள் ஆகின்றன.

**ஆய்வு எல்லை:**

'சுகி.சிவம் படைப்புகள் - ஓர் ஆய்வு' என்னும் தலைப்பில் ஆய்வு தொடங்கப்பபெற்ற 2007 ஆம் ஆண்டு வரையிலான காலத்தில் வெளிவந்துள்ள சுகி.சிவத்தின் நூல்களை மையமிட்டே இவ்வாய்வு செல்கிறது. அதற்குப்பிறகு வெளிவந்துள்ள வாழப்பழகுவோம் வாருங்கள், என் கேள்விக்கு என்ன பதில், வெற்றி மீது வெற்றி வந்து, பெண்ணே நீ வாழ்க, சுகி.சிவம் கேள்வி – பதில்கள், ஒளி பரவட்டும், ஊருக்கு நல்லது சொல்வேன், ஆனந்தம் பரமானந்தம் முதலான நூல்களும், சுகி.சிவத்தின் சொற்பொழிவு பதிவு செய்யப்பெற்று வெளியிடப்பட்டுள்ள குறுந்தகடுகள், ஒலிநாடாக்கள் ஆகியனவும் இவ்வாய்வில் இடம்பெறவில்லை.

**ஆய்வு அணுகுமுறை:**

இவ்வாய்வில் பகுப்பாய்வு அணுகுமுறை (Analytical Approach), உளவியல் அணுகுமுறை (Psychological approach), திறனாய்வு முறை (Critical study), விளக்கமுறைத் திறனாய்வு (Descriptive Criticism) ஆகிய அணுகுமுறைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

சுகி.சிவம் படைப்புகளில் இடம்பெறும் ஆன்மிகச் சிந்தனைகள், இலக்கியச் செய்திகள் ஆகியன குறித்து வகைமை நோக்கில் ஆராய்வதால் பகுப்பாய்வு அணுகுமுறையும் (Analytical approach), படைப்புகளில் அமையும் உளவியல் சிந்தனைகள் உளவியல் முறையில் அணுகுவதால் உளவியல் அணுகுமுறையும் (Psychological approach),

பெண்ணிய வகைகள், படைப்பாசிரியரின் பெண்ணியச் சிந்தனை, தன்னம்பிக்கைச் சிந்தனைக் கூறுகள் முதலானவற்றை நோக்கும்போது திறனாய்வு முறையும் (Critical study), படைப்புகளில் வெளிப்படும் நடை வகைகள், திசைச்சொற்கள், வடசொற்கள், வட்டாரச் சொற்கள் முதலான நடையியல் கூறுகளை விளக்கிச் செல்வதால் விளக்கமுறைத் திறனாய்வும் (Descriptive criticism) என ஆய்வு அணுகுமுறைகள் பின்பற்றப்பெற்றுள்ளன.

**ஆய்வேட்டின் அமைப்பு:**

ஆய்வு அறிமுகம், ஆய்வு நிறைவுரை நீங்கலாக இவ்வாய்வு,

இயல் -1 – படைப்பாசிரியரும் படைப்புகளும்

இயல் - 2 – சுகி.சிவம் படைப்புகளில் ஆன்மிகச் சிந்தனை

இயல் - 3 – சுகி.சிவம் நூல்களில் இலக்கிய ஆளுமைத்திறன்

இயல் - 4 – சுகி.சிவம் படைப்புகளில் பெண்ணியச் சிந்தனை

இயல் - 5 – சுகி.சிவம் படைப்புகளில் தன்னம்பிக்கைச் சிந்தனை

இயல் - 6 – சுகி.சிவம் படைப்புகளில் வெளிப்படும் நடைத்திறன்

இயல் - 7 – சுகி.சிவம் படைப்புகளில் உளவியலும் மனிதநேயமும்

என ஏழு இயல்களாகப் பகுக்கப்பெற்றுள்ளது.

**இயல்விளக்கம்:**

ஆய்வு அறிமுகம், ஆய்வுத்தலைப்பு, முன்னாய்வுகள், ஆய்வின் நோக்கம், ஆய்வின் மூலங்கள், ஆய்வு எல்லை, ஆய்வு அணுகுமுறைகள்,

ஆய்வேட்டின் அமைப்பு, இயல்விளக்கம் ஆகியவற்றை விளக்கிச் செல்கிறது.

'படைப்பாசிரியரும் படைப்புகளும்' என்னும் முதல் இயல், படைப்பாசிரியரின் பிறப்பு, கல்வி, பணி, படைப்புகள், பெற்ற விருதுகள், இல்லறம், படைப்புகளின் சுருக்கம் ஆகியவற்றைக் குறிப்பிட்டுச் செல்கிறது.

'சுகி.சிவம் படைப்புகளில் ஆன்மிகச் சிந்தனை' என்னும் இரண்டாம் இயலில், ஆன்மிகம் - விளக்கம், சமயம், பக்தி, பக்தியின் அளவு, ஆன்மா, உள்ளமே கோயில், கடவுள் கோட்பாடு, வழிபாடு, விதிக்கொள்கை, தத்துவம், சந்நியாசம், பிரம்மச்சரியம், உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல், பகவத்கீதை காட்டும் படிநிலைகள் ஆகியவை விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

'சுகி.சிவம் நூல்களில் இலக்கிய ஆளுமைத்திறன்' என்னும் மூன்றாம் இயலில், இலக்கண ஆளுமை, சங்க இலக்கியம், திருக்குறள், காப்பியம், பெரியபுராணம், கம்பராமாயணம், மகாபாரதம், பக்தி இலக்கியம், இக்கால இலக்கியம் ஆகியவற்றின் ஆளுமை குறித்து ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

'சுகி.சிவம் படைப்புகளில் பெண்ணியச் சிந்தனை' என்னும் நான்காம் இயல், பெண்ணியம் - விளக்கம், மிதவாதப் பெண்ணியம், தீவிரவாதப் பெண்ணியம், சமதர்மப் பெண்ணியம், ஆன்மிகப் பெண்ணியம், கிறித்துவப் பெண்ணியம், கலாச்சாரப் பெண்ணியம், மனைப்பெண்ணியம், தலைமைத்துவம் வேண்டாப் பெண்ணியம், கறுப்புப் பெண்ணியம், சூழல்

பெண்ணியம், பழமைவாதக் குடும்பப் பெண்ணியம் முதலான பெண்ணிய வகைகள், இவற்றின் அடிப்படையிலான படைப்பாசிரியரின் பெண்ணியப் பார்வை பற்றிய மதிப்பீடு ஆகியவற்றை விளக்கிச் செல்கிறது.

'சுகி.சிவம் படைப்புகளில் தன்னம்பிக்கைச் சிந்தனை' என்னும் ஐந்தாம் இயலில் தன்னம்பிக்கை விளக்கம், நம்பிக்கை, முயற்சி, உழைப்பு, சுயமதிப்பு, கவலையற்ற மனம், தியானம், மனக்கட்டுப்பாடு, மனஒருமைப்பாடு, திறமை, பொறுமை முதலான தன்னம்பிக்கைக் கூறுகள் ஆகியன விளக்கப்பட்டுள்ளன.

'சுகி.சிவம் படைப்புகளில் வெளிப்படும் நடைத்திறன்' என்னும் ஆறாம் இயலில், நடை, வருணனை நடை, எடுத்துரை நடை, சொற்பொருள் விளக்கநடை, ஆங்கிலக் கலப்பு நடை, வடசொற்கலப்பு நடை, வினாநடை, உணர்ச்சி வெளிப்பாட்டு நடை, தருக்க நடை, பேச்சு மொழி நடை, அங்கத நடை, இலக்கிய நடை முதலான நடை வகைகள், நடையியல் கூறுகளான திசைச்சொற்கள், கலைத்துறைச் சொற்கள், எதிரொலிச்சொற்கள், அடுக்குத்தொடர், சிலேடை அணி ஆகியவை விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

'சுகி.சிவம் படைப்புகளில் உளவியலும் மனிதநேயமும்' என்னும் ஏழாம் இயல், ஆளுமை – சொற்பொருள் விளக்கம், உளவியல் - விளக்கம், உளவியல் கூறுகள், உளவியல் வகைகள், உளவியல் திறனாய்வு பெறும் இடம், மனப்பகுப்பு, இச்சை, ஈகோ, மனச்சான்று, ஊக்கிகள், வழிபாடு பற்றிய உளவியல், காமம் பற்றிய உளவியல், உணவில் உளவியல், தாழ்வு மனப்பான்மை, மனச்சோர்வு, சபலம், தவம்,

தவறுகளைத் திருத்துதல், கட்டுப்பாடு, எண்ணம் முதலான உளவியல் சிந்தனைகள், மனிதம்- சொல் விளக்கம், மனித நேயம் - சொற்பொருள் விளக்கம், மனிதப்பிறவியின் நோக்கம், இல்லறத்தின் இலக்கணம், தியாகம், மனித நேயம் மலரும் முறை, மனித நேயக் கூறுகளான சொல், செயல் ஆகியவற்றை விளக்கிச் செல்கிறது.

அந்தந்த இயல்களில் கண்டறிந்த உண்மைகளும் முடிவுகளும் அவற்றின் இறுதியில் தொகுப்புரையாக வழங்கப்பெற்றுள்ளன. ஆய்வின் நிறைவினைக் கருத்தில் கொண்டு அவற்றையெல்லாம் தொகுத்து நிறைவுரையாக இறுதியில் வழங்கப்பெற்றுள்ளது.

படைப்பாசிரியரிடம் கண்ட பேட்டி பின்னிணைப்பு ஒன்றாகவும், படைப்பாசிரியரின் படைப்புகள் ஆண்டுவாரியாக வெளியிடப்பெற்ற பட்டியல் பின்னிணைப்பு இரண்டாகவும், இவ்வாய்வில் பயன்படுத்தப்பெற்ற நூல்கள் பற்றிய விபரங்கள் பின்னிணைப்பு மூன்றாகவும் தரப்பெற்றுள்ளன.

இந்நூல்களில் பல சென்னை, மதுரை போன்ற பெரு நகரங்களிலுள்ள புத்தகக் கடைகளில் விலை கொடுத்து வாங்கப்பெற்றன. நண்பர்களிடமிருந்து சில நூல்கள் திருப்பியளிக்கும் வகையில் பெறப்பெற்றன. ஆய்வேடுகள் மற்றும் பிற நூல்கள் சென்னைப் பல்கலைக்கழகப் பொது நூலகம், மதுரை காமராசர் பல்கலைக் கழகப் பொது நூலகம், காரைக்குடி அழகப்பா பல்கலைக் கழக நூலகம், சென்னை மறைமலையடிகள் நூலகம், காரைக்குடி அழகப்பா அரசு கலைக்கல்லூரி நூலகம் முதலியவற்றில் படிக்கக் குறிப்பெடுக்கக் கிடைத்தன என்பது நன்றியுணர்வோடு தெரிவிக்கலாகிறது.

# இயல் - 1
# படைப்பாசிரியரும் படைப்புகளும்

**முன்னுரை**

சங்க இலக்கியங்களில் பரிபாடலும், திருமுருகாற்றுப்படையும் பக்தியுணர்வை மிகுதியாக வெளிப்படுத்தும் வகையில் அமைந்துள்ளன. அவற்றின் பின்னர், பக்தியை அடிப்படையாகக் கொண்டு பல நூல்கள் எழுந்துள்ளன. தமிழ்நாட்டில் சைவசமயத்தைச் சார்ந்த நாயன்மார்களும், வைணவ சமயத்தைச் சார்ந்த ஆழ்வார்களும் தோன்றிப் பக்திப் பாடல்களைப் பாடி, ஊர் ஊராகச் சென்று தத்தம் சமயங்களைப் பரப்பி வந்தனர். நாயன்மார்களும், ஆழ்வார்களும் பாடிய பக்திப்பாடல்கள் மக்களிடையே புதிய உற்சாகத்தையும், எழுச்சியையும் தோற்றுவித்துப் பெரியதோர் யுகப்புரட்சி போலத் தமிழகமெங்கும் பக்தி வெள்ளம் பெருக்கெடுத்தோடியது. இருபதாம் நூற்றாண்டில் தன் பேச்சின் மூலம் ஆன்மிகத்தை வளர்த்தவர் திருமுருக கிருபானந்த வாரியார். அவரைத் தொடர்ந்து ஆன்மிகத்தோடு இலக்கியத்தையும் கலந்து தமிழ் மக்களுக்குக் கொடுத்தவர் குன்றக்குடி அடிகளார். அதே போன்று கடந்த முப்பது ஆண்டுகளாகச் சமயம், இலக்கியம், அரசியல், சுயமுன்னேற்றம் ஆகிய துறைகளைக் குறித்துத் தன் எண்ணங்களைப் பேச்சிலும் எழுத்திலும் வெளிப்படுத்தி வருபவர் சுகி.சிவம். படைப்பாசிரியர் சுகி.சிவத்தின் வரலாறு, படைப்புகள், பெற்ற விருதுகள், நூல் வடிவில் வெளிவந்துள்ள படைப்புகளின் சுருக்கம் ஆகியன இவ்வியலில் அறிமுகநிலையில் குறிப்பிடப்படுகிறது.

**படிப்பும் கல்வியும்:**

சென்னையைச் சேர்ந்த சுகி.சிவம், சுகிசுப்பிரமணியன்- கோமதி தம்பதியர்க்கு 27.03.1952 இல் மகனாகப் பிறந்தார். மைலாப்பூர் விவேகானந்தா கல்லூரி பொருளியல் துறையில் பி.ஏ.பட்டமும், சென்னை சட்டக் கல்லூரியில் பி.எல்.பட்டமும் பெற்றுள்ளார்.

**பணி:**

ஆனந்தவிகடன் தொடங்கிய ‘சக்தி விகடனு’க்கு ஆறுமாதம் வழிகாட்டும் பணியனைச் செய்துள்ளார். மனிதவளத்துறை, தொழில் மற்றும் வணிக நிறுவனங்களில் அவ்வப்போது பல்வேறு பயிற்சி வகுப்புகளை நடத்தி வருகிறார்.

**படைப்புகள்:**

கந்தர் அநுபூதி, கம்பன்-நேற்று-இன்று-நாளை, மனசே நீ ஒரு மந்திரச்சாவி, ஞானமலர்கள், நல்ல வண்ணம் வாழலாம், கனவு மெய்ப்படும், ஒரு தலம், ஒருபாடல், ஒரு நயம், மனிதனும் தெய்வமாகலாம், வெற்றி நிச்சயம், நல்லகுடும்பம் நமது இலட்சியம், வாழ்தல் ஒரு கலை, சுந்தர காண்டம், நினைப்பதும் நடப்பதும், உணவே உயிரே, சிந்தனை முத்துக்கள், படிக்க ஜெயிக்க, சொன்னார்கள் -பாகம்1, அர்த்தமுள்ள வாழ்வு, இந்த நாள் இனிய நாள், அச்சம் தவிர், சொன்னார்கள் -பாகம்-2, ஆன்மிகப் பூங்காவில் அதிசயத் துளசி, வாழ்ந்து பார்க்கலாம் வா, ஏமாறாதே ஏமாற்றாதே எனச் சமயம், இலக்கியம், தன்னம்பிக்கை- சுயமுன்னேற்றம் முதலான துறைகளில் இருபத்து நான்கு நூல்களைப் படைத்துள்ளார் படைப்பாசிரியர் சுகி.சிவம். மேலும்

இவருடைய படைப்புகள் குறுந்தகடுகளாகவும், ஒலி நாடாக்களாகவும் வெளிவந்துள்ளன.

**குறுந்தகடுகள்**

பகவத்கீதை-2 சிடிகள், சவாலே சமாளி, உன்னை அறிந்தால், மனம் ஒரு மந்திரச் சாவி, நல்ல குடும்பம் நல்ல பிள்ளை, திருச்செந்தூர்-தல வரலாறு, நல்வழி காட்டிய நால்வர், புத்தர் வாழ்வும் வாக்கும், பாரதியின் பயணங்கள் முடிவதில்லை, உணவே உயிரே, வெற்றி நிச்சயம் ஆகிய தலைப்புகளில் குறுந்தகடுகள் வெளிந்துள்ளன.

**ஒலிநாடாக்கள்:**

வெற்றி நிச்சயம் - பாகம் -1, வெற்றி நிச்சயம் - பாகம - 2, வெற்றி நிச்சயம் - பாகம் - 3, சிந்தனை முத்துக்கள், வள்ளுவர் வழியில், காலம் நல்ல காலம், காலத்தைப் போற்றுவோம், ஜெயித்துக்காட்டுவோம், நல்ல குடும்பம் நமது இலட்சியம், இனிய இல்லறம், வாழும் கலை (இரண்டு ஒலி நாடாக்கள்), நாளும் உயர்க (இரண்டு ஒலி நாடாக்கள்), வேதம்-விஞ்ஞானம் மதம்- மெஞ்ஞானம் (இரண்டு ஒலி நாடாக்கள்), பிள்ளையார்பட்டி பெருமை, விநாயகர் அகவல், மாருதி மஹிமை, நவராத்திரி நாயகி, சாமியே சரணம், அச்சம் தவிர் (இரண்டு ஒலிநாடாக்கள்) முதலான தலைப்புகளில் ஒலி நாடாக்களையும் வெளியிட்டுள்ளார்.

**விருதுகள்:**

சொல்லின் செல்வர், செந்தமிழ்ச் சித்தர், சொல்லரசர், சொல்வேந்தர், செந்தமிழ்த் தென்றல் போன்ற விருதுகளைப் பெற்றுள்ள

படைப்பாசிரியர் சுகி.சிவத்திரு, ரோட்டரி கிளப் ஆ.ஃ.ப் மெட்ராஸ் பல்லவா, 'For The Sake of Honour Award' என்ற விருதினை வழங்கிச் சிறப்பித்துள்ளது. மேலும் மதுரை தமிழிசைச் சங்கத்தின் முத்தமிழ்ப் பேரறிஞர் விருதும் பொற்கிழியும் பெற்றுள்ளார்.

**இல்லறம்**

இவரது மனைவி பெயர் இராஜேஸ்வரி. இவருக்கு அபிராமி, சுப்புலட்சுமி ஆகிய இரு மகள்கள் உள்ளனர்.

ஆய்வு மேற்கொண்டுள்ள சுகி.சிவத்தின் நூல்வடிவில் வெளிவந்துள்ள படைப்புகளின் சுருக்கம் ஓர் அறிமுகமாகச் சுட்டப்படுகிறது.

ஆய்விற்கு எடுத்துக் கொண்டுள்ள படைப்பாசிரியர் சுகி.சிவத்தின் நூல்கள் காலவாரியாக அறிமுகநிலையில் சுட்டப்படுகிறது.

**கந்தர் அநுபூதி**

இறை அனுபவத்தை, உண்மை உபதேசத்தை வார்த்தைகளில் வெளிப்படுத்திக் கந்தர் அநுபூதியைப் பாடினார் அருணகிரிநாதர். அதனைப் பாடல், பாடலாக உரை எழுதி விளக்கம் தராமல், அதன் சாரத்தை அறிந்து வெளிப்படுத்தியுள்ளார் படைப்பாசிரியர் சுகி.சிவம். பொருட்பற்று, மனைவி-மக்கள்பற்று, தன் மீதுள்ள பற்று என மூவகைப் பற்றுக்களையும் விட்டுவிட்டு, பற்றில்லாதவனான இறைவனைப் பற்றுவதே முத்திக்கு வழியாகும் என்று கந்தர் அநுபூதியை ஆய்வு செய்து கூறியுள்ளார். இத்தகைய இறைநிலையை விளக்குகிறது இந்நூல். இதனை நூலாசிரியரின்,

> “அநுபூதி என்றால் உடன் ஆதல் என்று பொருள். அதுவே ஆகுதல் என்று பொருள். திருப்புகழ் மொழிப்படி ‘நீ வேறு எனாது நான்வேறு எனாது’ இறைவனுடன் இரண்டறக் கலக்கும் இறைநிலை”[1]

என்னும் கருத்தின் மூலம் அறியலாம்.

**கம்பன் : நேற்று - இன்று – நாளை**

கம்பன் கடந்த காலத்தில் எப்படி மதிக்கப்பட்டான்; தற்போது எப்படி மதிக்கப்பெறுகிறான்; எதிர்கால இளைய தலைமுறை எப்படி மதிக்கும் என்னும் கோணத்தில் இந்நூல் அமைந்துள்ளது. இராமாயணம் பக்தி உலகில் இடம் பிடிக்கவும், தமிழின் தலையாய இலக்கியம் என்ற தகுதியைப் பெறவும் எத்தகைய இடர் இருந்தது என்பதையும், கம்பன் அரசியல், கம்பன் கருத்துக்கள், சமயம் இன்று எப்படி நடத்தப்பெறுகின்றன என்பதையும் இந்நூல் விவரித்துச் செல்கிறது. படித்தவர்கள் மட்டுமே புரிந்துகொண்ட ராமாயணத்தையும் கம்பனையும், பாமரனையும் ரசிக்கத்தூண்டும் வகையில் நடத்தப்பெற்ற கம்பன் விழாக்கள், காலம் செல்லச் செல்ல முறைகெட்டு, தறிகெட்டுப்போன நிலைகுறித்தும் குறிப்பிட்டுச் செல்கிறது.

> “அரை வேக்காட்டு அமைப்பாளர்கள் தங்களுக்கு வாய்ப்புக் கொடுப்பவருக்கு மட்டுமே தாங்கள் வாய்ப்பு கொடுப்பது என்கிற பண்டமாற்றுத் தத்துவத்தோடு புதிய அளவுகோல் கொண்டு கம்பன் விழாப் பேச்சாளர்களை முடிவு செய்த கொடுமையால் கம்பன் விழாக்கள் களையிழந்து கலையிழக்கத் தொடங்கின என்பது உண்மையிலும் உண்மை”[2]

என்னும் கருத்து ஈண்டு நினைவுகூரத்தக்கது.

**மனசே, நீ ஒரு மந்திரச் சாவி**

பெரிய மனம் உள்ளவன், பெரிய மனிதன் ஆகிறான். எண்ணங்கள்தான் வாழ்வை நிர்ணயிக்கின்றன. உயர வேண்டும், உயர வேண்டும் என்கிற எண்ணம் உள்ளவர்கள் உயர்வது நிச்சயம். இறைவனை வேண்டினால், பிரச்சனைகள் வராமல் காப்பாற்று என்று வேண்டாமல், பிரச்சனைகளைச் சந்திக்கும் பலத்தையும் ஜெயிக்கும் அறிவையும் அடையாளம் காட்டும்படி வேண்டுவதே சிறந்தது. மனதிற்குள் இருக்கும் நன்மையும் தீமையுமே ஒருவனின் வாழ்க்கையைத் தீர்மானிக்கின்றன.

**ஞானமலர்கள்**

கல்கி இதழில் தொடர் கட்டுரையாக எழுதப்பெற்றுப் பின்னர் நூலாக வெளியிடப்பட்டுள்ளது. கங்கையில் குளித்தால் சாபம் தீருமா? என்று கேட்டும், மற்றவர்களைக் குளிக்க விடாமல் மகாமகக் குளத்தில் குளித்துவிட்டால் புண்ணியமா? என்று கேட்டும் கங்கா ஸ்நானம் ஆச்சா? என்று கேட்டும் எல்லாம் நம்பிக்கையின் வெளிப்பாடு என்று கூறி, நம்பிக்கையை வலியுறுத்தும் வகையில் இந்நூல் அமைகிறது.

**நல்ல வண்ணம் வாழலாம்**

புலனைந்தினையும் வெற்றிபெறுவதே வீரம். தன்னம்பிக்கை ஒருவரை முன்னேற்றும். அன்புதான் பக்தியின் இலக்கணம். உள்ளமே உயரம்; அவரவர் உயர்வுக்கும் தாழ்வுக்கும் அவரவரே காரணம். உறுதியான உடலும், உயர்வான உள்ளமும் வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக்குகிற ஒன்று. நம்மை நாமே செய்து கொள்ளும் சுயவிமரிசனம் வெற்றியை

ஈட்டித்தரும். பணத்தை அறவழியில் ஈட்ட வேண்டும். இல்லற இன்பத்திலேயே முழுமையாக ஆழ்ந்து விடாமல். பற்றுகள் ஒழிந்த பக்குவநிலையும் பெற வேண்டும் என்பன போன்ற கருத்துகளை இந்நூல் விளக்கிச் செல்கிறது.

**கனவு மெய்ப்படும்**

பகவத்கீதை சமயத்தன்மைக்கும் அப்பாற்பட்டு, வாழ்க்கைக்கு எவ்வாறு பயன்படுகிறது என்பதை விளக்கிச் செல்கிறது இந்நூல், கீதையை மிக எளிமையாக எல்லோரும் புரிந்துகொள்ளும் வகையில் எழுதப்பட்டுள்ளது. செய்யும் வேலையை ஈடுபாட்டுடன் பொருந்திச் செய்தால், வாழ்க்கை உயரும். வாழ்க்கையில் வெற்றிகாண யோகம் பயில வேண்டும். ஒவ்வொருவர் செய்யும் செயலிலும் நிறைவு வேண்டும். செயலின் பயனில் ஆர்வம் செலுத்துவதைவிட, செயலில் ஆர்வம் செலுத்துவதை வலியுறுத்துகிறது கீதை. யோகம் செய்வோன் வாழ்க்கை முறையே யாகம் செய்யும் வழிமுறை ஆகும். வாழ்க்கைப் போராட்டத்தில் இறங்கும் அனைவரும் எழுந்து நில்! போராடு! என்பதை மந்திரமாகக் கொள்ள வேண்டும். வாழ்க்கை, உண்மையைத் தேடும் முயற்சியாக அமைய வேண்டும். அப்போதுதான் கனவு மெய்ப்படும் என்பதே இந்நூலின் அடிப்படைக்கருத்து.

**ஒருதலம், ஒருபாடல், ஒரு நயம்**

கலையழகு, சிலையழகு, தெய்வநிலை அழகு ஆகியவற்றைக் கொண்ட சைவ-வைணவத் திருக்கோயில்களின் தலவரலாறு,

பக்திப்பனுவல், தனிச்சிறப்பு என்ற அடிப்படையில், சைவத்தை ஞான முத்திக்கும், வைணவத்தை வாழ்வியலுக்கும் உரியதாக்குகிறது இந்நூல்.

**மனிதனும் தெய்வமாகலாம்**

உணர்ச்சி வயப்படும் மனிதன் விலங்காக இருக்கிறான். அவன் தன்னைக் கட்டுப்படுத்தினால் மனிதனாகிறான். தன்னை வென்றால் தெய்வம் ஆகிறான். இம்மூன்று நிலைகளையும் இலக்கிய இதிகாசங்களை மையப்படுத்தி அமைவது இந்நூலின் முதற்பகுதி, மனிதன் தெய்வமாக முடியும் என்ற கீதையின் கோட்பாட்டை முன்னிறுத்தி அமைவது இரண்டாவது பகுதியாகும். யோக சாத்திரங்களில் கூறப்படும் குண்டலினி துரியம் எய்தும் போது மனிதன் கடவுளாகிறான் என்பதை விஞ்ஞான பூர்வமாக விளக்குவது மூன்றாம் பகுதியாகும். இவ்வாறு மூன்று பகுதிகளாக இந்நூல் அமைகிறது.

**வெற்றி நிச்சயம்**

ஒவ்வொருவரும் தம்மைத் தாமே கேள்விகளைக் கேட்டால் வெற்றி நிச்சயம். வாழ்க்கையில் எதற்கும் பிறரைச் சார்ந்திருப்பது ஒருவகை ஊனம். சவால்களைச் சந்திக்கிறபொழுது, தப்பிச் செல்வதைவிட, எதிர்த்துப் போராடும் துணிவு ஒவ்வொருவரையும் வாழவைக்கும். மீண்டும் மீண்டும் முயற்சி செய்ய வேண்டும். பிரச்சனைகளைக் கையாளும்போது, படபடப்பைத் தவிர்த்தால், புதிய பிரச்சினைகள் ஏற்படாமல் தவிர்க்கலாம். காதும் கருத்தும் கூர்மையாய் இருந்தால் வெற்றி நிச்சயம். எப்போதும், எதிலும் நம்பிக்கையோடு இருந்தால் வெற்றி நிச்சயம். காலத்தின் அருமை தெரிந்தால் வெற்றி நிச்சயம். எதிர்ப்பில் வாழ்ந்தால் வெற்றி நிச்சயம்.

ஒவ்வொரு தடங்கலிலும் ஒளிந்திருக்கும் புதையலைத் தேடி எடுத்தால் வெற்றி நிச்சயம்.

**நல்ல குடும்பம் நமது இலட்சியம்**

கணவன் மனைவியிடமும், மனைவி கணவனிடமும் தோற்பதற்குத் தயாராக இருந்தால் குடும்பம் ஜெயிக்கும். வாழ்க்கைப் பாதையில் பாதுகாப்பாகச் செல்ல வேண்டுமென்றால், ஒருவர் இயங்க மற்றவர் இடம்கொடுக்கப் பழகிக் கொண்டால் விபத்துக்கள் நேராது. பிறர் மூக்கை நுழைக்க முடியாதபடி கணவன்-மனைவி உறவை வைத்துக்கொண்டால் அந்தக் குடும்பம் ஆனந்தமான குடும்பம். அடுத்தவர் மகிழ்வில் தன் மகிழ்ச்சியும் அடங்கி இருக்கிறது என்று வாழ்வதே இனிய இல்லறமாகும். குடும்பத்தின் பலம் அதன் ஒற்றுமையே. கணவனுக்காகப் பல துன்பங்களையும் ஏற்கத் தயாராக மனைவி இருப்பதும், மனைவிக்காகத் தன்னை இழப்பதற்கும் கணவன் தயாராக இருப்பதும் உண்மையான நல்ல குடும்பத்தின் அடையாளமாகும். இத்தகைய குடும்பம் நல்ல குடும்பமாகவும் இலட்சியக் குடும்பமாகவும் அமையும். இந்நூலில் அமையும்.

> "பொறுப்புடன் குடும்பம் நடத்த விரும்புகிற எவருக்கும் இந்நூல் ஒரு வழிகாட்டியாக இருக்க முடியும். குடும்ப உறவுகளை உணர்வுப் பூர்வமாக விளங்கிக் கொள்ள, உறவுகளைச் சீரமைக்க, மகிழ்வாக இல்லறம் நடத்த இந்நூல் நிறைய உதவி செய்ய முடியும்"[3]

என்னும் கூற்று மிகவும் பொருத்தமுடையதாகவே தோன்றுகிறது.

**வாழ்தல் ஒரு கலை**

படைப்பாசிரியரின் பேச்சு, முழுமையாக ஒலிப்பதிவு செய்யப்பட்டுப் பின்னர் நூலாக வெளிவந்துள்ளது- வாழ்தல் ஒரு கலை. மனித ஜீவராசிகளை, பிழைப்பவர், இருப்பவர், வாழ்பவர் என மூவகையாகப் பிரித்துள்ளார். அன்றாடம் வேலை செய்து குடும்பம் நடத்துவோர் பிழைப்பு நிலையில் உள்ளவர்கள்; ஏதாவது செய்து கொண்டு உயிரோடிருந்து கொண்டிருப்பவர்கள் இருப்பவர்கள்; நேற்று இருந்ததைவிட இன்று ஒரு படி உயர்தல் என்பது வாழும் நிலையாகும். மனம் செம்மையுற்று ஆன்மிகப் படியில் மேலேற வேண்டுமென்றால் மனிதன் முதலில் வாழும் கலையைக் கற்றுக்கொள்ளவேண்டும். இன்பம், துன்பம் எதுவந்தாலும் அதனை ஏற்றுக்கொள்கிறபோது நிகழ்காலத்தில் வாழ்பவராகலாம்.

> "நிகழ்காலத்தில் உணர்வுடனும் உயிர்த்துடிப்புடனும்
> பூரணமாக லயத்திருத்தலே உண்மையான வாழ்தல்"[4]

என்னும் கருத்து வாழ்தலைக் கலையாகத் தெளிவுபடுத்துகிறது.

**சுந்தரகாண்டம்**

இராமாயணத்தை இலக்கியமாக அனுபவிக்க, இதயம் வேண்டும். அரசியல் வரலாறாக அனுபவிக்க, அறிவு வேண்டும். ஆன்மிக ஞான அனுபவமாக அனுபவிக்க ஆத்மாவும் ஆன்மிக எண்ணமும் தேவை. இராமாயணத்தை இம்மூன்று நிலையிலும் அனுபவித்த படைப்பாசிரியர் சுகி.சிவம், நம்பிக்கையை, வாழமுடியும் என்ற நம்பிக்கையை மக்கள் மத்தியில் விதைத்த சுந்தரகாண்டம் குறித்துச் சிந்தித்ததன் விளைவே இந்நூல். சீதையைக் காணப்புறப்பட்ட அனுமன், அவளைக் கண்டு அவள்

அடைந்துள்ள துயரத்தை அறிந்து அவளுக்குத் தேறுதல் கூறி இராமனிடம் வந்து அவளிருக்கும் நிலையைக் கூறுகிறான். அதன் பிறகு இராமன் போரை அறிவித்து இராவணனை வெற்றி கண்டு, சீதையை மீட்டு, நாடுதிரும்பி அனைவரின் வாழ்த்துக்களோடு பட்டாபிஷேகம் செய்து கொண்டதைக் கூறுவது சுந்தரகாண்டம். இனி இராமனைச் சந்திக்கமுடியுமோ, முடியாதோ என்றெண்ணிக் கலங்கிய சீதை, தன்னைக் காணவந்த அனுமனிடம் தன் துயரங்களைக் கூறி ஒருமாதத்திற்கு மேல் இனி உயிரோடு இருக்க முடியாது என்று கெடு விதித்துக் கூறுகிறாள். இவை அனைத்தையும் மிகப் பக்குவமாக இராமனிடம் அனுமன் தெரிவித்த பிறகு சீதை துயரத்தை வெல்லுகிறாள்; நல்வாழ்வு பெறுகிறாள். வெல்ல முடியாத துன்பம் என்று எதுவுமில்லை. நமக்கும் மறுவாழ்வு உண்டு என்கிற நம்பிக்கை சீதைக்கு ஏற்பட்டது போல, இதனைப் படிக்கிற அனைவருக்கும் ஏற்படுத்துவது சுந்தர காண்டம்.

**நினைப்பதும் நடப்பதும்**

விழிப்படைந்தோர், பிறர் மனத்தில் இருக்கும் எண்ணங்களை அவர்கள் சொல்லாமலேயே உணருகிறார்கள்; இதுவே உண்மையான பிரசாதம். நாம் செய்வதைத் தான் பிறர் நமக்குத் திருப்பிச் செய்வர். நல்லதே செய்வோம், நல்லதே பெறுவோம். சூழல் காரணமாக மனிதனுக்கு நல்ல எண்ணங்களும், தீய எண்ணங்களும் மாறிமாறித் தோன்றும். என்ன வேண்டும் என்ற கேள்வியோடு தன் கண்முன் தோன்றும் இறைவனிடம், நீதான் வேண்டும்; உன்னைவிட வேறு ஒன்று தேவையில்லை என்று சொல்வதே பிரார்த்தனை, மதப்போலிகள், ஆத்திக வேடதாரிகள், பிறமதம்

மீது பகை பாராட்டும் மானுட விரோதிகள் எனப் பல நிலைகளில் இருக்கும் மனிதா்களையும் நெறிப்படுத்தும் கருத்துக்களைப் பேசுகிறது இந்நூல்.

**உணவே உயிரே**

உணவின் இன்றியமையாமை குறித்தும், ‘உணவே மருந்து; மருந்தே உணவு’ என்பதையும், எந்தெந்த உணவில் என்ன விதமான சத்துக்கள் நிறைந்துள்ளன என்பதையும் சிறப்பாக விளக்கிச் செல்கிறது இந்நூல். எலுமிச்சை, இஞ்சி, தேன், வெல்லம், புளி, முட்டைக்கோஸ், பீன்ஸ், புதினா, வாழை, கீரைகள், வெற்றிலை, பூசணி, முள்ளங்கி என அனைத்து வகையான காய்கனிவகைகளையும், அவற்றின் அபரிமிதமான சிறப்புகளையும், இவற்றை உணவில் சேர்த்து உடம்பை வளமாக வைத்துக்கொள்ள அனைவருக்கும் உதவும் வகையில் இந்நூல் படைக்கப்பட்டுள்ளது.

**சிந்தனை முத்துக்கள்**

கடவுள் கருனை இருந்தால், என்னால் எது முடியவேண்டுமோ, அதனை என்னால் முடிக்க முடியும் என்ற சரியான வாழ்க்கைப்பாதையை வாழ்க்கை, தன்னம்பிக்கை, எண்ணங்கள், அச்சம், வீரம், கல்வி, காமம், மதம், கா்ம யோகம், ஞானம், துறவு, தா்மம், பக்தி, தலைமைப்பண்பு முதலிய தலைப்புகளில் விளக்கிச் செல்கிறது இந்நூல்.

**படிக்க ஜெயிக்க**

மனிதன் மட்டும் சிந்திக்க, சிந்தித்ததை எழுதி வைக்க விரும்புகிறான். பதிவு செய்ததைப் படித்து மறுபடியும் சிந்தித்து மனித

குலம் வேகமாக வளர்ந்து வருகிறது. அறிவை, அனுபவத்தை எழுதி வைத்துப் பதிவு செய்வதால் மனித குலம் விட்ட இடத்திலிருந்து தொடர முடிகிறது. இன்னும் மேலே முன்னேற வேண்டுமானால் படிக்க வேண்டும். படிக்க வேண்டும் என்று ஆசையாகப் படிக்க வேண்டும். படிப்பதில் ஆர்வம் வேண்டும்; அப்படிப் படித்தால் வெற்றி பெறலாம் என்பதற்கு ஜவஹர்லால் நேரு, மொரார்ஜி தேசாய், ஆபிரகாம்லிங்கன், பெரியார்தாசன் முதலானோரைச் சான்றுகளாகக் காட்டி விளக்கியுள்ளார்.

**சொன்னார்கள் பாகம்-1**

அரசியல், ஆன்மிகம், இலக்கியம், வாழ்வை வளமாக்கும் வலுவான எண்ணங்கள், நகைச்சுவைத் துணுக்குகள் என்று பல நூறு அறிஞர்களின் சிந்தனைச் செல்வங்கள், பல மேடைகளில் படைப்பாசிரியர் கூறிய கருத்துக்கள் ஆகியவற்றின் தொகுப்பாக இந்நூல் அமைகிறது. பகவான் ராமகிருஷ்ணர், மகாத்மா காந்தி, புத்தர், தந்தை பெரியார், அறிஞர் அண்ணா, வாரியார், காஞ்சி மகா பெரியவர், ஓஷோ போன்ற பெரியோர்களின் சிந்தனைகள் நூல் முழுவதும் விரவிக் கிடக்கின்றன.

**அர்த்தமுள்ள வாழ்வு**

சமயத்தைச் சந்தை வியாபாரமாக்கும் சாமி வியாபரிகளைச் சகிக்க முடியாமலும், சாராய வியாபாரத்தில் சேர்த்த லட்சங்களில் சில நூறுகளைக் கோவிலில் வீசும் சமூக விரோதிகளைப் பெரிய மனிதனாக்கும் கோவில் குழுக்களையும், அவர்களைக் கடவுள் பணியாளர்களாகக் கருதுகிற மூட மக்களையும் கண்டித்து நெறிப்படுத்துகிறது இந்நூல்.

பிறருக்காக வாழும்போதுதான் வாழ்க்கை அர்த்தம் உடையதாகிறது. எதிர்பார்ப்பற்ற அன்பே உலகின் இணைப்புச் சரடாகும். இறைவனைப் பூசிக்கும் பூசையில் பூ முக்கியமல்ல; பூசிப்பவனின் இதயப்பூ தான் முக்கியம். வாசனையும் ஜன்னலையும் மாற்றுவது வாஸ்து சாஸ்திரம் அல்ல; வாழ்லையும் எண்ணங்களையும் மாற்ற வேண்டும். ஞானம், தவம், சீலம், நிறை நலமிக்க குருமார்கள், பிறந்த சிசுக்களைத் தீண்டி, செவிவழி உரக்கச் சொல்லி, உடம்பும் உயிரும் சேர்ந்த கூட்டணிக்குப் பெயர் வைக்கும் பாரத மரபைப் பாதுகாக்கவேண்டும். துறவு இல்லாத துறவிகளே இந்து மதத்தின் இன்றைய அவமானச் சின்னம். பிறரை வாழ்த்த வாழ்த்த நாமும் வாழமுடியும். இதைப் புரிந்து கொண்டாவது பிறரை மனமார வாழ்த்தவேண்டும். இத்தகைய வாழ்க்கையே அர்த்தமுள்ள வாழ்வாகும்.

**இந்தநாள் இனிய நாள்**

இலக்கியம். விஞ்ஞானம், தேசப் பிரச்சினைகள், நுட்பமான தகவல்கள், குடும்ப ஆக்கத்திற்கான கருத்துக்கள், தனிமனித முன்னேற்றச் செய்திகள், தன்னம்பிக்கைச் செய்திகள் எனப்பல தலைப்புகளில் சன் தொலைக்காட்சியில் வாரந்தோறும் சனி, ஞாயிறு ஆகிய இருநாட்கள் பேசிய பேச்சுகளின் தொகுப்பாக இந்நூல் மலர்ந்திருக்கிறது. உயிர்களிடத்து அன்பு செய்தல் வேண்டும்; உணவைச் சோதித்துப்பிறகு உண்ணுதல் வேண்டும். எந்த ஒரு விஷயமாக இருந்தாலும் நன்கு அனுபவித்து, ரசித்து, ரசனை உணர்வை வெளிப்படுத்த வேண்டும். மெல்லிய கருத்து சார்ந்த இனிய ஒலியே, மனித

நாகரிகத்தின் அடையாளம். ஒலியைக் குறைத்தால் அனைவருக்கும் அம்முயற்சி இனிமையாக இருக்கும். கருத்தரிப்தெல்லாம் பிள்ளையே இல்லை; கருத்தறிந்து நடப்பதுதான் பிள்ளை என்ற தெளிவைப் பெற்றால் வாழ்வில் உயரலாம். மனிதர் அனைவரும் ஒரே இனம் என்னும் அடிப்படையில், மனிதரை மனிதர் நேசித்தல் மனிதநேயம் ஆகும். மக்களை ஏமாற்றுகிறவர்களை மக்களுக்குப் பிடிக்கிற அளவு நாட்டை உருவாக்கும் எண்ணமுடைய நேர்மையாளர்களை மக்கள் ஏற்க மறுக்கிறார்கள். திறமைகளை அங்கீகரிக்க வேண்டும். உழைக்க வேண்டும். உற்சாகமாக உழைக்க வேண்டும். இப்படி நடந்து கொள்ளும் நாட்களெல்லாம் இனிய நாட்களாக அமையும்.

**அச்சம் தவிர்**

திருவல்லக்கேணி பாரதி இல்லத்தில் நடைபெறும் பாரதி விழாவில் படைப்பாசிரியர் நிகழ்த்திய சொற்பொழிவே இந்நூல். மனிதனைப் பாடாய்ப்படுத்தும் பயம் எப்படி உருவாகிறது? தனக்குக் கிடைத்துக் கொண்டிருக்கும் ஒன்று பறிபோய்விடுமோ என்னும் நினைப்புத்தான் பயத்திற்கான மூலகாரணம். இப்பயத்திலிருந்து மனிதன் விடுபடவேண்டும். பிரச்சினைகளைக் கண்டு ஒதுங்கிவிடாமல் துணிவுடன் எதிர்கொண்டால், மனம் பலமடையும். மனம் முதிர்ச்சி அடைந்தால் பயத்தைக் கடந்து விடுபடலாம். மரணம் இல்லை; மரணத்தைப் பற்றிய பயம்தான் இருக்கிறது. மரணபயத்தை வென்றுவிட்டால் மரணத்தை வென்று விடலாம். அஞ்சவேண்டியவற்றிற்கு அஞ்சி, தேவையற்ற அச்சங்களிலிருந்து நீங்கி நடைமுறை வாழ்வை அனுசரித்துச் செல்ல வேண்டும்.

**சொன்னார்கள். சொன்னார்கள் பாகம்-2**

இலக்கியம், சமூகம், ஆன்மிகம், அரசியல் எனப் பல தலைப்புகளிலும் பல்வேறு அறிஞர்கள் கூறிய கருத்துகளின் தொகுப்பே இந்நூல். குறிப்பாக ஓஷோ, ஜக்கி வாசுதேவ், இறையன்பு போன்ற சிந்தனையாளர்களின் கருத்து சமூகம் முழுமைக்கும் பரவ வேண்டும் என்ற நோக்கிலும், இளம் பேச்சாளர்கள் வெற்றிகரமாக முன்னேற, மேடைப்பேச்சில் நல்ல செய்திகளைப் பகிர்ந்திட உதவும் நோக்கிலும் இந்நாலின் கருத்துகள் பயன்படும் வகையில் அமைந்துள்ளன. படித்துச் சிரித்து மகிழ்வதற்கும். சிந்தித்து உயர்வதற்கும் உதவும் வகையில் இந்நூல் அமைகிறது.

**ஆன்மிகப் பூங்காவில் அதிசயத்துளசி**

இந்து மதத்தின் மாண்பையும், தத்துவங்களையும், தாத்பரியங்களையும், புராண இதிகாசக் கதைகள் மூலமாக அடுத்த தலைமுறைக்குச் சொல்லிக் கொடுக்கும் பெரும் பணி ஆற்றுகிறவர்கள் என்பதையும், கோதை நாச்சியாராகிய ஆண்டாளே துளசியின் மறுவடிவம் என்பதையும் எல்லாத் தெய்வங்களின் சிகையிலும் முருகன் இருக்கிறார் என்பதையும் பெண்ணுக்குச் சமய உலகில் உள்ள இடம், அவர்களின் தனிப்பெருமை ஆகியன குறித்தும், காஞ்சி மகாபெரியவர் சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள், தவத்திரு குன்றக்குடி அடிகளார் சுவாமிகள் ஆகிய இரு ஞானிகளின் ஆன்மிகப் பணிகள் குறித்தும், பக்தி வியாபாரம் அல்ல என்பது குறித்தும், துன்பத்திலிருந்து விடுதலை

பெறுவதற்கான வழிமுறைகள் குறித்தும் விளக்கிச்செல்லும் பக்தி மணம் கமழும் கட்டுரைகளின் தொகுப்பாக இந்நூல் அமைகிறது.

**வாழ்ந்து பார்க்கலாம் வா!**

வாழ்க்கையில் துன்பங்களைக் கடந்து, சவால்களைச் சந்தித்து, உறுதியோடு வாழத் துடிக்கும் ஒவ்வொருவருடைய வெற்றிக்கும் இந்நூல் சமர்ப்பணம் செய்யப்பட்டிருக்கிறது. எல்லாம் முடிந்தது என்று முடிந்து போகாமல், முடியும் என்று முயற்சித்தால் வானம் வசப்படும். அஃறிணைப் பொருட்களையும் உயர்திணை உணர்வுடன் கவுரவித்தலே பண்பாடான வாழ்க்கை முறையாகும். பிறரிடமிருந்து கௌரவத்தை வென்றெடுப்பது தான் மிகச் சரியான வாழ்க்கை. யோசித்துச் செயலில் இறங்கவேண்டும். இப்படிப்பட்ட ஆற்றல் இருந்தால் தான் வாழ்க்கை வசப்படும். வெற்றி கிட்டும். வலது கை, இடதுகை மட்டும் போதாது. முகத்தில் புன்னகையும் அகத்தில் நம்பிக்கையும் அவசியம் இருந்தாக வேண்டும். பிறருக்காக வாழும்போது மூச்சினில் ஒரு சக்தி பிறக்கும். பிரச்சினைகளுக்கு உள்ளே இருந்து சிந்திக்காமல், பிரச்சினைக்கு வெளியே இருந்து சிந்தித்தால் புதிய புதிய தீர்வுகளைப் பெறமுடியும் என்பதால் வாழ்ந்து பார்க்கலாம் வாருங்கள்.

**ஏமாறாதே, ஏமாற்றாதே…!**

மக்களை நெறிப்படுத்திச் சரியான பாதையில் செலுத்துவதே சமயம். ஆனால் இன்று போலிகளின் கையில் சமயம் கைநழுவிப் போய்விட்டது. மக்களின் சுயநலம், மூடநம்பிக்கை, அர்த்தமற்ற பயம் ஆகியவை சமய வியாபாரிகளின் மூலதனங்கள். மக்களை

அறியாமையினின்று, அறிவுக்குப் பதவி உயர்த்தும் உண்மையான சமயவாதிகள் மக்களைச் சென்றடைய முடியவில்லை. இது போலிகளின் பொற்காலமாகும். சமயத்தின் பெயரால் தனிமனித ஒழுக்கமற்றவர்கள், பொய் மனம் உடையவர்கள், கொழுத்த முதலாளிகள், பிறைச்சுரண்டும் பேய்க்குணம் உடையவர்கள், அபலைகளைப் பாழாக்கிடும் மோகத்தில் அமோக விருப்பம் உள்ளவர்கள் எனப் பலர் இன்று சாமியார்களாக நாட்டை வலம் வருகிறார்கள். இத்தகைய போலிகளை, சமூகத்தை ஏமாற்றி மதத்தைப் பிழைபடப் போதித்து மக்களை ஞான சூன்யங்களாக ஆக்கும் போலிச் சாமியார்களை எதிர்த்துக் குரல் கொடுக்கிறது இந்நூல். பிறரை ஜெயிக்க நினைக்கும் எவனும் உண்மை ஞானியல்ல; ஞானியின் போர்வையில் உலா வரும் அஞ்ஞானி. பொருளைத் துறப்பது துறவு அல்ல; பொருள் மீதுள்ள பற்றைத் துறப்பதே துறவு. அவரே உண்மையான ஞானி. அனுபவமில்லாத சாமியார்களின் சொற்பொழிவாளர்களின் சொல், சொல் அல்ல; அவை ஞானப் பதர்களாகும். இவற்றை அறிந்து வாழப் பழகுங்கள்.

**தொகுப்புரை:**

படைப்பாசிரியரின் பிறப்பு, கல்வி, பணி, படைப்புகள் பற்றிய செய்திகள் ஆய்வில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

ஆய்விற்கு எடுத்துக்கொண்டுள்ள படைப்பாசிரியருடைய படைப்புகளின் சுருக்கம், அறிமுகநிலையில் காலவாரியாக ஆய்வில் சுட்டப்பட்டுள்ளது.

## சான்றெண் விளக்கம்


1. சுகி.சிவம், கந்தர் அநுபூதி, ப.4.
2. சுகி.சிவம், கம்பன்: நேற்று - இன்று - நாளை, பக். 41-42.
3. சுகி.சிவம், நல்ல குடும்பம் நமது இலட்சியம், முன்னுரை, பக்.5-6.
4. சுகி.சிவம், வாழ்தல் - ஒரு கலை, ப.140.

# இயல் - 2

## சுகி சிவம் படைப்புகளில் ஆன்மிகச் சிந்தனை

**முன்னுரை**

மனிதர்கள் தொடக்க காலத்தில் இறை வழிபாடு பற்றி அறியாமல் வாழ்ந்து வந்தனர். உணவுத் தேடல், வேட்டையாடல் போன்ற சூழல்களில் ஏற்பட்ட குற்ற உணர்வு, அச்ச உணர்வு காரணமாக இயற்கையான சூரியன், சந்திரன், மரம் மற்றும் விலங்குகளை வழிபடத் தொடங்கினர். பின்னர் அவர்கள் இறந்த மூதாதையரை வணங்கினர். காலவோட்டத்தில் இறைவழிபாடு பலவாறு வளர்ச்சியடைந்துள்ளது. மனித சமுதாயம் வையத்துள் வாழ்வாங்கு வாழ்வதற்காகப் பல்வேறு சிந்தனைகளைத் தந்த பெருமை இந்திய பூமிக்கு உண்டு. இந்திய மண்ணில் முளைத்த ஆன்மிகச் சிந்தனைகள் மனிதனை இறைநிலைக்கு அழைத்துச் செல்லும் பாங்குடையன. ஆன்மிகச் சிந்தனையாளரான படைப்பாசிரியர் சுகி. சிவம் படைப்புகளில் இடம்பெறும் ஆன்மிகச் சிந்தனைகளைக் குறித்து இவ்வியல் ஆராய்கிறது.

**ஆன்மிகம் - விளக்கம்**

ஆன்மிகம் என்பது ஆன்மாவைத் தூய்மை செய்து, பக்குவப்படுத்தும் நடவடிக்கையாகும்.

"'தன்னை அறிதலும், தன்னிடமுள்ள அறியாமையைப் போக்குதலுமே ஆன்மிகம்' என்கிறார் இரமணர்"[1]

என்னும் கருத்தின் வாயிலாக, தன்னுடைய அறியாமை இருளை நீக்குவதோடு, தன்னையும் அறிந்து கொள்ளப் பயன்படும் விளக்கே ஆன்மிகம் என்பதை அறியவியலுகிறது.

"ஆன்மிகம் அல்லது சமயம் எதையும் ஒதுக்கீடு செய்யாமல்,
வாழ்வின் சகல பரிமாணங்களையும் முழுமையாக
ஏற்றுக் கொள்கிறது"[2]

என்னும் கூற்றும் இங்கு நினைவுகூரத்தக்கது. கடவுளைத் தரிசனம் செய்து புண்ணியம் சேர்ப்பதே ஆன்மிகமெனக் கருதப்படுகிறது. எனவே, தன்னை அறிந்து, தன் அறியாமையைப் போக்கிக் கடவுளைத் தரிசனம் செய்வதை ஆன்மிகம் என்று கொள்வதே பொருத்தமுடையதாகிறது.

படைப்பாசிரியர் சுகி. சிவம் தம் படைப்புகளில், ஆன்மிகம் குறித்துச் சில கருத்துக்களைப் பதிவு செய்துள்ளார். சான்றாக,

"மதவாதிக்கு மதம், சமயம் முக்கியம். அதன் கட்டமைப்பு,
சடங்குகள், அடையாளங்கள், வேத புத்தகங்கள் ஆகியவை
மிக முக்கியம். சுயசிந்தனை மதவாதிக்குப் பகை. ஆனால்
ஆன்மிகவாதி மதம் கடந்தும் இருக்க முடியும். விதவிதமான
உடம்புகளுக்குள் ஒரே ஆத்மா விளங்குவது போல், விதவிதமான
மதங்களுக்குள் ஒரே கடவுள் இயங்குகிறார் என்று
உணர்தலே ஆன்மிகம்"[3]

என்னும் கருத்தைச் சுட்டமுடிகிறது. மேலும், "எல்லாவற்றிலும் ஒருமையைக் காண்பவனே ஆன்மிகவாதி. வேறு வேறாகச் சிந்திப்பவன்

மதவாதி"[4] என்னும் கூற்றில், ஆன்மிகவாதிக்கும் மதவாதிக்கும் இடையே உலவும் வேறுபாடு தெற்றெனப் பளிச்சிடுகிறது.

"சமயம் என்று வரும்பொழுது சென்ற நூற்றாண்டில் தமிழ்ச் சமய

உலகை வெகுவாகப் பாதித்த இரு நபர்கள், காஞ்சதிமகா

சுவாமிகள் மற்றும் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள்.

இவர்கள் இருவரது மேன்மையையும், பூரணமாக

உணர்ந்து உருவானதே என் ஆன்மிக அலைவரிசை,

என் ஆன்மிகத்தின் பிதாவும், மாதாவும் அவர்களே"[5]

என்னும் கருத்து, படைப்பாசிரியருக்குள்ளிருந்த ஆன்மிக ஈடுபாட்டை நெறிப்படுத்திச் செம்மைப்பட வைத்தவர்கள் யாரென்பதை அறியமுடிகிறது. இக்கருத்தைப் படைப்பாசிரியரின் நேர்காணலும் உறுதிப்படுத்துகிறது. (பின்னிணைப்பு எண். 1)

**சமயம்**

'சமை' என்ற வேர்ச்சொல்லிலிருந்து பிறந்தது சமயம். இதற்குப் பக்குவப்படுத்துவது என்பது பொருள்.

"சமையம் (சமயம்) என்னும் சொல் சமைப்பது என்னும்

பொருளுடையது. மனிதனின் வாழ்க்கையை நல்வழிகளில் ஈடுபடச்

செய்வது, பண்படுத்தி, பக்குவமாக்கிச் சமைப்பது சமயம் எனப்படும்"[6]

என்பர் கொ. ஆறுமுகம். இதன் மூலம், மனம் அங்கும் இங்கும் அலையாது, இறைவனை மட்டும் ஒன்றிப் பற்றிக் கொள்வது சமயம் என்பது புலனாகிறது.

மனிதன் சமுதாயமாக வாழத் தொடங்கியதிலிருந்து, மனித வாழ்வோடு சமயம் பின்னிப் பிணைந்துள்ளது. சமுதாயம், மனித வாழ்க்கை முறையைச் செம்மைப்படுத்திடப் பயன்படும் நெறியாகவே சமயத்தைக் கருதியது. இதனை அரண்செய்யும் வகையில்,

> "சமயம் என்பது வளர்ந்த ஆன்மா தன்னுடைய வளர்ச்சியைப் பாதுகாத்துக் கொள்ளவும், மேலும் வளரவும், முழுமைப்படுத்திக் கொள்ளவும் துணையாகக் கொண்ட ஒரு வாழ்க்கை முறை; தன்னுணர்வினாலேயே விதித்துக் கொண்ட கட்டுப்பாடு"[7]

என்னும் கருத்து அமைகிறது, மேலும்,

> "சமயம் என்ற சொல்லுக்கு, நெறி, கொள்கைகள் என்னும் சில பொருள்கள் உள்ளன. ஒருவர் தம் வாழ்க்கையை நெறிப்பட நடத்துவதற்கு ஏற்பச் சில நற்கொள்கைகளை வகுத்துக்கொள்ள வேண்டும். இந்த நற்கொள்கையின் கூட்டமே சமயம் என்று வழங்கப்பெறுகின்றது"[8]

என்னும் கூற்றும் இங்கு இணைத்து நோக்கத்தக்கது.

'சமயம் என்பது மதம் என்றும் வழங்கும். மதம் என்பது மதர்த்தல், மிகுதல், வெறி எனப் பொருளான மிகுதியான பற்றுக்குரிய கொள்கை,

கோட்பாடு சமயம் எனப் பொருள் தரும்' என்கிறார் பா.இறையரசன். இக்கருத்தாக்கங்களின் மூலம், பண்படுத்திப் பக்குவப்படுத்தப்பட்ட வாழ்க்கை முறையைச் சமயம் என்றே கூறலாம்.

மனித மனத்தைப் பக்குவப்படுத்துவதும், மனிதனைத் தெய்வ நிலைக்கு உயர்த்துவதும் சமயம் ஆகும். சமயம், சடங்கு முறையோ அல்லது வழிபாட்டு விதிகள் அடங்கிய அமைப்போ அன்று; அது வாழ்க்கைக்கு வழிகாட்டும் நெறிகளைக் கொண்டதாகும். உயிர்த்தொகுதிகளுள் மனிதனுக்கு மட்டுமே சமயம் என்ற பண்பாடு உண்டு. சமயம் மனிதனுக்கு ஒரு வாழ்வியல் கலை; அது வாழ்வாங்கு வாழக் கற்றுத்தருகின்றது.

> "கொண்டு வந்ததும் களிமண். வெளியே எறிந்ததும் களிமண்.
> பிடித்து வைத்தது மட்டும் எப்படிப் பிள்ளையார் ஆனது? களிமண்
> எப்படிக் கடவுள் ஆனது? பதவி உயர்வு எப்படி வந்தது? பாவனை,
> பாவனை.. பாவனைதான் காரணம். களிமண் கடவுளாகலாம்
> என்றால் ஆசாமி சாமியாக முடியாதா? ஏன் முடியாது? அப்படி
> மனிதனைச் சமைக்கும் முயற்சி தான் சமயம்"[9]

என்று, சமயம் என்னும் சொல்லுக்குப் படைப்பாசிரியர் பொருளுரைக்கும் திறன் ஈண்டு குறிப்பாகச் சுட்டத்தக்கது. மேலும்,

> "சமையலுக்கும் சமயத்துக்கும் என்ன சம்பந்தம் என்று யாராவது
> சந்தேகப்பட்டால் இன்றோடு அந்த எண்ணத்தை விட வேண்டும்.

உணவைச் சமைப்பது போல் உணர்வைச் சமைப்பது சமயம்.

பக்குவமற்ற விஷயங்களைப் பக்குவப்படுத்துவது என்பது

இரண்டுக்கும் பொதுவான பொருள்”[10]

என்று படைப்பாசிரியர் தரும் விளக்கமும் இணைத்து நோக்கற்குரியது. ஒவ்வொருவரின் உள்ளத்தில் உறைந்து கிடக்கும் இச்சமயச் சிந்தனை, பக்தியை அடிப்படையாகக் கொண்டதெனலாம்.

**பக்தி**

பத்திமை கொண்ட வாழ்க்கைமுறை தூயது; இனிமை நலம் மிக்கது; சழக்குகளைக் கடந்து வழக்குகளை வென்றது; உண்மையான பத்திமை வாழ்க்கையில் விளங்கினால் சிக்கல்கள் இல்லை; பகையில்லை; போரில்லை. பண்பட்ட நிலத்தில் விளைச்சல் பெருகி உயர்வதைப் போலப் பத்திமைச் சமுதாயத்தில் அன்பு பெருகும். அருள் வளரும்; எங்கும் சமநிலை காட்சியளிக்கும்.

“ஒல்லையாறி யுள்ளமொன்றிக் கள்ளமொழிந் துவெய்ய

சொல்லையாறித் தூய்மைசெய்து காமவினை யகற்றி

நல்லவாறே யுன்றனாமை நாவினவன் றேத்த

வல்லவாறே வந்துநல்காய் வலிவலமே யவளே”[11]

என்று திருஞானசம்பந்தர், பத்திமை வாழ்க்கையின் சிறப்பியல்பைப் பாடிச்சென்றுள்ளார்.

பக்தி என்பது கொள்கை, உணர்வு, மானுடர் வாழ்வின் நடைமுறை எனப் பல வகையாகும். இறைச் சக்தியானது, இரும்பைக் காந்தம் இழுப்பது போன்று மானுடரை இறைமைக்கு ஆட்படுத்துவது பக்தி எனலாம். 'அன்பு காட்டல், பயப்படல், நம்பிக்கை காத்தல், ஆழ்ந்து சிந்தித்தல், உலக விருப்புகளிலிருந்து விலகியிருத்தல், தியானம் செய்தல் ஆகியவை பக்திக்குரிய வழிகளாகும்'[12] என்பார் ஜலஜா கோபிநாத். இறைவனின் திருவடியை அடைய ஒழுக்கமான பக்தி வேண்டும். ஐம்புலன்களும் ஒரே சிந்தனையுடையதாக இருக்க வேண்டும். அதனால் தான்,

"பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க

நெறிநின் றார்நீடுவாழ் வார்"[13]

என்றார் வள்ளுவர். ஐம்புலன்களையும் அடக்கி ஆள வேண்டும் என்பதனையே படைப்பாசிரியர்,

"'ஒரவெட்டார் ஒன்றை உள்ள ஒட்டார்.. மலரிட்டு உனது தாள்

சேரவொட்டார் ஐவர்' என்று தன் ஆன்மாவை அமுக்கிப்

பிடிக்கும் ஐந்து அண்டை வீட்டாரைப் பற்றிப் புலம்பினார் அருணகிரிநாதர்.

அடக்க முடியாத இந்த ஐந்து முரடர்களை, 'ஐம்புல வேடர்' என்கிறது

சைவசித்தாந்தம். மெய், வாய், கண், மூக்கு, செவி என்கிற

ஐந்து பேரும் அவ்வளவு ஆபத்தானவர்களா?"[14]

என்னும் பகுதி மூலம் விளக்கிச் செல்கிறார். மேலும், ஐம்புலன் அடக்கமே பக்திக்கு வித்து என்பதை விளக்கிச் செல்லும் வகையில்,

"யானைக்கு மெய்யால்(உடம்பு) துன்பம். மீனுக்கு வாயால் மரணம். விட்டிலுக்குக் கண்ணே மயானம். வண்டுக்கு நாசி விரோதி. அசுணமாப் பறவையைச் செவிகளே அழிக்கும். ஆனாலும் இவை அதிர்ஷ்டசாலிகள். ஐந்து பொறிகளில் ஏதோ ஒன்று தான் இவற்றை அழிக்கும். இவைகளுக்கு ஒரே எதிரிதான். மனிதனுக்கு... அந்தோ ஐந்து எதிரிகள்!"[15]

என்னும் கருத்தும் அமைகிறது. ஐம்புலன்களையும் ஞானிகளைப் போல் மனத்தைக் கட்டுப்படுத்தி இறைவன் மீது சிந்தனை உடையவர்களாக இருந்தால், இறைவன் திருவடி நிழலைப் பெறலாம். இத்தகைய சிறப்புடைய இறைவன் திருக்கோவில்களின் பிரகார அமைப்பும் ஐம்பொறிகளின் அடக்கத்தை வலியுறுத்தும் வகையிலேயே அமைக்கப் பெற்றுள்ளதாகப் படைப்பாசிரியர்,

"பெரிய பெரிய சிவன் கோவில்களில் ஐந்து பிரகாரங்கள் இருக்கும். ஒவ்வொரு பொறி தரும் இன்ப நுகர்ச்சி பற்றிய எண்ணங்களை ஒவ்வொரு பிரகாரத்திலும் விட்டு விட்டு, ஐந்தையும் தாண்டி ஆறாவது அறிவு நிலையில் இறைவனை வணங்குவதே கோயில்களின் அமைப்பு முறை"[16]

என்று கூறியிருப்பதும் ஈண்டுச் சிந்திக்கத்தக்கது. சூரபன்மன் மகனான பானுகோபனை வென்ற முருகனுடைய தம்பி வீரபாகு, எப்போதும் தங்கள் திருவடியில் அன்பு செலுத்தும் இதயம் வேண்டும் என்று கேட்கிறார்.

மேலும் ஒரு வரம் கேள் என்று கூறிய முருகனிடம், தங்கள் திருவடியில் அன்பு தவிர, இன்னொன்று வேண்டும் என்ற எண்ணமே என் மனதில் வராமல் இருக்கும் வரம் வேண்டும் என்று கேட்கிறார். இச்செய்தியைக் கூறி, 'இந்த வீரபாகுவின் அன்புதான் பக்தியின் இலக்கணம்'[17] என்று படைப்பாசிரியர் கூறுவது பக்தியின் இலக்கணத்தை வரையறை செய்கிறது எனலாம்.

> "பக்தி என்பது உணர்ச்சியுடன் சம்பந்தப்பட்ட விஷயம். மனத்தின் நெகிழ்ந்த குளிர்நிலை பக்தி"[18]

என்றும்,

> "உண்மையான பக்தி என்பது என்ன? தாயின் மார்பிலிருந்து பாலும், தாய்மண்ணிலிருந்து நீரும் சுரந்து வழிவது போல உயிரில் இருந்து ஊற்றெடுத்துப் பெருகும் உணர்ச்சியே பக்தி"[19]

என்றும் குறிப்பிட்டுச் செல்வது, பக்தி குறித்த படைப்பாசிரியரின் ஆன்மிகப் பார்வைக்குச் சான்றுகளாகும். மனிதன் தன் துன்பங்களில் இருந்து மீள்வதற்குப் பக்தி மிகவும் துணைசெய்யக் கூடியது. அதனால் வாழ்வு மேம்பாடு அடைய விரும்பும் ஒவ்வொருவரையும் பக்தி நெறியில் இயங்கத் தூண்டும் வகையில் படைப்பாசிரியர் கருத்துக்களை வெளியிட்டிருப்பது போற்றுதற்குரியது. இத்தகைய பக்தியில் அளவு இருக்கக் கூடாது என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கது.

**பக்தியின் அளவு**

இறைவன் மீது கொண்ட பக்தி நிலையானதாக இருக்க வேண்டும். குறிப்பிட்ட காலத்தில் மட்டும் இறைவனை வணங்குதல், பாதயாத்திரை செல்லுதல் போன்றவை வழக்கத்தில் உள்ளன. முருகனை நூற்றியெட்டு முறை சுற்றச் சொன்னதால், அதற்கு அதிகமாகச் சுற்றிய சுற்றுக்களைக் குறைப்பதற்காக இடமிருந்து வலமாகச் சுற்றுகிறேன் என்று ஒரு பக்தர் கூறியதைக் குறிப்பிட்டு,

> "பக்தியில் இப்படி அளவு வைத்துக்கொண்டு கும்பிடுபவர்களை நாவுக்கரசர் கண்டிக்கிறார். இத்தனை லட்சம் ஜபம் செய்திருக்கிறேன். இத்தனை சுற்றுச் சுற்றி இருக்கிறேன், இத்தனை நமஸ்காரம் செய்திருக்கிறேன் என்று எண்ணி எண்ணி இறுமாந்து போகிறவர்களைப் பார்த்து 'அன்பில் என்ன அளவு வேண்டிக் கிடக்கிறது?' என்கிறார் நாவுக்கரசர்"[20]

என்றும் கூறிச் செல்வதன் மூலம், பக்தி அளவிடற்கரியதாக அமைய வேண்டும் என்பதைப் புலப்படுத்துகிறார்.

**பக்தியில் காலம்**

மனித வாழ்க்கைக்கு ஒரு தெய்வீக நோக்கம் இருக்கிறது. ஆன்மிக நிம்மதி பெறுவதற்கு வாழ்க்கை பயன்பட வேண்டும். தெய்வீகமான காரியங்களுக்கு முடிந்த அளவுக்கு அதிகப்படியான நேரத்தை ஒதுக்கப் பழகிக்கொள்ள வேண்டும் என்று கிருபானந்த வாரியாரும்,[21]

"தாழியில் வெண்ணெய் தடங்கை

யார விழுங்கிய,

பேழை வயிற்றெம் பிரான்கண்டாய்

உன்னைக் கூவுகின்றான்

ஆழிகொண் டுன்னை யெறியும்

ஐயுற வில்லை காண்

வாழ வுறுதியேல் மாம்

தீ! மகிழ்ந்தோடி வா" [22]

என்று ஸ்ரீவத்ஸனும் கூறும் கருத்தை அடியொற்றிப் படைப்பாசிரியரும், இளமையில் அமையும் பக்தி நாட்டுக்கும் வீட்டுக்கும் நன்மை செய்யும். துள்ளித் திரியும் பருவத்தில் புலன்களை அடக்கி இறைவன் மீது பக்தி செலுத்துதல் நன்மை தரும் என்பதை "முன்பெல்லாம் தயிர் கடைந்து வெண்ணெய் எடுப்பார்கள். வெண்ணெய் இளகாமல் பந்து போல் திரண்டு வரும். வெயில் ஏற வெண்ணெய் இளகி ஒடும். திரண்டு வராது. இதே போலத்தான் பக்தி"[23] என்று குறிப்பிட்டுச் செல்கிறார். இளமையில் கடைந்து திரட்ட வேண்டியது முதுமை வர வர உலக விவகாரத்தில் உருகிவிடும் என்ற பகவன் இராமகிருஷ்ணர் கருத்தையும் ஏற்று "இளரத்தம் துள்ளும் இளமை வயதில் சித்தம் சிவமானால் செய்வனவெல்லாம் தவமானால் வீட்டுக்கும் நாட்டுக்கும் நன்மை"[24] என்று இளைஞர்களை பக்திப் பாதையில் பயணிக்க வழிவகுக்கிறார். மேலும் மது, புகை என்ற பாதையில் செல்லும் இன்றைய இளைஞர்களின்

ஞானக்கண்ணைத் திறக்கும் முயற்சியாக "உலகம் உறங்கும் நேரத்தில் ஞானி விழித்துக் கொண்டிருக்கிறான் என்கிறது பகவத்கீதை"[25] என்று கூறுவது சிறப்பாகச் சுட்டத்தக்கது.

காலத்தே பயிர்செய்வதைப் போல, இளம்பருவத்திலேயே பக்தி நெறியைக் கைக்கொள்ள வேண்டும். அத்தோடு ஆன்மாவைப் பற்றிய புரிதலும் தேவை என்பதும் குறிக்கத்தக்க ஒன்றாகிறது.

**ஆன்மா**

ஆன்மா அழியாத உணர்வாகும்.

"ஆன்மா என்றும் பிறப்பதுமில்லை, இறப்பதுமில்லை, அது
எதிலிருந்தும் தோன்றவில்லை; இதிலிருந்தும் எதுவும் தோன்றவில்லை;
இது பிறக்கவேயில்லை; இது என்றும் இருந்து வருவது;
இந்தியாவில், சாசுவதமாய் இருப்பது. உடல் அழிந்துபோன
பிறகும் இது அழிவதில்லை"[26]

என்னும் கூற்று ஆன்மாவைப் பற்றிய புரிதலைத் தருவதாக அமைகிறது.

"ஆன்மாவைச் சூழ்ந்துள்ள வினைக்குப்பைகளைச் சுட்டுச்
சாம்பலாக்கினால் கறை குறையற்ற ஒளிவீசும் ஆன்மாவை
உணர முடியும்"[27]

என்று படைப்பாசிரியர் குறித்துச் செல்வதும் இங்குக் குறிக்கத்தக்கது.

"நான் என்ற உணர்வுடன் எனக்குத்தேவை என்ற சிந்தனையுடன்,

நாம் செய்யும் எந்தக் காரியமும் அதன் அழுத்தமான வடுக்களை

நம்மிடம் விட்டு விடுகிறது என்பர் சுவாமி சின்மயானந்தர்”[28]

என்பதன் மூலம், நான் என்ற அகந்தையும். தான் என்ற அகங்காரமும் அழிந்தால் தான் ஆன்மாவை அறியவியலும் என்பதை அறியவியலுகிறது. இக்கருத்தை அடியொற்றியே படைப்பாசிரியரும், “பாழடைந்த பழைய வீட்டை விட்டுப் புதுவீட்டிற்குக் குடிபோவது போல் ஆன்மா அந்த உடலை உதறிவிட்டுப் புது உடலைத் தேடிப் போகிறது. எனவே, மரணம் தற்காலிகமானது. அது ஓர் இடைக்கால ஏற்பாடு. நம் பயணம் மட்டும் தொய்வின்றித் தொடர்கிறது”[29] என்று அழியாத் தன்மை கொண்ட ஆன்மாவை விளக்கிச் செல்கிறார்.

“நமது ஆன்மா கடவுள்தான், அதன்மீது உடம்பு, மனம்,

ஆசாபாசங்கள், ஜாதி, குலம், பெயர், பரம்பரை, அகங்காரம்

என்று வேண்டாத மாசுகள் மூடிக்கிடக்கின்றன. கொஞ்சம்

கொஞ்சமாக இவற்றை வெட்டிச் செதுக்கினால், வெளியில் எறிந்தால்

உள்ளே இருக்கிற கடவுள் தெரிய ஆரம்பிப்பார்”[30]

என்னும் கூற்று இங்கு இணைத்து நோக்கற்பாலதாகிறது. இரமணருக்கு நான் யார் என்ற கேள்வி தோன்றியதால்தான் பகவான் இரமணர் ஆனார் என்று இரமணரைச் சான்று காட்டி விளக்கிச் செல்கிறார்.

“நான் ஆர்? என் உள்ளம் ஆர்

ஞானங்கள் ஆர்? என்னை யாரறிவார்?”[31]

என்ற மாணிக்கவாசகரின் கருத்தும் இங்கு ஒப்புநோக்கத்தக்கதெனலாம். இத்தகைய, நான் என்னும் அகந்தை அழிந்த உள்ளமே, கோயிலாக அமைகிறது.

**உள்ளமே கோயில்**

உறுதியான உடம்பில் தான் உயர்வான உள்ளம் இருக்க முடியும். உள்ளம் உயர்வாக இருந்தால்தான் உடம்பு உறுதியாக இருக்கும். எனவேதான் உடம்பையும், உள்ளத்தையும் தூய்மையாக வைத்திருத்தல் வேண்டும் என்று படைப்பாசிரியரும் குறிப்பிட்டுச் செல்கிறார்.

> "கோயிலுக்குப் போய் வருவது முதல்நிலை. நாமே கோயிலாவது
>
> நிறைநிலை. கடவுளைப் பாடுவது முன்னுரை, கடவுளாவது
>
> முடிவுரை"[32]

என்னும் கூற்று, உள்ளத்தைக் கோயிலாக வைத்திருக்க வேண்டிய இன்றியமையாமையை வலியுறுத்திச் செல்கிறது. மேலும், இத்தகைய தூய்மையான உள்ளமே, இறைவன் குடியிருக்கும் கோயிலாகும் என்பதை,

> " 'யான்', 'என்னுடையது' என்னும் செருக்கை அறுப்பவனின்
>
> உள்ளத்தில்தான் ஆண்டவன் இருப்பான்"[33]

என்னும் கருத்தின்மூலம் பெறமுடிகிறது.

திருமூலர் இறை அனுபவம் முற்றிலும் பெற்ற ஓர் ஒப்பற்ற யோகியாவார். இறைவனை புறத்திலும், அகத்திலும் வழிபட்டுத் தனது யோகத்தின் இளமையாலும், தவத்தின் சாதனையாலும் எங்கும்,

எவ்வுலகிலும் காணப்படும் பரம்பொருளைத் தம்முள் கண்டவராய், மோன சமாதி நிலையில்,

"முகத்தில் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்

அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்"[34]

என்று பாடுகிறார். இக்கருத்தை அடியொற்றி அமையும் விவேகானந்தரின்,

"எல்லா உயிர்களுமே கோவில்கள் என்பது உண்மைதான்.

ஆனால், மனிதனே மிக உயர்ந்த ஆலயம். அக்கோயில்

என்னால் வழிபாடு செய்ய முடியவில்லை என்றால் வேறெந்தக்

கோவிலாலும் பயன் இல்லை. ஒவ்வொரு மனித உடலாகிய

கோயிலிலும் கடவுளே வீற்றிருப்பதை அறிந்த உடனேயே

நான் ஒவ்வொரு மனித உயிர்க்கு முன்னாலும் பணிவுடன்

நின்று அவனிடத்தில் கடவுளையே தரிசனம் செய்கிறேன்"[35]

என்னும் கருத்தும் இங்கு நோக்கத்தக்கது. திருநின்றவூரில் பூசலார் கட்டிய கோயில் கும்பாபிசேகத்தில் கலந்துகொள்வதால், கைலாசநாதர் கோயில் கும்பாபிசேகத்தில் கலந்துகொள்ள இயலவில்லை என்பதைப் பல்லவ மன்னனின் கனவில் தோன்றிய சிவபெருமான் தெரிவித்த செய்தியைக் கூறி,

"அதைக் கட்டியவன் அரசன். இதைக் கட்டியவன் அன்பன். அது கற்கோயில். இது நெஞ்சக் கோயில். கோயிலைச் சமைத்தான் மன்னன். கோயிலாய்ச் சமைந்தார் பூசலார். எந்தக் கோயில்

இறைவனுக்கு ஏற்புடையது! உள்ளத்தில் கோயில் கருவானது, உடம்பே கோயிலாய் உருவானது. உள்ளம் பெருங்கோயில் ஊன் உடம்பு ஆலயம்”[36]

என்று குறிப்பிட்டுச் செல்வதில் உள்ளமே கோயில் என்பது தெற்றெனப் பளிச்சிடுகிறது. பூசலாரைப் போல ஒவ்வொருவரும் உடம்பையே கோயிலாக்கலாம். உடம்பில் ஒவ்வொரு பாகமாகப் பிரித்துக் கோவில் உருவாக்கலாம். ஒவ்வொருவரும் நம்மால் முடியும் என்று நினைத்தால் போதும். எதையும் சாதித்து விடலாம். கடவுளின் கருணையால் இறைவனைக் காணமுடியும் என்பதே படைப்பாசிரியரின் கருத்தாக அமைகிறது. ஒவ்வொருவரும் நேர்மையாகவும், தூய்மையாகவும், மனதில் எந்தவிதமான கெட்ட எண்ணங்களும் இல்லாமல் இருக்க வேண்டும். அவ்வாறு இருந்தால் கடவுளின் அருளைப் பெறலாம் என்பதைப் படைப்பாசிரியர் புலப்படுத்தும் திறம் சிறப்பாகச் சுட்டத்தக்கது. இத்தகைய இறைநம்பிக்கையும் இங்குக் குறிக்கத்தக்க ஒன்று.

**கடவுள் கோட்பாடு**

நம்பிக்கை அடுக்குகளால் நகர்வதே வாழ்க்கை. மண்ணை நம்பி வளரும் மரம்போல், தன்னை நம்பி நிமிர்பவன் தாழாது வாழப் பழகிக் கொள்கிறான். மரத்திற்கு வேர் ஆதாரம் என்பது போல் மனிதனிடம் தன்னம்பிக்கை வளர புலனடக்கம் தேவையாகிறது. புலனடக்கத்திற்கான அறிவுக் கூர்மையான வழிமுறையே கடவுள்கொள்கை.

"கடவுள் என்பது ஒரு நிலை. எல்லாவற்றையும் கடந்தும் உள்ளம் இருக்கிற பேராற்றல். அதற்குப் பெயர் என்பது ஓர் அடையாளத்திற்கு மட்டுமே"[37]

என்னும் கூற்று, எல்லாவற்றையும் கடந்த நிலையே கடவுள் என்பதைத் தெளிவுபடுத்துகிறது. இக்கருத்தோடு,

"இறைவனுக்குள் நம்மை வைத்து விட்டால் உள்ளும் வெளியிலும் இறைவனே நிரம்பி இருக்கிறார். கடவுள் என்ற பெயரே அப்படி வந்தது தான்.. கட – கடந்தது, உள் - உள்ளிருப்பது. கடந்தும் உள்ளும் இருப்பது இறையாற்றல் மட்டுமே. இறையாற்றலுக்குள் ஆழ்ந்து விடுதலே இறையை நிரப்பும் முறை"[38]

என்னும் கருத்தும் இணைத்து நோக்கத்தக்கது. இத்தகைய கடவுளுக்கு ஒரு வடிவம் கற்பித்தோ அல்லது வடிவமற்ற இயற்கை நிலையிலோ வணங்கத் தலைப்படுபவன் வாழ்க்கை நெறிமுறைகளுக்கு இணங்கப் பழகுகிறான். கடவுள் நம்பிக்கையால் பெற்ற மனத்தெளிவைக் கொண்டு தன் வாழ்க்கையை மட்டும் வளப்படுத்திக் கொள்பவன் சாதாரண பக்தனாகிறான். பெற்ற தெளிவைக் கொண்டு மற்றவரை வளப்படுத்த முயற்சிப்பவர் ஞானியாகிறார். 'நாமார்க்கும் குடியல்வோம் நமனை அஞ்சோம்' என்ற நாவுக்கரசரின் நம்பிக்கை கடவுள் ஞானத்தால் முதிர்ந்த உயர்நம்பிக்கை. இத்தகைய உயர் நம்பிக்கையை மக்கள் மனத்தில் விதைக்கும் படைப்பாசிரியரின் ஆன்மிகச் சிந்தனை போற்றுதற்குரியதாகிறது.

"மனிதன் இட்ட பணியைக் கடவுள் செய்கிறான் என்கிறது இந்து மதம். மக்கள் பணியே மகேசன் பணி. ஊருக்கு உழைப்பவனுக்கு ஒத்துழைக்க வேண்டியது கடவுளின் கட்டாயம். கடவுள் நல்லவர்களின் வேலைக்காரன்"[39]

என்னும் கருத்தின் மூலம், கடவுள் கோட்பாட்டினை ஏற்றுச் செயல்பட்டால், மனித வாழ்க்கையை வளப்படுத்தக் கடவுள் முனைவார் என்பது புலனாகிறது.

"நம்மைச் சிறையில் இடுவது படைப்பு. உடம்புச் சிறையில் உயிர்ப் பறவையைச் சிறைவைப்பதே பிறப்பு. இந்தச் சிறைவைக்கும் படைப்பைச் சிறைவைத்த குருநாதன் முருகன். உயிரின் பிறிவித் துயர் தீர்ப்பவன் குருநாதன் என்பதே நுண்பொருள்"[40]

என்று குறிப்பிட்டுச் செல்வது, கடவுளை நம்பினோர் கைவிடப்படார் என்பதைப் புலப்படுத்துவதாக அமைகிறது. இதற்குச் சான்றாக,

"இடது கால் என்றால் இடது சுவாசம். அதன் வழி இயங்கும் மனத்தை அடக்கி, இறைவர்பால் வைத்தால் மார்க்கண்டேயன் சிவலிங்கத்தைத் தழுவியது உடம்பும் உயிரும் கூறுபோட முடியாதபடி கூற்று உதைபடுகிறது. ஜீவன் முக்தி தேகத்துடனேயெ சித்திரிக்கிறது"[41]

என்னும் பகுதியைச் சுட்ட முடிகிறது. மேலும், "வாழ்க்கையில் முன்னேற தன்னம்பிக்கை வேண்டும். வாழ்க்கை முழுமை பெறக் கடவுள் நம்பிக்கை வேண்டும். திறமைமிக்க – தன்னம்பிக்கைமிக்க சில தலைவர்களுக்குக் கடவுள் நம்பிக்கை இருந்திருந்தால் இன்னும் நிறைய

நன்மை விளைந்திருக்கும். நாட்டு நலன் கருதி இவர்களுக்குக் கடவுள் உண்மை புரியப் பிரார்த்திக்கிறேன். என் பிராத்தனை வெற்றிபெறும் என்று நம்புகிறேன் கடவுள் கருணையால்"[42] என்னும் படைப்பாசிரியரின் கருத்து, மாணிக்க வாசகரின் 'அவன் அருளாலே அவன் தாள் வணங்கி'[43] என்ற திருவாசகத் தொடரை நினைவூட்டுவதாக அமைகிறது. கடவுளைச் சோதி வடிவமாக வணங்கியவர் வள்ளலார். அனைத்து உயிர்களின் மீதும் அன்பு செலுத்துவதே வள்ளலாரின் ஆன்மிகம். இறைவனைப் பரந்த வெளியாகப் போற்றினார் தாயுமானவர். எங்கும் நிறைந்திருக்கும் இறைவனிடம் எல்லோரும் இன்புற்றிருக்க வேண்டுவதே தாயுமானவரின் கடவுள் கோட்பாடாகும். இறையருளைத் தன்னலத்திற்காக வேண்டாது, பொது நலத்திற்காக வேண்டுவதே உண்மையான ஆன்மிகம். வாழ்க்கையில் வளம்பெற விரும்புவோர்க்குக் கடவுள் கொள்கை சிறந்த வழிகாட்டி. அந்த வழியில் இடர்ப்படாமல் இன்றைய தலைமுறையைப் பயணிக்கத் தூண்டும் படைப்பாசிரியரின் சிந்தனை போற்றுதற்குரியது. இத்தகைய இறைவனை வழிபடும் முறையும் இங்குக் குறிக்கத்தக்க ஒன்று.

**வழிபாடு**

முதலில் மக்கள் இயற்கை வடிவங்களை வணங்கினர். பின்னர் அவ்வியற்கை வடிவங்களின் ஓவியங்களாக வரையப்பெற்ற உருவங்களை வணங்கத் தொடங்கினர். ஆண்டவன் இயற்கை வடிவினன் என்பதால், ஆண்டவன் உருவத்தை மரத்தடியில் வைத்து வணங்கினர். ஓவியமும் சிற்பமும் வளர்ந்த பின், இறைவனின் உருவங்களை ஓவியங்களாகவும், சிற்பங்களையும் உருவாக்கி வணங்கினர். வழிபாடு குறித்துக் குன்றக்குடி

அடிகளார் கூறும் கருத்து இங்குச் சிந்திக்கத்தக்கது. “வழிபாடு என்பது ஒரு உயிர் தன் உய்வுக்காகத் தானே செய்யும் ஒரு வகை அறிவு உணர்வுப் பயிற்சி. ஒருவர் அறிவுக்காகப் பிறிதொருவர் படிக்க முடியாது. ஒருவர் பசிக்காகப் பிறிதொருவர் உண்ண முடியாது. ஆனால் விந்தை! இன்று மக்களுக்காகச் சிலர் வழிபாடு செய்கிறார்களாம். இ∴து எங்ஙனம் சாத்தியம்! தண்ணீரைக் குடித்து ஜீரணித்த விதைதான் முளைக்க முடியுமே தவிர, அண்டாவில் தண்ணீர் இருப்பதினால் விதை முளைத்து விடாது. தண்ணீரைக் குடிக்கும் இயல்பில்லாத விதை தண்ணீரில் கிடந்தாலும் முளைக்காது. ஆண்டாண்டு அழுதாலும் அவளே பெற வேண்டும் என்ற பழமொழிபோல் ஒவ்வொரு உயிரும் தத்தம் உய்வுக்குத்தானே அழுது வழிபாடாற்ற வேண்டும். இதுவே சமயத் தத்துவத்தின் அடிப்படை; கடவுள் வழிபாட்டின் நோக்கம்”[44] என்னும் கூற்று, வழிபாடு என்பதற்கான வரைவிலக்கணத்தைத் தருவதாக அமைகிறது. இக்கருத்தினை அடியொற்றியே படைப்பாசிரியரும்,

> “தன் ஆற்றல் எல்லைக்கு உட்பட்டது; அதனால் எல்லா ஆபத்துகளையம் சமாளிக்க முடியாது என்பதை உணரும் மனிதன், தான் பயத்திலிருந்து விடுபட வேண்மென்பதற்காக, எல்லையற்ற வல்லமையுடைய இறைவனிடம் தன்னை அடைக்கலமாக்கிக் கொள்கிறான். அதுதான் வழிபாடு”[45]

என்று கூறிச் செல்கிறார். மேலும், “வழிபாட்டின் நோக்கமே, ‘தன்னை இழத்தல்’. தன்னை (தான் என்கிற அகங்காரத்தை) பலி தருவது தான்”[46] என்னும் கருத்து வழிபாட்டின் நோக்கத்தைத் தெளிவுபடுத்துகிறது.

"மனித மனத்திலிருந்து அச்சத்தை அகழ்ந்தெடுக்க வேண்டுமென்பதுதான் ஆண்டவன் வழிபாட்டின் அடிப்படை நோக்கம்"[47]

என்னும் கருத்து, இறைவழிபாடு மனிதனின் அச்சத்தைப் போக்கக் கூடியதென்பதைப் பறைசாற்றுகிறது.

சமயக்குரவர்கள் இறைவனை இன்னின்னவாறு வணங்க வேண்டும் என்று அறிவுரைகள் கூறுமிடங்களில் மக்கள் இறைவனை வணங்கிய முறைகள் வெளிப்படுத்தப்பெறுகின்றன. பொருந்தாக்காலத்தில் மால்-அயன் போன்றோர் தில்லை இறைவனை வணங்க உள்ளே புகமாட்டாது நிற்க, சுந்தரர் உள்ளே சென்று இறைவனை வழிபட்ட நிகழ்ச்சி,

"மால் அயன்சத மகன்பெருந் தேவர்

மற்றும் உள்ளவர்கள் முற்றும் நெருங்கிச்

சீல மாமுனிவர் சென்றுமுன் துன்னித்

திருப்பி ரம்பின்அடி கொண்டு திளைத்துக்

காலம் நேர் படுதல் பார்த்துஅயல் நிற்பக்

காதல் அன்பர் கணநாதர் புகும்பொன்

கோலம் நீடுதிரு வாயில் இறைஞ்சிக்

குவித்த செங்கைதலை மேல்கொடு புக்கார்"[48]

என்னும் பாடலில் சுட்டப்பெற்றுள்ளது. இதன்மூலம் இறைவனைக் குறிப்பிட்ட காலத்திலேயே சென்று வழிபடவேண்டும் என்பது புலனாகின்றது. மேலும் இப்பாடலின் வாயிலாகக் கைகளைத் தலைக்குமேல் குவித்து இறைவனை வணங்கும் முறைமை

தெளிவுபடுத்தப் பெறுகிறது. இம்முறையைப் புலப்படுத்தும் வகையில் அமையும்,

“மெய்தான் அரும்பி விதிர்விதித்து
உன்விரை ஆர் கழற்குஎன்
கைதான் தலை வைத்துக் கண்ணீர்
ததும்பி வெதும்பி உள்ளம்
பொய்தான் தவிர்ந்து உன்னைப் போற்றி
சயசய போற்றி என்னும்
கைதான் நெகிழ விடேன் உடையாய்
என்னைக் கண்டு கொள்ளே”[49]

என்னும் பாடலையும் ஈண்டு சான்றாகச் சுட்டலாம். இப்பாடல்களின் வழி, இறைவனை வழிபடும் முறையை அறிந்துகொள்ளவியலுகிறது. இதேபோன்று படைப்பாசிரியரும் வழிபாட்டு முறையைச் சிலவிடங்களில் குறிப்பிட்டுச் செல்கிறார். “மனம், மொழி, மெய் என்ற மூன்றாலும் நிகழ்த்த வேண்டியது வழிபாடு. வழிபாட்டில், பூ இடுதல், கண் மூடுதல், கை குவித்தல் இவையாவும் மெய் (உடம்பு) மூலம் நிகழ்த்தப்படுபவை. மந்திரம் ஓதுதல், தேவாரம், பிரார்த்தனை கீதம் பாடுதல் இவை யாவும் மொழிமூலம் நிகழ்த்தப்படுபவை. அப்படியானால் மனம் மூலம் என்ன செய்வது? பாவனை என்பதே மனத்தின் தொழில். எதிரே உள்ள அம்பாள் படத்தை சிவகாசி காலண்டர் என்று கருதாமல் நீ ராஜராஜேஸ்வரி என்கிற பாவனைதான் மனசின் பங்கு. இது பித்தளை, இது வெள்ளி என்று

சிலைகளை முடிவு செய்யாது, எலும்பும் ரத்தமும் உடைய முருகன், அனுமார் என்று பாவிக்கும் பாவனையே மனசின் வேலை. பாவனை இல்லாத உருவ வழிபாடு பயனற்றது"[50] என்னும் கருத்தும்,

"கல்லையோ செம்பையோ கடவுளாகப் பாவனை செய்து வழிபட்டால் வழிபாடு முழுமையாகிறது"[51]

என்ற கருத்தும் இறைவனை எவ்வாறு வழிபடவேண்டும் என்பதைத் தெளிவுபடுத்துவனவாக அமைகின்றன. "சுயமாகச் சுற்றுவதன் மூலம் சூரிய ஆற்றல் பூமிக்குக் கிடைக்கிறது! அப்படிக் கோயிலைச் சுற்றுவதன் மூலம், பரம்பொருளைச் சுற்றுவதன் மூலம் ஒவ்வொரு மனிதனும் கடவுளின் அருளைப் பெறுகிறான். பரம்பொருள் சூரியன். ஒவ்வொரு மனிதனும் பூமி. எனவே, கோயிலைச் சுற்றுவதன் மூலம் இறையாற்றலை நம்மால் பெறமுடியும்"[52] என்னும் கூற்றின் மூலம், கோயிலை வலம் வந்து இறைவனை வணங்கும் முறையை அறிவியலோடு இணைத்து விளக்கிச் செல்கிறார். இவ்வாறு இறைவழிபாட்டில் அறிவியல் உண்மை ஒளிந்திருப்பதைச் சுட்டிச் செல்லும் விதம் சிறப்பாகச் சுட்டற்குரியது.

விதிக்கொள்கையும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

**விதிக்கொள்கை**

இந்து மதத்தில் வற்புறுத்தப்படும் விதிக்கொள்கை குறித்துப் படைப்பாசிரியர் கூறிச்செல்கிறார். விதி என்பது முதலாளித்துவ சமுதாய அமைப்பைக் காப்பாற்ற பௌராணிகர்கள் (புராணக்கொள்கைகள்) வகுத்த சூழ்ச்சி என்ற வாதம் தவறானது. மனிதனை நல்வழிப்படுத்தப்

பெரியோர்கள் கண்ட பேருண்மை விதிக்கொள்கை”[53] என்னும் கருத்தின் மூலம் விதி குறித்த படைப்பாசிரியரின் கருத்தை அறியவியலுகிறது.

“உயிர் முயற்சி; உடம்பு விதி; உடம்புக்குள் உயிர் அடங்கி இருப்பது உண்மை. ஆனால் உயிர் உடம்பை இயக்கும் வலிமையுடையது என்பது பேருண்மை. உடம்பு வழிப்பட்ட சிந்தனைகளில் சிக்கி விதிக்குப் பலியாகி விடாமல் உயிர் வழிப்பட்ட சிந்தனைகளை மேற்கொண்டு விதியிலிருந்து விலக முயற்சி செய்வதே ஞானம்”[54]

என்று படைப்பாசிரியர் கூறிச்செல்வது, மிக ஆழமானதாகவும் சிந்திக்கத் தூண்டுவதாகவும் அமைகிறது. விதியை வெல்ல முயற்சிக்க வேண்டும் என்பதற்காகத்தான் விதிக்கொள்கை வலியுறுத்தப் பெறுகிறது என்பதே படைப்பாசிரியர் விதிக்கொள்கை குறித்துத் தரும் கருத்தாகும்.

ஆன்மிகச் சிந்தனைகளுள் தத்துவக் கோட்பாடும் குறிப்பிடத்தக்கது.

**தத்துவம்**

தத்துவம் என்ற சொல்லுக்கு உண்மைப் பொருள் என்பதே கருத்தாகும். உண்மைப் பொருளிலிருந்து உண்டாகும் காரியங்களிலும் உண்மைப் பொருள் பரவி நிற்பதால் அக்காரியமும் உண்மைப்பொருள் என அழைக்கப்பெறுகிறது.

“தத்துவம் என்ற சொல்லுக்கு அறிவாக்கம், மூல முதற்காரணம் பற்றிய சிந்தனை, பொருள்களின் பொது மூலக் கோட்பாட்டாராய்ச்சி, மனவமைதி, பகுத்தறிவுச் சிந்தனை, வாழ்க்கைக் கோட்பாடு, வாழ்க்கை நடைமுறை”[55]

எனவும் விளக்கம் தரப்படுகின்றது. “பிரபஞ்சம் முழுவதையும் ஒன்றாகப் பொருத்தி அதனைப் புரிந்து கொள்ளுதல், மனிதர்களின் ஒழுக்கக் கோட்பாடுகள், சமூகக் கடமைகள், துறக்க உலகத்திற்கும் மனிதனுக்கும் இடையே உள்ள உறவினை ஆராய்தல், காணப்படும் இயற்கைப் பொருள்களை ஆராய்தல், பிரபஞ்சம் மனிதன் இவைகளின் தோற்றம் பற்றித் தீவிரமாகச் சிந்தித்தல், மனிதனின் உயர் குறிக்கோள் பற்றிய மதிப்பீடு, நன்மைகள் தீமைகள் அழகு பற்றிய ஆய்வுகள்”[56] எனப் பல்வேறு கருத்துக்களை உள்ளடக்கியதாகப் ‘பிலாச.ஃ.பி (தத்துவம்) என்ற ஆங்கிலச் சொல் விளங்குவதாக என்சைக்ளோபீடியா பிரிட்டானிகா என்னும் ஆங்கிலக் கலைக்களஞ்சியம் தத்துவத்துக்கு விளக்கம் தருகின்றது. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் ஆங்கில அகராதி தத்துவத்தைப் பற்றிக் குறிப்பிடும் போது,

> “பொருள்களின் மூலக் கோட்பாட்டாராய்ச்சி மனவமைதி, பகுத்தறிவுச் சிந்தனை, வாழ்க்கைக் கோட்பாடு, வாழ்க்கை நடைமுறைத் திட்டம், மெய்யியல்”[57]

என்று விளக்கம் தருகின்றது.

தத்துவம் என்பது அதனுடைய கற்பித்தல்களையும், தூண்டுதல்களையும் ஏற்றுக் கொள்ளக் கூடிய மனித இயல்புடையவர்களின் மனங்களில் வேரூன்றுவதற்கு உரிமை கோரும் இயல்புடையது. உலகத்தால் கொடுக்கவோ, எடுக்கவோ முடியாத ஒரு தனி ஈடுபாட்டை அம்மனங்களில் பதிக்கிறது. இத்தகைய தத்துவம் பற்றி இந்தியத் தத்துவ அறிஞர் ச. இராதாகிருட்டிணன்,

"மனிதன் அடையும் வருத்தம், அழிவு, செயல்படாத நிலை, நம்பிக்கையின்மை ஆகியவற்றிலிருந்து விடுவிக்கத் தோள் கொடுக்கிறது. மனிதனை உருவாக்குவதே தத்துவத்தின் குறிக்கோள் ஆகும்"[58]

என்று விளக்கமளிப்பது இவண் சிந்திக்கத்தக்கதாகிறது. எனவே, பிரபஞ்சம், மனிதன், பிறப்பு, இறப்பு, இன்பம், துன்பம், விதி, நன்மை தீமை, மறுபிறப்பு என்பன குறித்து விளக்கப்படுவதே தத்துவம் எனக் கொள்ளலாம். "இராமனைப் போலவே நீலமேனி.. தாமரைத் தடக்கை. வில்லேந்திய வீரத்தோள்கள், மரவுரி, ஜடாமுடி யாவும் பெற்றேன். என்னை இராமனாகப் பாவனை செய்தேன். தவறு செய்ய வேண்டும் என்ற எண்ணமே என்னை விட்டு நீங்கி விட்டது. தீய எண்ணமே என் மனத்தில் இல்லாமல் போனது"[59] என்று இராவணன் சொன்னதாகப் படைப்பாசிரியர் கூறுவதிலிருந்து, இராமனை மனத்தில் கொண்டதால் தீய நடவடிக்கையிலிருந்து ஒதுங்கி, தூய வாழ்க்கையைப் பெற வெண்டும் என்ற எண்ணமே ஏற்பட்டது என்பதையும் மனிதனைப் பக்குவப்படுத்தும் நிலையையும் அறியமுடிகின்றது.

எண்கணிதத்தில் ஏழு என்ற எண் தெய்வீகமானது. வடமொழியில் சப்த என்பது ஏழு என்ற எண்ணைக் குறிக்கும். உயிரினங்கள் ஏழு, கிழமைகள் ஏழு, பிறவிகள் ஏழு, வானவில்லின் நிறங்கள் ஏழு; சப்த ஸ்வரங்கள், சப்ர ரிஷிகள், சப்த நாடிகள், சப்த லோகங்கள், சப்த கன்னிகை, சப்த தாதுக்கள் என்று ஏழின் சிறப்பினை[60] எடுத்துரைத்துள்ளார் படைப்பாசிரியர். ஆறாம் அறிவைக் கடந்து, ஏழாம்

நிலையான தெய்வநிலையை அடைவதையே இந்த ஏழாம் எண் தத்துவம் மூலம் விளக்கிச் செல்கிறார் ஆசிரியர். சான்றாக,

> "மனித உடலில் ஜீவசக்தி நின்று இயங்கும் இடங்களை ஞானிகள், யோகிகள் ஏழாகவே வகுத்தனர். முறையே மூலாதாரம், சுவாதிஸ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுக்தி, ஆக்ஞை, சகஸ்ரம் என்று ஏழு சக்கரங்களைக் கண்டறிந்தனர். முதுகில் உள்ள தண்டுவடத்தின் விளிம்பில் இருந்து ஆரம்பித்து மூளையின் உச்சிவரை உள்ள இந்த ஏழு சக்கரங்கள் வழியாகவும் நமது உயிர்ச் சக்தியை ஏற்றி ஏற்றித் தெய்வநிலை பெறுவதே சித்தர்கள், யோகிகள் கண்டறிந்த தெய்வமாகும் வழி"[61]

என்னும் கருத்தினைச் சுட்டமுடிகிறது. "உலகத்தில் கோள்களின் சுழற்சியால்தான் காலம் கணக்கிடப்படுகிறது. சுழற்சி நின்று விட்டால் காலம் என்பதே இல்லை. அந்தச் சுழற்சியை நடத்தி, தன் கையில் சக்கரத்தை ஏந்துகிறான் திருமால். காலம் அவன் கட்டுக்குள் இருக்கிறது என்பதே அதன் பொருள். இவையாவும் 'கால தத்துவத்தை வென்றது கடவுள் தத்துவம்' என்பதை விளக்கும்"[62] என்னும் கூற்றும் தத்துவம் காட்டும் தெய்வத்தை எடுத்துரைப்பதாக அமைகிறது.

**சந்நியாசம்**

உண்மையில் சந்நியாசம் என்பது ஒரு மனோநிலை. இன்னும் ஆழமாகப் பார்த்தால் மனம் கடந்த ஒரு மகாநிலை. தன் வாழ்வில் நடப்பதையும் ஒருவித பாதிப்பும் இன்றி சாட்சி மாத்திரமாகவே உணரும் வித்தியாசமான வளர்ச்சி. தன்னைச் சுற்றி நிகழும் அந்த நிகழ்வுகளிலும்

பங்களிப்போ, பாதிப்போ, பதிவோ இன்றி சலனமற்று நிற்கும் நிலையே சந்நியாசம்[63]. இன்று சந்நியாசிகள் பெருகியிருப்பதையும் அவர்களுள் போலிகள் மிகுந்துள்ளார்கள் என்பதால் சந்நியாசம் என்பதன் உண்மைப் பொருளே மறக்கப்பட்டுவிட்டது என்று சந்நியாசம் குறித்துப் படைப்பாசிரியர் பதிவு செய்திருப்பது இன்றைய யதார்த்தத்தைப் பறைசாற்றுவதாக அமைகிறது.

**பிரம்மச்சரியம்:**

பிரம்மச்சரியம் மிக மிக அவசியம். பன்னிரண்டு ஆண்டுக்காலம் பிரம்மச்சரிய நெறியில் இருப்பவர்கள் மேதாநாடி என்ற ஒன்றைப் பெறுகிறார்கள் என்கிறார் பகவான் இராமகிருஷ்ணர். இதற்குச் சாட்சி விவேகானந்தர் என்று குறிப்பிட்டு, 'பிரம்மச்சரியம் உடம்பை விட உள்ளத்தை வலுப்படுத்தும் உன்னத சக்தி'[44] என்று கூறிச்செல்வது பிரம்மச்சரியம் இன்றைய இளைஞர்களுக்குத் தேவையான ஒன்று என்பதை எடுத்துரைக்கிறது.

**உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்**

எண்ணங்களின் பிறப்பு, இருப்பு, இறப்பு எல்லாமே மனத்தில் உதித்து வெளிவருவன. அதைப் பொறுத்தே உயர்வு தாழ்வு அமைகிறது. மனமே இறைவன் குடியிருக்கும் இடமாகும். உள்ளத்தின் உயரமே வாழ்க்கையின் உயரமாகும். இதனையே வள்ளுவரும்,

"வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனையது உயர்வு"[65]

என்னும் குறட்பாவில் விளக்குகிறார். இக்கருத்தை விளக்கப் படைப்பாசிரியர் கூறும் நிகழ்ச்சி இங்குக் குறிப்பிடத்தக்கது.

> "நாள்தோறும் சிவபெருமான் மீது ஒரு கல்லை எறிந்தார் சாக்கியர். அவர் நாயனார் என்று மதிக்கப்பட்டார். ஆனால் மன்மதன் சிவபெருமான்மீது ஐந்து மலர்களை வீசினான். அவன் எரிக்கப்பட்டான். ஏன்? அதற்குக் காரணம் இரண்டுக்கும் பின்னால் இருந்த மனம், சிவபெருமானை வணங்க நினைத்துக் கல்லை எறிந்தார் சாக்கியர். சிவனைக் காம வயப்படுத்த மலர்களை வீசினான் மன்மதன். செயல்களின் பின்னால் உள்ள மனம்தான் அளக்கப்படுகிறது"[66]

என்று, தூயஉள்ளத்தின் செயல்பாடு என்றும் உயர்நிலையை அடைய வழிகோலும் என்பதனை இந்நிகழ்ச்சி மூலம் தெளிவுபடுத்துகிறார். மேலும்,

> "அரசியல் அழுகல்களையும், சினிமாச் சொத்தைகளையும் இதயத்தில் இருந்து அப்புறப்படுதுங்கள், 'இறைமை, இறைவன்' என்ற தூய எண்ணத்தை இதயம் முழுவதும் நிரப்புங்கள், உள்ளத்தின் உயரமே உங்கள் உயரம்.. மறவாதீர்கள்"[67]

என்று கூறும் படைப்பாசிரியர் உள்ளத்தூய்மையை வலியுறுத்துவதோடு, உயர்ந்தவற்றையே எண்ண வேண்டும் என்பதையும் தெளிவுபடுத்திச் செல்கிறார்.

## பகவத் கீதை காட்டும் படிநிலைகள்

பகவத் கீதை வாயிலாக மனிதன் தெய்வம் ஆவதற்குரிய படிநிலைகளைப் பட்டியலிடுகிறார் படைப்பாசிரியர். எல்லாப் பயங்களில் இருந்தும் விடுதலை பெறுவது,[68] மனத்தூய்மை,[69] தானம் தருவது,[70] ஞான யோகத்தில் நிற்றல்,[71] தவம் புரிதல்,[72] எந்த உயிருக்கும் துன்பம் செய்யாமை,[73] புலனடக்கம்,[74] உயிர்களிடத்தில் அன்பு வேண்டும்,[75] அமைதி, பொறுமை, ஆனந்தம்,[76] உடல் தூய்மை[77] மன்னிப்போம் மறப்போம்[78] முதலான பண்புகள் எல்லாம் இருந்தால் ஒருவன் தெய்வமாகலாம் என்பதை விளக்கிச் செல்கிறார். இப்பண்புகள் குறைந்து வரும் இன்றைய சூழ்நிலையில், இவற்றைப் பேணி வளர்த்து மனிதன் தெய்வ நிலைக்கு உயர வேண்டும் என்ற தன் உள்ளக்கிடக்கையை வெளிப்படுத்தும் விதம் சிறப்பாகப் போற்றுதற்குரியது.

## தொகுப்புரை

ஆன்மாவைத் தூய்மை செய்து பக்குவப்படுத்தும் செயலான ஆன்மிகம் குறித்தும், பண்படுத்திப் பக்குவப்படுத்தப்பட்ட வாழ்க்கை முறையான சமயம் குறித்தும் ஆய்வில் சுட்டிக்காட்டப்பெற்றுள்ளது.

கொள்கை, உணர்வு, மானுட வாழ்வின் நடைமுறை எனப் பலவாறாகக் கூறப்பெறும் பக்தி, அளவு வைத்துக்கொள்ளாத பக்தி, காலத்தே பக்தி கொள்ளல் நாட்டுக்கு நன்மை முதலானவை ஆய்வில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

அழியாத உணர்வான ஆன்மாவைச் சுற்றியுள்ள குப்பைகளை எரித்துச் சாம்பலாக்கினால், ஒளிவீசும் ஆன்மாவை அறியலாம் என்பதும்,

உள்ளத்தைத் தூய்மையாக வைத்திருந்தால் அதுவே கோயிலாகும் என்பதும் ஆய்வின் வழி பெறப்படுகின்றன.

எல்லாற்றைக் கடந்து நிற்கும் நிலையான கடவுள் கொள்கையும், கடவுளை நம்பினோர் கைவிடப்படார் என்னும் கடவுள் கோட்பாடும் சான்றுகளுடன் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. ஓர் உயிர் தன் உய்வுக்காகச் செய்யும் அறிவு உணர்வுப் பயிற்சியே வழிபாடு என்பதும், தன்னை இழத்தலே வழிபாட்டின் நோக்கம் என்பதும் ஆய்வில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

விதியை வெல்ல முடியும் என்பதைப் புரிய வைப்பதற்காகவே இந்து மதத்தில் விதிக் கொள்கை வற்புறுத்தப்படுகின்றது என்பதும், மனிதனை நல்வழிப்படுத்தப் பெரியோர்கள் கண்ட பேருண்மையே விதிக்கொள்கை என்பதும் ஆய்வின் வழி புலனாகின்றன.

உண்மைப் பொருளாகச் சுட்டப்படும் தத்துவம் காட்டும் தெய்வநிலை, எதனாலும் சலனமுறாத மனோநிலையான சந்நியாஸம், பிரம்மச்சரியம் ஆகியன ஆய்வில் புலப்படுத்தப் பெற்றுள்ளன. உயர்ந்த உள்ளமே மதிக்கப்பெறும் என்பதும், தெய்வமாவதற்குரிய படிநிலைகளாகப் பகவத் கீதை காட்டும் பண்புகளும் ஆய்வில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. அண. செல்வகணபதி (கட்.ஆ), 'சுகி.சிவம் அவர்களின் ஆன்மிகச் சிந்தனைகள்', துரை. அங்குசாமி (தொகு.ஆ), சொல்வேந்தர் சுகி சிவம் ஒரு பன்முகப் பார்வை, ப.211.
2. ஓஷோ, கிருஷ்ணா என்ற மனிதனும் அவர் தத்துவமும், ப.22
3. சுகி.சிவம், ஏமாற்றாதே ஏமாறாதே, ப.33.
4. மேலது, ப.34.
5. சுகி.சிவம், ஆன்மிகப் பூங்காவில் அதிசயத் துளசி, முன்னுரை, பக்.vii-viiii.
6. கொ. ஆறுமுகம் (கட்.ஆ), 'பெரியபுராணம் புலப்படுத்தும் சமுதாய உணர்வுகள்', சூ. இன்னாசி, (பதி.ஆ), சமயமும் சமுதாயமும், ப.12.
7. குன்றக்குடி அடிகளார், சமய இலக்கியங்கள், பக்.80-81.
8. ந. சுப்புரெட்டியார், ஆன்மிகமும் அறிவியலும், ப.202.
9. சுகி.சிவம், ஞானமலர்கள், பக்.13-14.
10. சுகி.சிவம், ஒரு தலம், ஒரு பாடல், ஒரு நயம், ப.35.
11. சுகி.சிவம், சமய இலக்கியம், ப.46.
12. அண. செல்வகணபதி (கட்.ஆ), 'சுகி. சிவம் அவர்களின் ஆன்மிகச் சிந்தனைகள்', துரை. அங்குசாமி (தொகு. ஆ), சொல்வேந்தர் சுகி சிவம் ஒரு பன்முகப் பார்வை, ப.212.
13. குறள். 6.
14. சுகி.சிவம், ஞானமலர்கள், ப.52.
15. மேலது, ப.55.

16. மேலது, ப.57.

17. சுகி.சிவம், நல்ல வண்ணம் வாழலாம், பக்.44-45.

18. சுகி.சிவம், நினைப்பதும், நடப்பதும், ப.142.

19. சுகி.சிவம், ஆன்மிகப் பூங்காவில் அதிசயத் துளசி, ப.147.

20. சுகி.சிவம், நல்லவண்ணம் வாழலாம், ப.41

21. வாரியார், ஆன்றோர் அருள்வாக்கு, ப.25.

22. ஸ்ரீவத்ஸன், நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம், ப.70.

23. சுகி.சிவம், கனவு மெய்ப்படும், ப.12.

24. மேலது, ப.12.

25. சுகி.சிவம், அர்த்தமுள்ள வாழ்வு, ப.53.

26. __________, இந்து மதம், ப.66.

27. சுகி.சிவம், கனவு மெய்ப்படும், ப.87.

28. மேற்கோள்: அண. செல்வகணபதி (கட்.ஆ) சுகி.சிவம் அவர்களின் ஆன்மிகச் சிந்தனைகள், துரை. அங்குசாமி (தொ.ஆ). சொல்வேந்தர் சுகிசிவம் ஒரு பன்முகப்பார்வை, ப.213.

29. சுகி.சிவம், கனவு மெய்ப்படும், ப.94.

30. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.38.

31. மாணிக்கவாசகர், திருவாசகம், 10:2.

32. சுகி.சிவம், நல்லவண்ணம் வாழலாம், ப.65.

33. சுகி.சிவம், சொன்னார்கள்! சொன்னார்கள்! பாகம் - 2, ப.51.

34. திருமந்திரம், ப.2944.

35. மேற்கோள், சி. சிதம்பரம் (கட்.ஆ), 'சுகி. சிவத்தின் வாழ்வியல் சிந்தனைகள்'. துரை. அங்குசாமி (தொ.ஆ), சுகி.சிவம் வாழ்வியல் சிந்தனைகள், ப.122.
36. சுகி.சிவம், நல்லவண்ணம் வாழலாம், பக்.68-69.
37. சுகி.சிவம், ஒரு தலம், ஒரு பாடல், ஒரு நயம், ப.21.
38. சுகி.சிவம், ஏமாற்றாதே, ஏமாறாதே!, ப.120.
39. சுகி.சிவம், சிந்தனை முத்துக்கள், ப.72.
40. சுகி.சிவம், கந்தர் அநுபூதி, ப.44.
41. சுகி.சிவம், ஒரு தலம், ஒரு பாடல், ஒரு நயம், ப.16.
42. சுகி.சிவம், நல்ல வண்ணம் வாழலாம், ப.33.
43. திருவாசகம், பா.4.1.
44. குன்றக்குடி அடிகளார், எல்லோரும் வழிபடலாம், ப.3.
45. சுகி.சிவம், அச்சம் தவிர், ப.50.
46. சுகி.சிவம், ஆன்மிகப் பூங்காவில் அதிசயத் துளசி, ப.146.
47. சுகி.சிவம், அச்சம் தவிர், ப.50.
48. பெரிய புராணம், தடுத்தாட்கொண்ட புராணம், ப.103.
49. திருவாசகம், பா.5.1.1.
50. சுகி.சிவம், மனசே, நீ ஒரு மந்திரச்சாவி, பக்.282-283.
51. சுகி.சிவம், ஞானமலர்கள், ப.14.
52. சுகி.சிவம், மனசே, நீ ஒரு மந்திரச்சாவி, பக்.156-157.
53. சுகி.சிவம், சிந்தனை முத்துக்கள், ப.35.
54. சுகி.சிவம், நல்ல வண்ணம் வாழலாம், ப.108.

55. இரா. குணசேகரன் (கட்.ஆ), ‘சுகி. சிவம் காட்டும் வாழ்வியல் தத்துவம்’, துரை. அங்குசாமி (தொ.ஆ), சுகி.சிவம் வாழ்வியல் சிந்தனைகள், ப.72.
56. Encyclopaedia Britanica, Vol.14, p.248.
57. ஆங்கிலம் - தமிழ் அகராதி, சென்னைப் பல்கலைக்கழகம், ப.731.
58. S. Radha Krishnan, His Life and Works, p.241.
59. சுகி.சிவம், ஞானமலர்கள், ப.19.
60. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.156.
61. மேலது, ப.158.
62. சுகி.சிவம், ஒரு தலம், ஒரு பாடல், ஒரு நயம், ப.15.
63. சுகி.சிவம், ஏமாற்றாதே, ஏமாறாதே, பக்.47-48.
64. சுகி.சிவம், கனவு மெய்ப்படும், ப.31.
65. குறள். 595.
66. சுகி.சிவம், நல்ல வண்ணம் வாழலாம், ப.50.
67. மேலது, ப.50
68. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.76.
69. மேலது, ப.80.
70. மேலது, ப.84.
71. மேலது, ப.90.
72. மேலது, ப.95.
73. மேலது, ப.100.
74. மேலது, ப.104.
75. மேலது, ப.110.

76. மேலது, ப.113.

77. மேலது, ப.119.

78. மேலது, ப.130.

# இயல் - 3

## சுகி. சிவம் நூல்களில் இலக்கிய ஆளுமைத்திறன்

### முன்னுரை

இலக்கியப் படைப்பாளிகள் ஒவ்வொருவரும் தம் படைப்பைச் செழுமைப்படுத்திடப் பல்வேறு இலக்கியங்களிலிருந்தும் பல கருத்துக்களை எடுத்தாள்வது உண்டு. நூல்களில் பொருத்தமான இடங்களில் இலக்கியங்களை எடுத்தாண்டு, தம் கருத்திற்குச் சுவையும் வலிமையும் சேர்க்கும் வல்லமை ஒவ்வொரு படைப்பாளியிடத்திலும் காணப்படுகிறது. படைப்பாசிரியர் சுகி. சிவமும் தம் நூல்களில் பல்வேறிடங்களில் பல இலக்கியங்களை எடுத்தாண்டுள்ளார். தன்னம்பிக்கை நூல், நல்ல குடும்பம் எவ்வாறு இருக்க வேண்டும் என்பதைத் தெளிவுபடுத்தும் நூல், ஆன்மீக நூல், முறையாக வாழ்வது பற்றிய வாழ்வியல் நூல் என அமையும் பலவகை நூல்களிலும் சுவையான முறையில் இலக்கியப் பகுதிகளை இணைத்துக் கூறியுள்ளார். ஆய்வு மேற்கொண்டுள்ள சுகி. சிவம் நூல்களில் அமையும் இலக்கிய ஆளுமை குறித்து இவ்வியல் ஆராய்கிறது.

### இலக்கண ஆளுமை

மனிதன் தெய்வநிலையை அடைய முடியும் என்பதை வலியுறுத்த வந்த படைப்பாசிரியர், ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் வரை விளக்கி விட்டு, அந்த ஆறாவது அறிவு நிலையைக் கடக்கும் நிலையே தெய்வ நிலை என்று கூறுகிறார். இத்தகைய ஆறு அறிவைப் பற்றி முன்னரே தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார் என்பதைக் குறிப்பிட்டு, தொல்காப்பிய நூற்பாவை மேற்கோளாகக் காட்டிச் செல்கிறார்.

"இந்த ஆறு அறிவைப் பற்றி அறிந்து சொன்ன அறிஞன் யார்?

நோபல் பரிசு பெற்ற எந்த அமெரிக்கன் இதைக்

கண்டுபிடித்தான் என்று நீங்கள் தடுமாறினால் தோற்றுவிடுவீர்கள்.

இதைக்கண்டு சொன்ன பேரறிஞன், பலநூறு ஆண்டுகளுக்கு

முன்னரே வாழ்ந்த முழுத்தமிழன். தொல்காப்பியம் என்கிற

நூல் இந்த உண்மையை உரைத்தது!"[1]

என்னும் கூற்று, படைப்பாசிரியரின் இலக்கண ஆளுமையைத் தெளிவுபடுத்துகிறது. ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் வரையிலான உயிர்களின் பாகுபாடு குறித்த தொல்காப்பியரின்,

"ஒன்று அறிவதுவே உற்று அறிவதுவே

இரண்டு அறிவதுவே அதனோடு நாவே

மூன்று அறிவதுவே அவற்றோடு மூக்கே

நான்கு அறிவதுவே அவற்றோடு கண்ணே

ஐந்து அறிவதுவே அவற்றோடு செவியே

ஆறு அறிவதுவே அவற்றோடு மனனே"[2]

என்னும் நூற்பாவை எடுத்தாண்டுள்ளார் படைப்பாசிரியர். ஆய்வு மேற்கொண்டுள்ள எஞ்சிய நூல்களில் இவ்வாறான இலக்கண ஆளுமை இடம்பெறவில்லை. சங்க இலக்கியப் பகுதிகளைச் சிலவிடங்களில் கையாண்டுள்ளது இங்குக் குறிக்கத்தக்கது.

**சங்க இலக்கியம்**

ஒன்றை இலக்காகக் கொண்டு வெளிப்படுவது இலக்கியம் என்று பொருள்படும்.

> "இலக்கியம் என்பது மனித உள்ளங்களின் திரைப்படம். மனித குலத்தின் ஆசைகளை, உணர்ச்சிகளை, விளைவுகளை, முடிவுகளை, இலக்கியத்தில் கற்றுக் கொள்கின்றோம். நல்ல மனிதர்களையும் அவர்களுக்கு இடையூறாக நிற்கும் தீய மனிதர்களையும், அன்பு, அறம், பொறுமை போன்ற நல்லுணர்வுகளையும், அவற்றைப் பகைக்கின்ற வண்பு, மறம், சிறுமை போன்ற அல்லுணர்வுகளையும் இலக்கியங்கள் வடிக்கின்றன. முழுவதும் நல்லவற்றையோ, முழுவதும் தீயவற்றையோ இலக்கியம் கூறுவதில்லை; கூறவும் இயலாது. இரண்டுக்கும் இடைமடுத்து நடப்பதே இலக்கியமாகும்"[3]

என்பர் வ.சுப. மாணிக்கம். இலக்கியம், காலந்தோறும் புதுப்புது பரிமாணங்களைப் பெற்று வளர்ந்துள்ளது. இக்கருத்தினை அரண்செய்யும் வகையில், "இலக்கியம் என்பது குறிப்பிட்ட யாப்பு வகைக்குள்ளாகவோ, குறிப்பிட்ட பொருள் சார்புக்குள்ளாகவோ எக்காலத்திலும் சிறைப்பட்டு நிற்பதில்லை. வளர்ந்து வரும் சமுதாயத்தின் உணரவுக்கும், மாறிவரும் காலத்தின் தேவைக்கும் ஏற்ற வகையில் வடிவாலும், அமைப்பாலும், பொருளாலும் புதுப்புது வகையில் உருக்கொண்டு வளர்ச்சி பெறுதலே இலக்கியத்தின் இயல்பு"[4] என்னும் கூற்று அமைகிறது. இவ்வரையறைகளைக் கொண்ட இலக்கியம், சங்க இலக்கியம், நீதி இலக்கியம், காப்பிய இலக்கியம், பக்தி இலக்கியம், இக்கால இலக்கியம் எனப் பலவகைகளாகப் பல்கிப் பெருகிக் கிளைத்துள்ளது. படைப்பாசிரியர் சுகி. சிவம் தம் படைப்புகளில் இத்தகைய இலக்கியப் பகுதிகளை மேற்கோளாகப் பொருத்தமான இடங்களில் எடுத்தாண்டிருப்பது இங்குக் குறிக்கத்தக்கது. படைப்பாசிரியர் தம் நூல்களில்,

சிலவிடங்களில் சங்க இலக்கியப் பகுதிகளைக் கையாண்டிருப்பதைக் காணமுடிகின்றது.

பண்டைத் தமிழர் நிலத்தைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐவகையாகப் பிரித்தனர். அவற்றுள் முல்லை நிலம், காடும் காடு சார்ந்த இடமாகும். முல்லை நிலத்தில் மரம், செடி, கொடிகள் போன்ற தாவர இனங்கள் அடர்ந்து வளர்ந்து பறவைகளும் விலங்குகளும் நிறைந்து வாழும். உயிரினம் வாழவும் பயிரினம் வளரவும், மழைவளம் கிடைக்கவும், மண்வளம் செழிக்கவும், தொழில்வளம் பெருகவும், பொருள்வளம் சிறக்கவும் துணைபுரியும் மரங்களைப் பேணிக் பாதுகாக்க வேண்டியது மக்களின் கடமை. பண்டைத் தமிழ் மக்கள், மரங்களைத் தம் குடும்ப உறுப்பினர்களாக, உயிராக, உறவாக எண்ணிப் பேணி வளர்த்தனர். இக்கருத்தை நற்றிணைப் பாடலின்வழி எடுத்துரைக்கிறார் ஆசிரியர்.

> "தாவரங்களுக்கும் உயிர் உண்டு என்று விஞ்ஞானம் விவரிக்கும் முன்பே மெய்ஞானம் அதை வாழ்க்கை ஆக்கியது, சங்க இலக்கியத்தில் தாவரங்கள் நமது குடும்ப உறுப்பினர்கள். நற்றிணையில் 'விளையாடு ஆயமொடு' என்று தொடங்கும் பாடலில் ஓர் உண்மை தெரிகிறது"[5]

என்னும் கருத்து ஈண்டுச் சிந்திக்கத்தக்கது. தலைவன், தலைவியிடையே நிகழும் களவொழுக்கத்தை நயத்தக்க நாகரித்துடன் எடுத்துரைப்பதோடு, மரம் வளர்க்க வேண்டும்; மனித நேயம் தழைக்க வேண்டும் என்ற சிந்தனைகளையும் முன்மொழிந்துள்ளார் ஆசிரியர். இதனை,

"விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி
மறந்தனம் துறந்த காழ்முளை அகைய
நெய்பெய் தீம்பால் பெய்தினிது வளர்ப்ப,
நும்மினுஞ் சிறந்தது நுவ்வை ஆகுமென்று
அன்னை கூறினள் புன்னையது சிறப்பே
….. ……. ….. ……. ………
இறைபடு நீழல் பிறவுமார் உளவே"[6]

என்னும் பாடல் கொண்டு நிறுவுகிறார் ஆசிரியர். புன்னைமரத்தின் நிழலில் நின்று பேசுவதை அக்காவின் முன்பு நிற்பதாகக் கருதி வேறிடம் செல்வோம் என்று தலைவி கூறுவதாக வரும் இப்பாடல், தாவரங்களைத் தமது குடும்ப உறுப்பினர்களாகக் கொண்ட சங்ககாலத் தமிழ் மக்களைக் காட்சிப்படுத்துகிறது. மரங்களை வளர்த்துப் பாதுகாக்க வேண்டும் என்னும் கருத்தை விளக்கவந்த ஆசிரியர், நற்றிணைப் பாடல் காட்சியை எடுத்துக் கூறியிருப்பது பொருத்தமுடையதாகவே தோன்றுகிறது.

இல்லறத்தில் இருக்கும் கணவன் மனைவிக்காகவும், மனைவி கணவனுக்காகவும் வாழ்வதே வாழ்க்கையாகும். வசதிபடைத்த வீட்டுப் பெண் திருமணமான புதிதில் சமைக்கத் தெரியாததால், பெரும் சிரமப்பட்டுச் சமைத்து முடிக்கிறாள். கணவன் அதனை மிகவும் இரசித்து ருசித்துச் சாப்பிட்டுப் பாராட்டிய போது அவள் மிகவும் மகிழ்ச்சி அடைகிறாள். குறுந்தொகையில் இடம்பெற்றுள்ள இக்காட்சியை, தலைவன் தலைவி இருவரும் ஒருவருக்காக ஒருவர் வாழ்வதே வாழ்க்கை என்ற கருத்தை விளக்குவதற்கு எடுத்துக் காட்டியுள்ளார்.

“முளிதயிர் பிசைந்த காந்தள் மென்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅது டீஇக்
குவளை உண்கண் குய்ப் புகை கழுமத்
தான் துழந்தட்ட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன் றெண்ணுதல் முகனே”[7]

என்னும் குறுந்தொகைப் பாடலை, உள்ளவாறே எடுத்தாண்டு, அப்பாடலுக்கு உரிய பொருளைக் காட்சியாக வடித்துத் தான் சொல்ல வந்த கருத்தை விளக்கியிருக்கும் ஆசிரியரின் திறன் போற்றுவதற்குரியது. அகஇலக்கியங்களைத் தம் நூல்களில் பொருத்தமான இடங்களில் பதிவு செய்துள்ள படைப்பாசிரியரிடம் புற இலக்கியத் தாக்கத்தையும் காணமுடிகிறது.

பண்டைக்காலத் தமிழர் மக்களின் புறவாழ்க்கையோடு தாவரங்களை இணைத்தனர். போருக்குச் செல்லும் போது, படைவீரர்கள் தங்களுக்குரிய அடையாளப் பூவைச் சூடிச்செல்வர். வெட்சி, கரந்தை, வஞ்சி, உழிஞை, தும்பை முதலான பூக்களை அணிந்து கொள்வர். சேர, சோழ, பாண்டிய மன்னர் மூவரும் முறையே பனை, ஆர்த்தி, வேம்பு ஆகிய பூமாலைகளை அடையாளமாகச் சூடிக்கொள்வர். இவ்வாறு பண்டைக்காலத்தில் அனைவரும் மரங்களைப் போற்றியிருந்ததைச் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறியமுடிகிறது.

“பண்டைய அரசர்கள் ஒவ்வொருவருக்கும் காவல் மரம் என்று ஒன்று உண்டு. அந்த இன மரத்தை அந்த மண் மக்கள்

> வெட்டுவது இல்லை. அது ராஜ துரோகம். மருதுபாண்டியர் வரலாற்றில் பெரிய மருது, சின்ன மருது என்று மருத மரங்கள் கொண்டாடப்பட்டதைப் பலரும் அறியலாம்"[8]

என்னும் கூற்று, மரங்கள் மக்களின் புறவாழ்க்கையோடு பிணைந்திருந்ததைப் புலப்படுத்துகிறது.

மனிதன் தெய்வமாக வேண்டுமெனில் தன் தவறுகளில் இருந்து முதலில் வெளியே வரவேண்டும். குற்றங்களைக் களைந்தால் மனிதன் தெய்வமாக முடியும். இதனை வலியுறுத்தும் வகையில் அமையும்,

> "பிடிக்கும், பிடிக்காது என்பது முக்கியமே அல்ல. நல்லது, கெட்டது – சரி, தவறு என்பதே முக்கியம். பழைய அளவுகோலான பிடிக்கும், பிடிக்காது என்பதைத் தூக்கி எறிந்தால் மனிதன் தெய்வமாகலாம்"[9]

என்னும் கருத்தில், 'நல்லது செய்தல் ஆற்றீராயினும்' என்ற புறநானூற்றுப் பதிவின் தாக்கம் தெற்றெனப் பளிச்சிடுகிறது.

சங்க இலக்கியத்துள் அக மற்றும் புற இலக்கியப் பாடல் மற்றும் கருத்தை எடுத்துக்கொண்டு, தேவைக்கேற்பப் பாடலையோ, அல்லது கருத்தை மட்டுமோ பெய்து, தன் கருத்திற்கு வலுச்சேர்ப்பதற்காகப் பயன்படுத்தியிருக்கும் ஆசிரியரின் சங்க இலக்கிய ஆளுமை சிறப்பாகச் சுட்டுதற்குரியது. இத்தகைய போக்கு ஆய்வு மேற்கொண்டுள்ள படைப்பாசிரியர் எஞ்சிய நூல்களில் காணப்பெறவில்லை.

ஆய்விற்கு எடுத்துக் கொண்டுள்ள நூல்களில் காணப்பெறும் குறள் ஆட்சிகளும் ஈண்டுக் குறிக்கத்தக்கன.

## குறள் ஆட்சி

ஆன்மிகம், சமூகம், குடும்பம், தன் முன்னேற்றம் எனப் பல துறைகளில் தன் பார்வையைப் பதித்துள்ள படைப்பாசிரியர் சுகி. சிவம் தன் கருத்திற்கு வலுச்சேர்க்கும் வகையில் சங்க இலக்கியங்களைப் பயன்படுத்தியதைப் போலவே, குறட்பாக்களையும் கையாண்டுள்ளார். தமிழில் தோன்றியுள்ள நீதி இலக்கியங்களுள் முதன்மையானதாக விளங்கும் திருக்குறளின் கருத்துக்கள் நேரடியாகப் பல இலக்கியங்களில் எடுத்தாளப்பெற்றுள்ளன. சில நூல்களில் குறளின் தாக்கத்தைக் காணமுடிகிறது.

### ஊக்கமுடைமை

மாமரமும், முருங்கை மரமும் வெட்டி எறிந்தாலும் தழைக்கக் கூடியவை. வாழவேண்டும் என்கிற வைராக்கியம் மரங்களுக்கு இருப்பதுபோல் மனிதனுக்கும் இருத்தல் வேண்டும் என்று இளைஞர்களை ஊக்கப்படுத்துமிடத்தில்,

"உரம் ஒருவற்கு உள்ள வெறுக்கைஅ.்.து இலார்

மரம்மக்கள் ஆதலே வேறு"[10]

என்னும் குறளை எடுத்தாண்டுள்ளார். ஊக்கமுள்ள மரங்களை ஊக்கமில்லா மனிதனோடு ஒப்புமைப்படுத்திவிட்டாரே வள்ளுவன் என்று தன் மனவேதனையைப் பதிவு செய்துள்ளார் படைப்பாசிரியர்.

"ஊக்கம் இல்லாத மனிதனை மரம் என்கிறார் வள்ளுவர். நியாயமா? கண்டிப்பாக நியாயம் இல்லை? ஏன்? மரம் கூட உயிர்

வாழ வேண்டும், உயர வேண்டும் என்ற வேட்கையும், முயற்சியும், ஆவேசமும் உடையது! அதுவும் இல்லாத மனிதனை மரம் என்று எப்படிச் சொல்லலாம்?"[11]

என்னும் கருத்து இங்குச் சிந்திக்கத்தக்கது. மற்றோர் இடத்தில், இளைய தலைமுறையினரை நோக்கி, முடியாது என்று ஒதுங்காமல் முயற்சி செய்யுங்கள் என்று கூறும்போது,

"அருமை உடைத்தென்று அசாவாமை வேண்டும்

பெருமை முயற்சி தரும்"[12]

என்ற குறளை மேற்கோளாகக் காட்டியுள்ளார்.

"குறளுக்குத் தமிழ்நாட்டுப் புலவர்கள் பதவுரை, பொழிப்புரை, கருத்துரை எழுதினார்கள். பிரான்ஸ் நாட்டு மேடம் க்யூரியும், ஸ்காட்லாந்து புரூஸும் வாழ்வுரை வழங்கினார்கள். உங்கள் அபிப்ராயம் எப்படி? பொழிப்புரை எழுதி இரண்டு மதிப்பெண் பெற்றால் போதாது.. வாழ்வுரை எழுதி வலிமை சேருங்கள். வாழ்ந்து காட்டுங்கள்"[13]

என்னும் கருத்து, இளைய தலைமுறையினரை வெற்றியின் திசைநோக்கிப் பயணிக்கச் செய்கிறது. நம்மிடம் உள்ள திறமைகளையும், முன்னேற்றத்திற்குத் தேவையான திறமைகளையும் ஒப்பிட்டுப்பார்த்து வளர்ச்சிக்குத் தேவையானவற்றில் தீவிரமாக முயற்சித்தால் வெற்றி கிட்டும்; தோல்வி நேராது. இதனை வலியுறுத்தும் நோக்கில் வள்ளுவரின் குறளை எடுத்தாண்டிருப்பது பொருத்தமான தேர்வாகிறது.

“அரைகுறையான தன்முனைப்புப் பயிற்றுநர்கள் திருவள்ளுவரிடம் இருந்து தெரிந்துகொள்ள வேண்டிய முக்கியச் செய்தி ஒன்று இருக்கிறது.

‘உடைத்தம் வலியறியார் ஊக்கத்தின் ஊக்கி

இடைக்கண் முறிந்தார் பலர்” (குறள் : 473)

என்பது அவரது ஆழம் மிக்க குறள்”[14]

என்னும் கருத்தின் மூலம், இளைய தலைமுறையினர் எப்படி முயற்சித்தால் தோல்வியைச் சந்திக்காமல் வெற்றி அடையலாம் என்பதை அறியவியலுகிறது.

தண்ணீரின் உயரத்தைப் போலவே, தாமரையின் உயரம் இருக்கும். ஒருவனுடைய எண்ணத்தின் உயரமே அவனுடைய வாழ்க்கையின் உயரம் என்பதை,

“வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்

உள்ளத் தனையது உயர்வு”[15]

என வள்ளுவர் வழி நின்று விளக்குகிறார். எண்ணங்களின் பிறப்பிடம், இருப்பிடம், எல்லாமே மனம்தான். அதைப் பொறுத்தே உயர்வு. எனவே மனத்தின் எண்ணங்கள் உயர்வுடையதாக இருக்க வேண்டும். அதுவே வாழ்க்கையின் உயரத்திற்கு வழிகாட்டும் என வள்ளுவர்வழி நின்று உரைத்திருப்பது இளைய தலைமுறைக்கு ஊக்க உரையாக அமைகிறது. இதே கருத்தை “உள்ளத்தின் உயரம்தான் உங்கள் உயரம் என்று வள்ளுவர் சொல்வது சரிதானே?”[15a] என்னும் கூற்றிலும் அமைத்துச் செல்வது குறிக்கத்தக்கது.

**உருவு கண்டு எள்ளாமை**

"உருவு கண்டு எள்ளாமை வேண்டும் என்று குறள் எச்சரிக்கிறது.
ஆனால், உலகம் அதைப் புரிந்துகொள்ளாமல் பலரைக்
காயப்படுத்தியிருக்கிறது"[16]

என்னும் கருத்தைக் குறிப்பிட்டு, எட்டுக் கோணலாகத் திருகியிருந்த உடல்வாகு கொண்ட 'அஷ்டவக்கிரர்' என்ற முனிவர், குள்ள உருவு கொண்ட 'லால்பகதூர் சாஸ்திரி' ஆகியோரை எடுத்துக்காட்டாகக் குறிப்பிட்டு உடலில் குறைபாடு உடையோர்க்கு நம்பிக்கை அளிக்கும் செய்திகளைப் பதிவு செய்துள்ளார்.

**குணம் நாடுதல்**

"இவர் நல்லவர், இவர் கெட்டவர் என்று மனிதர்களை
நீங்கள் பிரிக்கவே முடியாது.. 'குணம்நாடிக் குற்றமும் நாடி,
அவற்றுள் மிகைநாடி. .... முடிவு செய்யுங்கள்' என்கிற
திருக்குறளே அளவுகோல். பலமும் பலவீனமும் கலந்த
கலவையே மனிதன். கல்லுக்குள் ஈரம். நீருக்குள் நெருப்பு
நிச்சயம் உண்டு"[17]

என்னும் கூற்று, நல்ல, தீய பண்புகளின் கலவை தான் மனிதன் என்பதையும், அவனுக்குள் இருக்கும் இப்பண்புகளின் அடிப்படையில்தான் மனிதனின் குணத்தை முடிவுசெய்ய வேண்டும் என்பதையும் தெளிவுபடுத்துகிறது. இக்கருத்தில் மிளிரும் குறளாட்சி ஈண்டு சுட்டுதற்குரியது.

**அடக்கம் உடைமை**

"ஆமை தன் அவயங்களை அடக்கிக் கொள்வது போல,

பொருள்கள் இடத்தில் இருந்து பொறிகளை முழுதும்

உள்ளிழுக்க வல்லவனுக்கு நிறைஞானம் நிலை பெறுகிறது"[18]

என்னும் கருத்து,

'ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்

எழுமையும் ஏமாப் புடைத்து"[19]

என்ற குறளை ஒட்டியதாக அமைகிறது.

சொர்க்கம், நரகம் என்பதை விளக்கவந்த படைப்பாசிரியர், 'அறியாமை நம்மைக் கொண்டு போய்ச் சேர்க்கின்ற இருளுக்குப் பெயர் நரகம். நரகத்தை இருள் என்பது என்னுடைய கருத்து மட்டுமல்ல; திருவள்ளுவரும் கூட,

'அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை

ஆரிருள் உய்த்துவிடும்' என்று கூறியுள்ளதை நினைவு கூர்கிறார்".[20]

இக்கருத்தின்மூலம் அடக்கமுடைமையை அழுத்தமாகப் பதிவு செய்திருக்கும் படைப்பாசிரியரின் குறள் ஆளுமை பளிச்சிடுகிறது.

**மனத்தூய்மை**

மனத்தில் குற்றம் இல்லாத நிலையே அறம் எனப்படும். ஏனையவை ஆர்ப்பாட்டத் தன்மை கொண்டவை. இக்கருத்தை அடியொற்றி,

"அறம் என்பது என்று பலப்பல சொல்லிய திருக்குறள், மிக முக்கிய அறம் ஒன்றே ஒன்று என்று சொல்லியபோது மனத்தூய்மையைச் சொன்னது. 'மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன் ஆகுல நீர பிற' என்கிறது வள்ளுவம்"[21]

என்று படைப்பாசிரியர் கூறும் கருத்தும் அமைகிறது. மனத்தூய்மையே அறம் என்னும் தன் கருத்தைக் குறள் மூலம் விளக்கிச் செல்கிறார் ஆசிரியர்.

"தண்ணீர் உடல் அழுக்கைத்தானே நீக்கும். அது எப்படி உள்ள அழுக்கை நீக்க முடியும் என்ற கேள்விக்கு வள்ளுவர், 'புறத்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை வாய்மையால் காணப்படும்' என்று நீராட்டம் பாவநீக்கம் தொடர்பைக் கோடு போட்டுக் காட்டினார்"[22]

என்னும் கூற்றும், அகந்தூய்மையை வலியுறுத்துவதாக அமைகிறது. தலையாய அறமாகக் கருதப்படும் மனத்தூய்மையை விளக்க வந்த படைப்பாசிரியர், இரு வெவ்வேறு அதிகாரங்களிலுள்ள குறட்பாக்களை எடுத்துக்காட்டித் தம் கருத்தை நிறுவுகிறார்.

**அறம் செய்தல்**

அறம் செய்பவர்கள் நாளை செய்வதை விட இன்றே செய்ய வேண்டும் என்ற எண்ணமுடையவர்களாக விளங்க வேண்டுமென்கிறார். இதனை,

"அன்றறிவாம் என்னா தறஞ்செய்க மற்றது

பொன்றுங்கால் பொன்றாத் துணை" (குறள் : 36)

என்ற குறளின்வழி வலியுறுத்துகிறார்.[23]

**அவா அறுத்தல்**

ஆசை தான் பிறப்பின் விதை என்பதால் ஆசையை விட்டொழியச் சொல்கிறார் படைப்பாசிரியர்.

"அவாஎன்ப எல்லா உயிர்க்குமெஞ் ஞான்றும்

தவாஅப் பிறப்பீனும் வித்து.."[24]

என்னும் குறளை எடுத்தாள்வதன் மூலம், மனிதனின் ஏழுபிறப்பிற்கும் ஆசைதான் காரணம் என்ற கருத்தை முன்வைக்கிறார். ஆசையை விட்டுவிட்டால் ஏழு பிறப்பையும் வெல்லலாம் என்பது படைப்பாசிரியர் சுகி. சிவத்தின் கருத்தாக உள்ளது.

கோபம் என்பது காமம் என்ற ஆசையின் இலவச இணைப்பாகும். ஆசை இல்லாதவர்க்குக் கோபம் என்பதும் இல்லை. எனவே, ஆசையைத் துறக்க வேண்டும் எனக்கூறி,

"அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்

இழுக்கா இயன்றது அறம்"[25]

என்னும் குறளைச் சுட்டுகிறார்.

**கல்வி**

அடக்கம், பணிவு ஆகிய இரண்டும் கல்வியின் அடையாளங்களாகும்.

'நுணங்கிய கேள்விய ரல்லர் வணங்கிய

வாயின ராத லரிது"[26]

என்னும் குறளைச் சான்று காட்டிக் கல்வியின் பெருமையை எடுத்தியம்புகிறார். மேலும், அத்தகைய கல்வியைக் கசடறக் கற்பதோடு, அதன்படி நடக்க வேண்டும் என்பதையும் கூறிச் செல்கிறார்.

“கீதையைப் படித்தால் மட்டும் போதாது. அதை நடைமுறைப்படுத்த வேண்டும். ‘கற்க கசடற’ என்ற வள்ளுவர், ‘கற்றவை கற்றபின் நிற்க அதற்குத் தக என்றார்”[27]

என்னும் கூற்று, கீதையைப் படித்து அதன் படி நடக்கவேண்டும் என்பதை,

“கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக”[28]

என்னும் குறள்வழி விளக்குவதாக அமைகிறது. இளம் வயதினர் கற்றபடி நடந்து, இளமையில் செம்மைப்பட்டு, நல்லதை நோக்கிப் பயணிக்க,

“எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்”[29]

என்ற குறளைக் கூறி வாழ்வில் முன்னேற வழிகாட்டுவதும் இங்குக் குறிக்கத்தக்கது.

**துன்பத்தில் துவளாமை**

இறைவனிடம் வேண்டும்போது, துன்பங்களைத் தாங்கும் துணிவைத்தா என்று வேண்டுவது அறிவுடைமை. “துன்பங்களுக்குத் துவளக்கூடாது. இக்கட்டுகள் வெற்றியின் படிக்கட்டுகள். கடவுளை அடையக் கஷ்டங்கள் ஒரு வழி. துன்பமும் ஞான வீட்டின்

திறவுகோல்தான். வாருங்கள், வள்ளுவர் வழியில் கஷ்டங்களைக் கஷ்டப்படுத்துவோம்”[30] என்று இளைஞர்களை அழைத்து,

“இடும்பைக்கு இடும்பை படுப்பர் இடும்பைக்கு

இடும்பை படாஅ தவர்”[31]

என்னும் குறளைச் சான்று காட்டி, துன்பமே ஒருவரது வெற்றியின் வழிகாட்டி என்பதைப் பதிவு செய்கிறார்.

“மன்னிக்கிறவர்கள்.. மன்னிக்கப்படுவார்கள்’ என்றும், ‘ஒரு கன்னத்தில் அறைந்தால் மறுகன்னத்தைக் காட்டு’ என்கிற அருள் வசனமும் அழியாப் புகழ் பெற்றவை. இயேசு இதை அறிவிக்கிற அதே சமயத்தில் திருவள்ளுவர் இந்தியாவின் தென்முனையில் இருந்தபடி ‘இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால் என்ன பயத்ததோ சால்பு’ என்று பைந்தமிழ் பைபிள் பாடி முடிக்கிறார்”[32]

என்னும் கூற்றும், படைப்பாசிரியரின் குறளாட்சிக்கு மேலும் ஒரு சான்றாக அமைகின்றது. துன்பத்தால் துவண்டு, துன்பம் செய்தவர்க்கும் துன்பத்தைச் செய்யாமல் நன்மையே செய்க என்பது படைப்பாசிரியரின் கருத்தாக உள்ளது.

துன்பம் வருவது இயற்கை தான்; அதையும் ஏற்றுக்கொள்ள வேண்டும். அத்தகைய திடமனம் உடையவராக நீங்கள் மாற வேண்டும் என்பதை,

“இன்பம் விழையான் இடும்பை இயல்பென்பான்

துன்பம் உறுதல் இலன்”[33]

என்னும் குறளை எடுத்தாண்டு கூறிச்செல்கிறார். துன்பம் வாழ்க்கையில் வருவது இயல்பு என்று ஏற்றுக்கொள்வதோடு, இன்பத்தை மட்டுமே விழைகின்ற மனநிலையை மாற்றவும் வேண்டும். இதனை,

"இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்

துன்பம் உறுதல் இலன்"[34]

என்ற குறளின் வழிநின்று விளக்கிச் செல்வது சுட்டற்குரியது.

**புலால் உண்ணாமை**

ஊன் உண்ணாமையை வலியுறுத்த விரும்பிய ஆசிரியர்,

"புலால் உண்ணாமை கூட அஹிம்சையின் ஒரு கூறு. 'தன்

ஊன் பெருக்க பிறிதூன் உண்பவன் தெய்வநிலைபெறான்'

என்று தெய்வத் திருவள்ளுவர் தீர்ப்புரைக்கிறார்"[35]

என்று குறிப்பிட்டுச் செல்கிறார். இக்கூற்றில்,

"தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான்

எங்ஙனம் ஆளும் அருள்"[36]

என்னும் குறட்கருத்தை எடுத்தாண்டிருப்பது பளிச்சிடுகிறது.

**குறிப்பறிதல்**

பிறர் மனத்தில் உள்ளதை அப்படியே சொல்பவன், தெய்வநிலைக்குச் சமமானவன் என்னும் கருத்தை,

"மனத்தால் உயருகிறவன் மனிதன். அந்த மனத்திலிருந்தும் விலகி உயருகிறவன் தெய்வம். அப்படி மனம் கடந்த மகான்கள் பிறர்

மனத்தில் ஓடும் எண்ணங்களை எளிதாக உணர்ந்து சொல்லிவிடுவார்கள். அதனால் அவர்கள் தெய்வங்களே என்கிறார் திருவள்ளுவர்.

'ஐயப் படாஅது அகத்தது உணர்வானைத்

தெய்வத்தோடு ஒப்பக் கொளல்'

மனிதன் இப்படித்தான் தெய்வமாக முடியும்!"[37]

என்னும் பகுதி வாயிலாக அறியவியலுகிறது.

**வாழும் கலை**

மனித வாழ்க்கையை, பிழைத்தல், இருத்தல், வாழ்தல் என மூன்று வகைகளாகப் பிரித்துள்ளார். இன்றைக்குப் பலர் இருத்தல் நிலையில் தான் இருக்கின்றனர். சிலர் தேவையை அதிகப்படுத்திக் கொண்டு எப்பொழுதும் அமைதியின்றியே தத்தளித்துக் கொண்டிருப்பர் என்பதற்கு அரணாக,

"ஒருபொழுதும் வாழ்வது அறியார் கருதுப

கோடியும் அல்ல பல"[38]

என்ற குறளைச் சான்று காட்டியுள்ளார். இதன் மூலம் இப்படிப்பட்டவர்களெல்லாம் ஏதாவது செய்து கொண்டிருப்பவார்களே தவிர, வாழ்ந்து கொண்டிருப்பவர்கள் அல்லர்[39] என்பதைப் புலப்படுத்துகிறார் ஆசிரியர்.

எதையும் அனுபவித்துச் செய்வதே வாழும் முறையாகும். சான்றாகத் தேநீர் அருந்துவதைக் கூட அனுபவித்து, ரசித்துப் பருக வேண்டும் என்பது ஆசிரியரின் கருத்தாகும். 'கதகதப்பான அந்தத்

தேநீர்க் கோப்பையை ஸ்பரிசித்துத் தூக்கும் போது உண்டாகும் தொடு உணர்வையும், அந்தத் தேநீரை வழங்கும்போது உறவினர் கூறும் அன்பான வார்த்தைகளைக் கேட்பதையும் சேர்த்துக் கொண்டால்,

"கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்

ஒண்டொடி கண்ணே யுள"

என்று வள்ளுவன் பெண்ணைப் பற்றிப் பாடிய குறளை,

'கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்

One Tea கண்ணே உள'

என்று மாற்றி எழுதிக் கொள்ளலாமா என்று தோன்றுகிறது.[40] இப்பகுதி, அனுபவித்தலே வாழ்க்கை என்பதை விளக்குவதோடு, தம் கருத்தை வலுப்படுத்துவதற்காகக் குறளை மாற்றியமைத்துக்கொள்ளும் ஆசிரியரின் போக்கையும் பறைசாற்றுவதாக அமைகிறது.

சாப்பிடும் முறையையும் ஒரு கலையாகக் கூறியுள்ளார் ஆசிரியர். 'சாப்பிடுவது ஒரு சடங்கல்ல; உயிர் ஆதாரமான செயல். சாப்பிடுவது கூட ஒழுங்காக இல்லாதவர்களால் இதர காரியங்களிலும் ஒழுங்காக இருக்க முடியாது'.[41] சாப்பிடும் முறை பற்றிக் கூறவந்த ஆசிரியர், முழுமையும் வள்ளுவரைச் சார்ந்தே கூறியுள்ளார். இதனை,

"திருவள்ளுவர் முதல் பல சித்தர்கள் வரை சாப்பிடும் முறை பற்றிக் கூறியுள்ளனர். 'மருந்து' என்னும் அதிகாரத்தில் ஏழு குறட்பாக்களில் உணவுண்ணும் முறையை வள்ளுவர் வரையறை செய்கிறார். உணவே மருந்து என்பது உயர்ந்த கொள்கை"[42]

என்று கூறுவதன் வாயிலாக அறியலாம்.

**பொருள்**

உலகம் பலப்பொருட்களால் ஆனதைப் போல, வாழ்க்கை பொருளின் அடிப்படையிலானது. இதனைப் படைப்பாசிரியர் சுகி. சிவம்,

“பொருள் சார்ந்தே இயங்கிக் கொண்டிருக்கும் உலகத்தில்

பொருளீட்டித்தான் ஆகவேண்டும். நீங்கள் பொருளாதாரத்தில்

தன்னிறைவு பெறாவிட்டால் வாழுதலைப் பற்றியே

சிந்திக்க முடியாது”[43]

என்று குறிப்பிட்டுச் செல்கிறார். இக்கருத்திற்கு அரணாக,

“பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்

பொருளல்ல தில்லை பொருள்”[44]

என்னும் குறளை எடுத்தாண்டிருப்பது கருதுதற்குரியது.

**துன்பத்திற்குக் காரணம்**

துன்பத்திற்குக் காரணம் ஆசையே. ஆசையைக் கைவிட்டால் துன்பமில்லை. இக்கருத்தை விளக்கப்புகுந்த ஆசிரியர்,

“போதிமரம் போதித்த விஷயம் ஞாபத்தில் வரட்டும். ஆசையே

துன்பத்திற்குக் காரணம். ஆசை இல்லையேல் அவஸ்தை இல்லை.

திருவள்ளுவர் சொல்கிறார்.

‘யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்

அதனின் அதனின் இலன்'

ஆசைகள், பற்றுகள் நம் துன்பத்தின் அடிப்படைக் காரணம். அவை அச்சத்தையும், கவலையையும் தந்து வாழ்வின் இன்பத்தைக் குலைக்கின்றன"[45]

என்று குறிப்பிட்டுச் செல்கிறார். இதே கருத்தமைந்த பகுதி கந்தர் அநுபூதியிலும்[46] அர்த்தமுள்ள வாழ்விலும்[47] இடம்பெற்றுள்ளது குறிக்கத்தக்கது.

பொருட்பற்று, மனைவி மக்கள் பற்று, தன் மீதுள்ள பற்று ஆகிய மூவகைப் பற்றுகளையும் விட்டுவிட்டால் துன்பம் இல்லை. இவற்றை விட்டு விட்டால் வேறு எதையும் பற்ற முனையும்போது,

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்

பற்றுக பற்று விடற்கு"[48]

என்னும் குறளை நினைவூட்டிச் செல்கிறார்.

**துறவு**

நான், எனது என்பனவற்றை விட்டு நீங்குதலே துறவாகும். உடைமை மனப்பான்மை ஒழிந்தால் ஞானம் பெறலாம். துறவு வாய்க்கும். "மனிதனுடைய பல பிரச்சினைகளுக்குக் காரணம் அவனது உடைமை மனோபாவம். நான் என்பது அகங்காரம். எனது என்பது மமகாரம். அகங்காரமும் அதிலிருந்து பிறக்கும் மமகாரமும்தான் நம்மைத் தொடர் போராட்டங்களிலும் துக்கத்திலும் ஆழ்த்துகின்றன. இதனைத் திருவள்ளுவர்,

'யான்எனது என்னும் செருக்கருப்பான் வானோர்க்கு

உயர்ந்த உலகம் புகும்

என்று எழுதுகிறார்"[49]

என்னும் கூற்று இங்கு நினைவுகூரத்தக்கது.

மேலும், "உள்ளும் புறமும் ஒன்றாய் இருப்பவரே மோலோர். 'அடுத்தது காட்டும் பளிங்கு போல்' என்று பளிங்கின் இயல்பை வள்ளுவர் வெளிப்படுத்துகிறார்"[50] என்னும் கருத்தும் துறவின் இயல்பைக் காட்டுவதாக அமைகிறது. துறவு குறித்து ஆசிரியர் தம் கருத்தை நிறுவ, குறட்பாக்களை எடுத்தாண்டுள்ளமை இவண் சிறப்பாகச் சுட்டத்தக்கது.

**அம்மா – அப்பா**

அம்மா, அப்பா எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு அறம் என்பது அப்பா என்றும், அன்பு என்பது அம்மா என்றும் கூறி,

"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை

பண்பும் பயனும் அது"[51]

என்ற குறளைக் எடுத்துக்கூறி, அக்குறளுக்குப் புதுப்பொருள் விளக்கம் தந்து செல்வது குறிக்கத்தக்கது.

"மட்டுவார் குழலியும் தாயுமானவரும் பெருந்தன்மையான

பெற்றோர்கள் 'ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும்', 'இவன் தந்தை

எந்நோற்றான் கொல்' என்ற இருகுறளின் பொழிப்புரையாக

மலைக்கோவிலில் இருப்பவர்கள்"[52]

என்னும் கூற்றில், ஆசிரியரின் குறளாட்சி தெற்றெனப் பளிச்சிடுகிறது.

**அறிவுடைமை**

மனிதனுக்குப் பயமும் தேவையான ஒன்றாகும். பயம் ஏற்படாவிட்டால் அது ஆபத்தாக அமையும்.

" 'அஞ்சுவது அஞ்சாமை பேதைமை அஞ்சுவது

அஞ்சல் அறிவார் தொழில்'

என்கிறான் வள்ளுவன். அஞ்ச வேண்டியவற்றிற்கு

அஞ்சுவது தான் அறிவுடைமை என்பது வள்ளுவன் வாக்கு"[53]

என்னும் கருத்து, அறிவுடைமை குறித்த குறளை, ஆசிரியர் கையாண்டிருக்கும் பாங்கினை எடுத்துக்காட்டுகிறது.

மேலும்,

"'எனக்கு இது பிடித்திருக்கிறது. இது பிடிக்கவில்லை என்று

முடிவெடுக்காமல் திருக்குறள், நாலடியார் போன்ற நீதிநூல்கள்,

சாத்திர நூல்கள் அளவின்படி முடிவெடுத்துத் தேவநிலை எய்தலாம்"[54]

என்னும் கருத்து, திருக்குறள் முதலான நூல்களைப் படித்து அதன்படி நடந்தால் தெய்வநிலையை எட்டலாம் என்பதைப் புலப்படுத்துகிறது.

இவ்வாறு, வாழ்வியல் கருத்துக்களை வழங்கும் படைப்பாசிரியர், வள்ளுவரின் வாய்மொழியைப் பொன்னே போல் நேரடியாக எடுத்தாண்டுள்ளதையும், கருத்துக்கள் வழி பல குறள்களைப் பொருத்தமுறச் சான்று காட்டியிருப்பதையும் நோக்குமிடத்து, திருக்குறளில்

ஆசிரியர் ஆழ்ந்த பற்றுடையவராக விளங்குகிறார் என்று கூறுவது பொருத்தமுடையதே.

ஆய்விற்கு எடுத்துக்கொண்டுள்ள நூல்களில் இடம்பெறும் காப்பியச் செய்திகளும் இங்குக் குறிக்கத்தக்கன.

**காப்பியச் சிந்தனைகள்**

படைப்பாசிரியர் சுகி. சிவம் தம் படைப்புகளில் பல்வேறு இலக்கியப் பகுதிகளை நேரடியாகவும், சிலவிடங்களில் கருத்துக்களை மட்டும் எடுத்தாண்டுள்ளார். அவ்வகையில் காப்பிய இலக்கியங்களுள் சிலப்பதிகாரத்தின் கண்ணகி குறித்து மட்டும் இரு நூல்களில் குறிப்பிட்டுச் செல்கிறார். திருமணமான புதுப்பெண்ணுக்கு வயதான பெண்மணி ஒருத்தி யோசனை சொல்வதைக் குறிப்பிட்ட படைப்பாசிரியர், சரியான யோசனை சொல்ல வேண்டும் என்பதற்காகக் கூறும்,

> "சிலப்பதிகாரத்தில் கோவலனைக் கவர கண்ணகிக்குத்
> தோழி யோசனை சொன்னாள். 'பீடு அன்று'
> என்று மறுத்தாள் கண்ணகி"[55]

என்னும் பகுதியைச் சான்றாகச் சுட்டமுடிகிறது. மன்னராட்சிக் காலத்தில் மன்னனை எதிர்த்து வழக்காடி வெற்றிபெறும் கண்ணகியின் தீரம் பாராட்டிற்குரியது என்பதை வெளிப்படுத்த எண்ணிய ஆசிரியர்,

> "தமிழ்நாட்டில் கண்ணகியின் தீரம் அவளைக் கடவுளாக்கியது.
> அரசாங்க அலுவலகம் போவதற்கு நம் ஊர் படித்த பெண்கள்
> அஞ்சுகிறார்கள். அதிகாரிகளைப் பார்த்தால் அலறுகிறார்கள்.
> குடியாட்சிக் காலத்திலேயே இப்படி. ஆனால் எத்தனையோ

நூற்றாண்டுகளுக்கு முன்பு முடியாட்சிக் காலத்தில் ராஜாவைப் பார்த்துத் “தேரா மன்னா?” என்று அழைக்க எவ்வளவு தைரியம் வேண்டும்? அந்தத் தீரமே அவளது தெய்வீகம். தைரியமே அவளைத் தெய்வமாக்கியது”[56]

என்று கூறியுள்ளார். இக்கூற்றில் கண்ணகியின் துணிவு வெளிப்படுகிறது. இத்தகைய துணிச்சலை இன்றைய பெண்களும் பெற வேண்டும் என்ற ஆசிரியரின் கருத்தும் புலப்படுகிறது.

கண்ணகியின் சிலம்பை விற்றுப் பொருளீட்ட முனைந்த கோவலனைக் கொன்ற மன்னன் பாண்டியனிடம் வழக்குரைத்து நீயே குற்றவாளி என்று நிரூபித்தாள் கண்ணகி. இச்செய்தி, சட்டம், தர்மம் என்று வந்துவிட்டால் அது எல்லோருக்கும் ஒன்றுதான் என்ற கருத்தை விளக்குவதற்காகக் கையாளப்பட்டிருக்கிறது.

“அரசர் சிம்மாசனத்திலிருந்து கீழே விழுகிறார். ‘யானோ அரசன், யானே கள்வன்’ என்றார். நான் திருடன் என்றார். ராஜாவுடைய சிலம்பு கோவலன் வீட்டில் இருந்தால் கோவலன் எப்படித் திருடனோ, அதேபோல் கண்ணகியினுடைய கால் சிலம்பு ராஜா வீட்டில் இருந்தால் ராஜாவும் திருடன்தானே?”[57]

என்னும் கருத்து சிலம்பின் ஆட்சியைத் தெளிவுபடுத்துகிறது.

**பெரியபுராணம்**

அறுபத்து மூன்று சிவனடியார்களைப் பற்றிக் கூறும் நூல் பெரியபுராணமாகும்.

> "திருநீலகண்டர் தவறு செய்தபோது தீண்டமாட்டேன் என்று சபதம் செய்த அவர் மனைவி அயலாருக்கு அது தெரியாமல் வாழ்ந்தாள் என்பதை 'அயல் அறியாமல் வாழ்ந்தார்' என்று சேக்கிழார் எழுதுகிறார்"[58]

என்னும் பகுதியில், திருநீலகண்ட நாயனார் புராணத்தில் வரும் பாடலடி ஒன்றை எடுத்தாண்டு செய்தியைக் கூறும் போக்கைக் காணவியலுகிறது. மெய்ப்பொருள் நாயனாரை சிவனடியார் வேடமிட்டு வந்த முத்தநாதன் என்பவன் கொலை செய்வதையும், அவனைக் கொலை செய்ய முயன்ற காவலனிடம் 'தத்தா அவர் நம்மவர்'[59] என்று குறிப்பிட்டுச் செல்வதும் இங்குக் குறிக்கத்தக்கன.

மன்னன் கட்டிய கோயில் கும்பாபிசேகத்திற்குச் செல்ல மறுத்து, தன் அடியார், பூசலார் நாயனார் தன் உள்ளத்திலேயே கட்டிய கோவிலுக்குச் செல்கிறேன் என்று இறைவன் கூறியதைப் பதிவு செய்த படைப்பாசிரியர்,

> "நீ குறித்த அதே நேரத்தில் என் அன்பன், பூசலார் என்பவன் திருநின்ற ஊரில் கட்டிய கோயிலுக்குக் கும்பாபிஷேகம். அங்கு நாம் செல்வதால் உன் கோயிலுக்கு வர இயலாது' இது சிவபெருமானின் தீர்மானம்"[60]

என்று பூசலார் நாயனார் பற்றிக் குறித்த செய்தி இங்கு நினைவு கூரத்தக்கது. காட்டில் வேட்டையாடிச் சென்ற திண்ணன், கண்ணப்பரின் கண்ணில் குருதி வடிவதைக் கண்டு, அதற்கு மருந்திடப் பச்சிலை பறித்துச் சாறு எடுத்து இடுகிறார். அதன்பிறகும் இரத்தம் வடியாததால்

தன் கண்ணை அப்பியதும், மறுகண்ணிலும் நீர் வடிந்ததைப் பார்த்து மறுகண்ணையும் தோண்டி எடுத்து அப்ப முடிவு செய்த திண்ணனிடம், ‘நில்லு கண்ணப்பா! நில்லு கண்ணப்பா!’ ”[61] என்று இறைவன் கூறியதாக வரும் பகுதி, கண்ணப்ப நாயனார் குறித்த செய்திகளைச் சுட்டிச் செல்வதாக அமைகிறது. மேலும்,

> “நாயன்மார்கள் மனிதனும் தெய்வமாக முடியும் என்பதற்கான அடையாளம். அவர்களில் பலர் தியாக புருஷர்கள். கண்ணப்பர் தம் கண்களைத் தியாகம் செய்கிறார். சிறுத்தொண்டர் தம் பிள்ளையையே தியாகம் செய்கிறார். இப்படிப் பல வரலாறுகள்”[62]

என்னும் கருத்தும், இங்குக் குறிக்கத்தக்கது. கந்தர் அநுபூதியிலும்[63] கண்ணப்ப நாயனார், இயற்பகை நாயனார், சிறுத்தொண்ட நாயனார், அதிபத்த நாயனார் ஆகியோர் குறித்த செய்திகள் இடம்பெற்றுள்ளன. மேலும் சாக்கிய நாயனார், சண்டேசுவர நாயனார் பற்றிய குறிப்புகளும் காணப்பெறுகின்றன. எஞ்சியவற்றுள் இத்தகைய செய்திகள் இடம்பெறவில்லை.

**கம்ப ராமாயண ஆளுமை**

சென்னைக் கம்பன் கழகத்தின் துணைத்தலைவராக இருந்து மறைந்த ஏ.வி. மெய்யப்பன், நினைவாக ஆண்டுதோறும் ஒரு நினைவுச் சொற்பொழிவு நடத்தப்பட்டு வருகிறது. அதன்படி சென்னை, ஏவிஎம் ராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில் படைப்பாசிரியர் சுகி. சிவம் நிகழ்த்திய சொற்பொழிவே, நூல் வடிவம் பெற்றுள்ளது. கம்பனுக்கும்

இராமனுக்கும் இராமாயணத்துக்கும், முந்தைய காலத்தில் எத்தகைய மதிப்பிருந்தது; பிற்காலத்தில் எவ்வாறான மதிப்பு கிட்டியது; எதிர்கால நிலை எவ்வாறு அமையும் என்ற கோணத்தில், கம்பரையும் ராமாயணத்தையும் விரிவாக அலசியிருக்கிறார் படைப்பாசிரியர்.

"மனித குலத்தின் நெடிய சிக்கல்களுக்கான மருத்துவமூலிகை
இராமாயணம். பல்லாயிரம் மக்களின் இரத்தத்தில்
இரசாயன மாறுதல் நிகழ்த்திய அசாதாரண நூல்
இராமாயணம்"[64]

என்னும் கருத்து, இராமாயணம் குறித்த ஆசிரியரின் பார்வையைத் தெளிவுபடுத்துகிறது. தமிழ் கற்ற புலவர்கள், வித்வான்கள், பண்டிதர்கள் மட்டுமே அப்போது கம்பராமாயணம் கற்க முடிந்தது. பிற்காலத்தில் வாரியார் கம்பனையும் இராமாயணத்தையும் பல்லாயிரக்கணக்கான மக்கள் முன்பு கொண்டு நிறுத்தினார். அதன்பிறகு கம்பன் கழகங்கள் கம்பனையும் அவன் காவியத்தையும் அனைத்துத் தரப்பினரும் ரசிக்கும் வகையில் பல்வேறு விழாக்களை நடத்தின. இவ்வாறு கம்பனும் இராமகாதையும் பலருக்கும் அறிமுகமான நிலையில், கதை, கருத்துக்கள், விழாக்கள், சமயம், கவிதை அனுபவம், சிறப்பு, சமயம், அரசியல் எனப் பல கோணங்களில் ஆராய்ந்து, எதிர்காலத்தில் இன்னும் ஏற்றம் பெறுவதற்கான வழிமுறைகள் குறித்தும் பலகருத்துக்களை இந்நூலில் படைப்பாசிரியர் பதிவு செய்துள்ளார்.

“திருவள்ளுவர் வார்த்தைகளை வாழ்க்கையாக ஆக்கியவன் இராமன். அந்த இராமனது வாழ்க்கையை வார்த்தைகளாக ஆக்கியவன் கம்பன்”[65]

என்னும் கூற்று இங்குச் சிந்திக்கத்தக்கது.

வேட்டுவர் குலத்தைச்சார்ந்த குகனுடன் இராமன் தோழமை பூண்டிருந்தைப் பற்றிக் குறிப்பிடும் ஆசிரியரின்,

“இனம், ஜாதி கடந்த அன்பு ஒன்றே உலகைப் பிணைக்கும் என்பதைக் குகப் பெருமாள் மூலம் ராமர் அறிவித்தார். வருங்காலத்தில் இந்த ஈரப்பசை மிகமிகத் தேவைப்படும் என்றே தோன்றுகிறது”[66]

என்னும் கருத்து, கம்பராமாயணக் கதை பற்றியதாகிறது. சிவன், பிரமன், திருமால் ஆகிய மூவரும் இணைந்து ராமனாய் மானுட வடிவில் வந்தனர் என்பதே கம்பனின் இறைக்கோட்பாடாகும். இதனை,

“‘தேறினன் அமரர்க்கெல்லாம் தேவராம் தேவர் அன்றே
மாறிஇப் பிறவியில் வந்தார் மானிடராகி மன்னோ;
ஆறுகொள் சடிலத்தானும் அயனும் என்றிவர்கள் ஆதி
வேறுள குழுவை எல்லாம் மானுடம் வென்றதன்றே’

என்னும் இராமாயணப் பாடலை எடுத்துக்காட்டி, ‘ஒரு பிரிவில் நின்றாலும், வேறுபல பிரிவும் நியாயமே என்கிற கம்பனது சமயப்பொறை, வருங்காலத்தின் சமூக ஒற்றுமைக்கு மிகமிகத் தேவை’”[67] என்று கருத்தறிவிப்பதன் மூலம் அறியவியலுகிறது.

கம்பராமாயணத்தின் கருத்துக்களை இன்றைய சூழலில் எவ்வாறு பயன்படுத்தினால் தனிமனிதனையும், நாட்டையும் மேம்படுத்தலாம் என்ற கோணத்தில் சிந்தித்துள்ளார் ஆசிரியர்.

"இன்று அமைச்சர்களைத் தேர்வு செய்யும் பொழுது சாதி, மாவட்டம், தலைமைக்கு விசுவாசம் இப்படிப் பல தகுதியற்ற விஷயங்களே தகுதிகள். ஆனால் அமைச்சர்களின் தகுதியைக் கம்பர் பட்டியல் இடுகிறார்.

'குலமுதல் தொன்மையும் கலையின் குப்பையும்
பலமுதல் கேள்வியும் பயனும் எய்தினார்'

என்பார் கம்பன். அது மட்டுமா?

'உற்றதுகொண்டு மேல்வந்துறுபொருள் உணரும் கோளார்
மற்றது வினையின் வந்ததாயினும் மாற்றல் ஆற்றம்
பெற்றியர் பிறப்பின் மேன்மை பெரியவர் அரியநூலும்
கற்றவர், மானம் நோக்கின் கவரிமா அனைய நீரார்'

இவையாவும் அமைச்சரின் இலக்கணங்கள். அரசு, அமைச்சு பற்றிய கம்பனது கருத்துக்களை விளக்கும் இப்பகுதியை எல்லா மொழிகளிலும் மொழிபெயர்த்து நமது அரசியல்வாதிகளிடம் கொடுக்கவேண்டும். அதை அவர்கள் படிக்க வேண்டும்"[68]

எனவரும் பகுதியைச் சான்றாகச் சுட்டமுடிகிறது. கம்பராமாயணம் இன்றைக்கு எப்படிப் பயன்தரும் என்ற சிந்தனையோட்டத்தில் உருவான பல்வேறு கருத்துக்களை இந்நூலில் பதிவு செய்துள்ளார் படைப்பாசிரியர் சுகி.சிவம்.

"கம்பனது அரசியல் கருத்துக்கள் காலத்தை வென்றவை.

உன்னதமான தேசத்தை உருவாக்கும் வலிமைமிக்கவை.

கம்பன் நேற்று பயன்பட்டதைவிட இன்றும் நாளையும்

அதிகம் பயன்படக்கூடிய இடம் அரசியல் என்பதைத்

தயக்கம் இன்றிப் பதிவு செய்ய விரும்புகிறேன்"[69]

என்னும் கருத்து ஈண்டு நோக்கற்பாலது. கம்பராமாயணமும் கம்பனும் எதிர்காலத் தலைமுறைக்குப் புரியும் வகையிலும் பயன்படும் வகையிலும் விளங்கப்பல நல்ல வழிமுறைகளையும் இந்நூல் வகுத்துத் தந்துள்ளது.

"உலகம் முழுவதும் பரவியுள்ள தமிழர்கள் கம்பனைத்

தோண்டித் துருவி ஆராய, கணினி இணைய தளத்தில்

கம்பன் கால் ஊன்றியாக வேண்டும். முன்பு பதிப்பாசிரியர்களைக் கூட்டிப் புத்தகம் பதிப்பித்த மாதிரி கணினியில் கம்பனை நுழைக்கத் திட்டமிட்டால் கம்பனின் விஸ்வரூபம் புலப்படும். கம்பன் பெற்ற சாகாவரம் காப்பாற்றப்படும்[70]

என்னும் கருத்தினைச் சான்றாகச் சுட்டலாம்.

கம்பராமாயணத்தின் ஒரு பகுதியான சுந்தரகாண்டத்தை மட்டும் எடுத்துத் திறனாய்வு செய்கிறது, 'சுந்தரகாண்டம்' என்னும் இந்நூல்.

சுந்தரகாண்டம் படித்தால் துன்பம் தீரும் என்பது பொதுவான நம்பிக்கை. ஆனால் மக்கள் மனத்தில் நம்பிக்கையை விதைப்பதே சுந்தரகாண்டம் என்பது படைப்பாசிரியரின் பார்வையாக அமைந்துள்ளது. இதனை அரண்செய்யும் வகையில்,

> "வெல்லமுடியாத துன்பம் என்றும் எதுவும் இல்லை. எத்தனை பெரிய துக்கங்களும் வெயில் முன்பனிபோல் காலமாற்றத்தால் மறையும் என்று தயவு செய்து நம்புங்கள். நம்பிக்கையை – அதுவும் வாழவேண்டும் - வாழமுடியும் என்ற நம்பிக்கையை மக்கள் மத்தியில் விதைப்பது சுந்தரகாண்டம் என்பதால்தான் இதனை எழுதவே நான் துணிந்தேன்"[71]

என்னும் கூற்று அமைகிறது. இராமன் வருவானா - இல்லையா என்ற மனக்குழப்பத்தில் இருந்த சீதை, தற்கொலைசெய்ய முயற்சித்தபோது, இராம நாமத்தை சொல்லப் பேருருக்கொண்டு நின்ற அனுமனைக் கண்டதும், சீதை நம்பிக்கை கொள்கிறாள். அரக்கர் குலத்தை வேரோடு அறுத்துவிட்டேன் என்ற நம்பிக்கையோடு வெளிப்படுத்துகிறாள். இராமனின் புகழைப் பலகாலம் நிலைநிறுத்தத் தோன்றியவன் என்று சீதை அனுமனைப் புகழ்ந்ததை அடக்கத்துடன் மறுத்து

"'எண்ணற் கரிய படைத்தலைவர்

இராமற் கடியார்; யானவர்தம்

பண்ணைக் கொருவன் எனப்போந்தேன்;

ஏவல் கூவல் பணிசெய்வேன்'

என்கிறார் அனுமன். இராமனுக்கு ஏவல் பணிசெய்யும் எடுபிடியே இப்படி என்றால் பிறர் எப்படியோ என்று வானர சேனை மீது சீதைக்கு நம்பிக்கை தோன்றச் செய்தார் அனுமன். என்றைக்கும் தனது குருவின் மீது மரியாதை உள்ளவர் பெறுகிற உன்னத வெற்றியைத் தன்மீது மட்டும் நம்பிக்கை உள்ளவர் பெறமுடியாது. இது இயற்கை நியதி' "[72] என்னும் பகுதி, நம்பிக்கையற்றிருந்த சீதை நம்பிக்கை பெற்றதை எடுத்தியம்புகிறது. துன்பத்தை வென்று வாழமுடியும் என்ற நம்பிக்கையை ஊட்டும் விதத்தில் இக்காட்சியை விவரித்துச் செல்கிறார் ஆசிரியர்.

"இராமாயணத்தைப் பலர் மோட்சகாவியம் என்பார்கள்.

என் பார்வை வேறு. அது தன்னம்பிக்கைப் பூங்கா. எப்படி? எதை இழந்தாலும் தன்னம்பிக்கையை இழக்காதே என்பது இராமாயணத்தின் ஒரு கோணம்"[73]

என்னும் கருத்து ஈண்டு இணைத்து நோக்கத்தக்கது.

கம்பன் நேற்று - இன்று – நாளை, சுந்தரகாண்டம் ஆகிய இரு நூல்களும் கம்பராமாயணத்தை மையமாகக் கொண்டு படைக்கப்பட்ட நூல்களாகும். ஆகவே, இவ்விரு நூல்களிலும் கம்பராமாயணக் கதை நிகழ்வுகள், செய்திகள் ஆகியவற்றோடு அவை குறித்த ஆசிரியரின் கருத்துக்களும் பரவிக்கிடக்கின்றன. ஆய்விற்கு எடுத்துக்கொண்ட நூல்களுள், இராமாயணம் குறித்த இவ்விரு தனிநூல்கள் நீங்கலாக, நினைப்பதும் நடப்பதும், ஒருதலம், ஒரு பாடல், ஒரு நயம், இந்தநாள் இனிய நாள், அர்த்தமுள்ள வாழ்வு, மனிதனும் தெய்வமாகலாம், ஆன்மிகப் பூங்காவில் அதிசயத்துளசி, நல்லகுடும்பம் நமது இலட்சியம்,

உணவே உயிரே, நல்ல வண்ணம் வாழலாம், ஞானமலர்கள் முதலான பத்து நூல்களிலும் இராமாயணக் கதை நிகழ்ச்சிகளை ஆங்காங்கே பொருத்தமான இடங்களில் சுட்டிச்செல்கிறார் படைப்பாசிரியர். சான்றாக ஓரிரண்டு இடங்களைச் சுட்டலாம்.

தசரதர் இராமனிடம் அரசு உனக்கு என்றபோதும், கைகேயி காட்டுக்குச் செல் என விடுத்தபோதும், ஓவியத்தில் வரைந்த தாமரையாக இருக்கிறான் இராமன். 'இன்ப துன்பங்களால் பாதிக்கப்படாத ஞானி ஸ்ரீராமன் என்று அவரது சமநிலையை

'மெய்த்திருப்பதம் மேவு என்ற போதினும்
இத்திருத்துறந்து ஏகு என்ற போதினும்
சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை
ஒத்திருக்கும் முகத்தினை உண்ணுவாள்,

என்று பாடுவதன் வாயிலாகக் கொண்டாடுகிறார் கம்பர்'.[74]

இச்செய்தியை ஞானமலர்களிலும் பதிவு செய்துள்ளார் ஆசிரியர்.

"தாமரை மலரும் வாடும். மீண்டும் மலரும் வாடும், ஆனால் ஓவியத்தில் வரைந்த தாமரை மலராது, வாடாது, என்றும் ஒன்றுபோல அழகு காட்டும். அதனால்தான் இன்ப துன்பங்களால் பாதிக்கப்படாத இராமனுடைய நல்லறிவை ஓவியத் தாமரை போன்ற முகம் என்று எழுதினான் கம்பன்"[75]

என்னும் கருத்து. சீரிய விளக்கமாக அமைகிறது. மேலும் இதே நாளில், இராமனுக்கு முடிசூட்டுவது குறித்து ஆலோசனை நடத்தி தசரதர் முடிவெடுத்த செய்தி, இராமனின் வெற்றிச் செய்தியை அறிவிக்கச்

சென்ற அனுமன், நெற்றி வகிட்டில் செந்தூரத்துடன் இருந்த சீதையைக் காண்பதும், இப்படி நெற்றியில் செந்தூரம் இட்டால் கணவனுக்கு வெற்றி கிட்டும் என்றும் சீதை கூறுவது முதலான செய்திகளும் குறிப்பிடப்படுகின்றன. மனிதனும் தெய்வமாகலாம் என்ற நூலில்,

"இலங்கைக்குப் போன அனுமன் அசோக வனத்தை அழித்தபோது இராவணனின் ஐந்து சேனாதிபதிகள் வந்து சண்டையிட்டனர். அவர்களை அனுமன் வென்றான். அந்தக் காட்சியைக் கம்பன் வர்ணித்த போது ஐந்து பொறி புலன்கள் போல ஐவர். அறிவு போல் அனுமன். அறிவு புலன் இன்பங்களை வெல்லுவது போல் அனுமன் அவர்களை வென்றான். 'அஞ்செனும் புலன்களொத்தார். அனுமனும் அறிவை யொத்தான்' என்கிறது கம்பராமாயணம்"[77]

என்னும் பகுதி,

"வஞ்சமுங் களவும் வெ.ஃ.கி வழியலா வழிமே லோடி
நஞ்சினும் கொடிய ராகி நவைசெயற் குரிய நீரார்
வெஞ்சின வரக்க ரைவ ரொருவனே வெல்லப் பட்டார்
அஞ்செனும் புலன்க ளொத்தா ரவனுநல் லறிவை யொத்தான்"[78]

என்ற பாடலினை அடியொற்றி அமைவதாகும்.

நல்ல குடும்பம் நமது இலட்சியம் என்ற நூலில் இராமனைப் பிரிந்த சீதை, இராமன் எவ்வாறு துன்பப்படுகிறானோ என்று கவலையுறுகிறார். 'அசோக வனத்தில் சிறையிருக்கிற சீதையின் சோகத்தைப் படம்பிடித்துக் காட்டும் கம்பர், தான் இப்படிக் கஷ்டப்பட நேருகிறதே என்று வருந்தாமல்,

இராமர் எப்படி எல்லாம் கஷ்டப்படுகிறாரோ என்று வருந்துவதாகச் சித்தரித்துள்ளார்.’[79]

“அருந்து மெல்லட காரிட வருந்துமென் றழுங்கும்
விருந்து கண்டபோ தென்னுறு மோவென்று விம்மும்
மருந்து முண்டுகொல் யான்கொண்ட நோய்க்கென்று மயங்கும்
இருந்த மாநிலஞ் செல்லரித் திடவுமாண் டெழாதாள்”[80]

என்னும் பாடலின் முதலடியைச் சுட்டி, இராமனுக்கு யார் உணவிடுவார்கள் என்று சீதை வருந்துவதாகக் குறித்துச் செல்கிறார் ஆசிரியர். இச்சான்றுகளின் வழி, படைப்பாசிரியர் கம்பராமாயணத்தில் தோய்ந்த ஞானம் பெற்றவர் என்பது பெறப்படுகிறது.

**மகாபாரத ஆளுமை**

கம்பராமாயணத்தைப் போன்றே மகாபாரதக் கதை நிகழ்வுகளையும் படைப்பாசிரியர் தம் நூல்களில் பரவலாக எடுத்தாண்டுள்ளார். ஆய்வு மேற்கொண்டுள்ள நூல்களுள், இந்த நாள் இனிய நாள், படிக்க ஜெயிக்க, அர்த்தமுள்ள வாழ்வு, ஆன்மிகப் பூங்காவில் அதிசயத் துளசி, மனிதனும் தெய்வமாகலாம், நல்ல குடும்பம் நமது இலட்சியம், ஏமாற்றாதே ஏமாறாதே, வாழ்ந்து பார்க்கலாம் வா, கனவு மெய்ப்படும், நல்ல வண்ணம் வாழலாம், மனசே, நீ ஒரு மந்திரச்சாவி, ஞானமலர்கள் முதலான பன்னிரண்டு நூல்களில் மகாபாரத ஆளுமை வெளிப்படுகின்றது. சான்றாகச் சில பகுதிகளைச் சுட்டமுடிகிறது.

வில்வித்தை ஆசான் துரோணாச்சாரியார் தம் மாணவர்களின் மதிநலத்தைச் சோதிக்க விரும்பி நடத்திய மகாபாரதக் காட்சி படிக்க..

ஜெயிக்க, கனவு மெய்ப்படும் ஆகிய இருநூல்களில் எடுத்தாளப் பெற்றுள்ளது. தருமர், துரியோதனன், அர்ச்சுனர் ஆகிய மூவரிடமும் வீழ்த்தவேண்டிய இலக்குத் தெரிகிறதா என வினவுகிறார் துரோணர். அதற்கு அர்ச்சுனன் மட்டுமே. குறி பார்த்து வீழ்த்த வேண்டிய காக்கையின் கழுத்தைத் தவிர வேறு எதுவும் தெரியவில்லை என்று கூறுகிறான். இந்நிகழ்வை எடுத்துக்காட்டி,

> "கல்வி கற்க இலட்சியத்தில் கவனம், மன ஒருமைப்பாடு
> மிக மிக அவசியம்"[81]

என்னும் கருத்தைக் கூறியிருப்பது பொருத்தமுடையதாகிறது. இதே நிகழ்வை மற்றோர் இடத்திலும் எடுத்தாண்டு, 'இலட்சியத்தில் மனம் குவிகிற போது எதையும் சாதிக்க முடியும்'[82] என்று கருத்துக் கூறியிருப்பதும் இங்கு இணைத்து நோக்கத்தக்கது.

கர்ணனும் துரியோதனன் மனைவி பானுமதியும் சொக்கட்டான் ஆடும்போது, துரியோதனன் வர, பணிவு காரணமாக எழுந்து செல்ல முற்படும் பானுமதியின் இடையைப் பற்றிவிடுகிறான். அவள் இடுப்பில் அணிந்திருந்த மேகலை அறுந்து முத்துக்கள் சிதறின. இதனைக் கண்ட துரியோதனன் சிரித்துக்கொண்டே 'எடுக்கவோ கோக்கவோ' என்று கேட்கும் காட்சியை எடுத்துக்காட்டி, 'உடல் கூற்றின் அடிப்படையில் துரியோதனன் வியாச மகரிஷியின் பேரன். அவரது நற்கூறுகள், மரபணுக்கள் வழி துரியோதனனுக்கு வருவதில் ஆச்சரியம் இல்லை. நன்மை மட்டும் என்றில்லை. தீமையும் மரபுவழி மறைந்தே நம்முள் குடியேறுகிறது'[83] என்னும் கருத்தைப் பதிவு செய்திருப்பது எண்ணத்தக்கது.

தேரோட்டி மகனான கர்ணனைப் படைத்தளபதி ஆக்கிய துரியோதனன், என்ன வேண்டும் என்று கேட்க, பாண்டவர் தாய் மாமனான சல்லியனைத் தேரோட்ட ஏற்பாடு செய்யுமாறு கூறுகிறான். தேரோட்டி மகனுக்குத் தேரோட்டுவதா எனக் கோபமுற்ற சல்லியனிடம், அர்ச்சுனனுக்குக் கண்ணன் தேரோட்டுவதைச் சுட்டிக்காட்டி, அர்ச்சுனன் அல்பமானவன். கண்ணன் மிகப் பெரியவன். அவனைப் போலவே நீயும் மேலானவன்; கர்ணன் அர்ச்சுனனைப் போல சாதாரணமானவன் என்று சாமர்த்தியமாகப் பேசி, அவனைச் சம்மதிக்கச் செய்தான் துரியோதனன். இந்நிகழ்வை எடுத்தாண்ட படைப்பாசிரியர்,

"சொல்லுகிற மாதிரி சொன்னால் உடன்படாத விஷயத்திற்குக் கூட உடன்படுவது உலகின் இயல்பு. யாரை வேண்டுமானாலும் என்ன வேலை வேண்டுமானாலும் வாங்கலாம்"[84]

என்று கூறிச் செல்கிறார். ஆன்மிகப் பூங்காவில் அதிசயத் துளசி என்ற நூலில் கர்ணன் கொடுக்க வாய்ப்புக் கிடைத்ததே என்று மகிழ்ந்து கொடை கொடுப்பதாகக் குறிப்பிட்டுச் சென்றுள்ளார்.

தன் ஈகைக் குணத்தால் புண்ணியங்களைத் தேடியிருந்த கர்ணனை அர்ச்சுனனின் அம்புகளால் கொல்ல முடியவில்லை. எனவே அவனுடைய புண்ணியங்களை யாசகம் கேட்கிறான் கண்ணன். வந்திருப்பவன் இறைவன் கண்ணன் என்று அறிந்தும், தன் புண்ணியங்களைத் தாரை வார்த்துக் கொடுக்கிறான். அப்போது உனக்கு வேண்டிய வரங்களைக் கேள், தருகிறேன் என்று வந்தவன் கூறுகிறான். இந்த நிகழ்வைச் சுட்டிக்காட்டிய படைப்பாசிரியர், 'கொடுத்துப் பழகிய கர்ணன் இரத்தம்

கையில் பட்டதும், வாங்க வந்தவனுக்கும் கொடுக்க வேண்டும் என்ற எண்ணம் பிறந்தது; வளமையான எண்ணங்கள் எதிரே இருப்பவரையும் ஊடுருவும்; அவர்களையும் தூண்டும்'[85] என்று கூறிச்செல்வது இங்குக் கோடிட்டுக் காட்டத்தக்கது. சுகி. சிவத்தின் பக்தி இலக்கிய ஆளுமையும் இங்குக் குறிக்கத்தக்கது.

**பக்தி இலக்கியம்**

சமயப் பொருளையும், இறையருளையும் இறைவனின் பெருங்கருணைத் திறத்தையும் விளக்கும் அருளியல் இலக்கியங்களான பக்தி இலக்கியங்களையும் படைப்பாசிரியர் சுகி. சிவம், தம் நூல்களில் ஆங்காங்கே பொருத்தமுற எடுத்தாண்டுள்ளார்.

**சைவ இலக்கிய ஆட்சி**

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் முதலான மூவர் தேவாரப் பதிகங்களிலிருந்தும், மாணிக்கவாசகர், பட்டினத்தார், அருணகிரிநாதர், திருமூலர் ஆகியோரது இலக்கியங்களிலிருந்தும், அபிராமி அந்தாதியிலிருந்தும் பல செய்திகளைத் தம் கருத்திற்கு அரண் சேர்க்கும் வகையில் மேற்கோளாகச் சுட்டியிருக்கிறார். சான்றாகச் சில பகுதிகளைச் சுட்டலாம்.

திருச்சிராப்பள்ளிக் குன்றில் கோயில் கொண்டிருக்கும் சிவபெருமானைக் குறித்து ஞானசம்பந்தர் பாடிய,

"நன்றுடையானைத் தீயதிலானை நரைவெள்ளே
றொன்றுடையானை உமையொருபாகம் உடையானைச்

சென்றடையாத திருவுடையானைச் சீராப்பள்ளிக்
குன்றுடையானைக் கூறஎன் றுள்ளங் குளிரும்மே!”[86]

என்னும் பாடலை எடுத்துக் காட்டிப் பொருள் கூறிய படைப்பாசிரியர், ‘சிராப்பள்ளி – என்ற ஊர் இறைவர் கோபங் கொண்டதால் திருச்சேர்ந்து திருச்சிராப்பள்ளி ஆனது. திரு சென்றடைந்தது. ஆனால் இறைவனே திரு என்பதால் அவர் சென்றடையாத திருவுடையார். அவரே சிராப்பள்ளி குன்றுடையார்’[87] என்றும் குறிப்பிட்டுச் செல்கிறார்.

ஞானசம்பந்தர் சாமி கும்பிடக் கோயிலுக்குச் செல்கையில், வாசலில் ஒரு பெண் அழுது கொண்டிருந்ததைப் பார்க்கிறார். அவளின் அழுகைக்கான காரணம் அறிகிறார். வணிகன் ஒருவனுடன் அந்த இளம்பெண் காதல்கொண்டு திருமணம் செய்யும் நோக்கமுடன் வீட்டைவிட்டு வெளியேறி வந்து விடுகின்றனர். வரும் வழியில் அவ்வணிகனைப் பாம்பு தீண்டிவிடுகிறது. இது கண்டு அஞ்சிய அப்பெண், தான் தந்தையையும், தாயையும் பிரிந்து தன் காதலனுடன் வந்ததாகவும், அவனும் விடத்தால் தன்னைப் பிரிந்து விட்டதாகவும் அழுது அரற்றுவதை,

“அன்னையும் அத்தனையும் பிரிந்து நின்னை அடைவகை உடன்
போந்தேன் அரவால் வீடி
என்னை உயிர் விட்டகன்றாய் யானென்செய்கேன்? இவ்விடுக்கண்
தீர்க்கின்றார் யாருமில்லை
மன்னியசீர் வணிகர்குல மணியே! யானும் வாழேன்
என்றென்றயர்வாள் மதியினாலே
சென்னிஇளம் பிறைஅணிவார் கோயில் வாயில் திசைநோக்கித்
தொழுதழுதாள் செயலொன் றில்லாள்”[88]

என்னும் பாடல் வெளிப்படுத்துகிறது. பின்னர் அவளின் துயரத்தைத் தீர்த்து வைத்து விட்டுக் கோயிலுக்குச் செல்கிறார். இந்நிகழ்வை எடுத்துக்காட்டி,

"கடவுள் வழிபாட்டை விட மனிதன் துயர் துடைத்தலே முக்கியம் என்று ஞானசம்பந்தர் உண்மையைச் சொல்கிறார்"[89]

என்று கருத்துரைத்திருப்பது இங்குச் சுட்டத்தக்கது.

திருநாவுக்கரசர் தாம் கண்ட கயிலைக் காட்சி அனுவத்தைப் பற்றிப்பாடிய பாடல்களில் கண்டறியாதன கண்டேன் என்று வியந்தார். அதில் நிறைவான பாடல்,

'வளர்மதிக் கண்ணி னாளை வாக்குழலா ளொடும் பாடிக்
களவுபடாத தொர் காலம் காண்பான் கடைக்கண் நிற்கின்றேன்
அளவுபடாத தொர் அன்போடு ஐயாடை அடைகின்ற போது
இளமனம் நாகு தழுவி ஏறு வருவன கண்டேன், கண்டேன்
அவர்திருப்பாதம், கண்டறியாதன கண்டேன்'

என்னும் பாடலின் பொருளையும் சுட்டிக்காட்டி, கடவுள் கொடுத்த காலத்தைத் தொலைத்து விட்டு அலைகிறோம்; இறைவன் ஆலயத்திற்குச் செல்லும்போது அளவு இல்லாத அன்போடு செல்ல வேண்டும். அவ்வாறு எண்ணிக்கைப்படி செய்தலைக் கேலி செய்கிறார் நாவுக்கரசர்'[90] என்றும் கூறிச் செல்கிறார். இச்செய்தி புதிய கோணத்தைத் தருவதாக அமைகிறது. மேலும், "மூலிகை வளம் மிக்க அருவியில் நீராடி, உடல் நலம் பேணி நாளும் திருக்குற்றாலநாதரைத் தரிசித்து,

‘உற்றார் ஆர் உளரோ உயிர் கொண்டு போம் பொழுது

குற்றாலத்துறை கூத்தன் அல்லால் நமக்கு உற்றார் ஆருளரோ’

என்று திருநாவுக்கரசர் தேவாரத்தைப் பாடியபடி ஆலயத்தில் அமர்ந்தால் ஆனந்தம் தானே வரும்”[91] என்றும் குறித்துச் செல்வது படைப்பாசிரியருக்கு இருக்கும் தேவாரப் பயிற்சியைப் புலப்படுத்துகிறது. ‘உழைப்பது நமது கடமை. நமக்குப் படிஅளக்க வேண்டியது இறைவன் கடமை என்பது தான் சரியான வாழ்க்கை முறை. என் கடன் பணி செய்து கிடப்பது என்று அறிவித்த நாவுக்கரசர் தன் கடன் அடியேனையும் தாங்குதல் என்று கடவுளுக்கு நினைவூட்டினார்’[92] எனவரும் பகுதியில் நாவுக்கரசரின் பாடலடியைச் சுட்டிச் செல்வது பொருத்தமானதாகத் தென்படுகிறது.

திருவையாறு என்னும் திருத்தலத்தைப் பற்றி விளக்கப்புகுத்த படைப்பாசிரியர், அத்தலத்து இறைவனை வணங்க வந்த சுந்தரரைப் பற்றிக் குறிப்பிடுகிறார். ஆற்றின் மறுகரையில் இருக்கும் திருவையாறை தரிசனம் செய்ய விரும்பிய சுந்தரர், நீந்திச் செல்ல விரும்பவில்லை.

‘விதிர்த்து மேகம் மழைபொழிய

வெள்ளம் பந்து நுரைசிதறி

அதிர்க்கும் திரைக்கா விரிக்கோட்டத்து

ஐயாறுடைய அடிகளே’

என்று ஓலமிடுகிறார். பதிலுக்கு விநாயகரை ஓலமிடச் செய்ததால், இங்கிருக்கும் விநாயகர் ஓலமிட்ட விநாயகர் என்றானார்’[93] என்று விளக்கம் கூறியிருப்பது ஈண்டு எண்ணத்தக்கது. குழந்தைகள் விளையாடிக் கொண்டிருக்கும் போது, வீட்டு ஞாபகம் வந்து விட்டால் விளையாட்டை

நிறுத்தி விட்டு வீட்டிற்குச் செல்வர். இதன் மூலம் எந்தப் பிறவியில் வீட்டு (முக்தி) ஞாபகம் வருகிறதோ அப்போது விளையாட்டை நிறுத்திவிட்டு வீட்டுக்குப் போய்விடலாம் என்னும் கருத்தைப் புலப்படுத்துகிறார் ஆசிரியர். இதற்கு அரணாக,

> "சுந்தரரைப் பூமிக்கு அனுப்பும்போது சிவபெருமான் என்ன சொன்னார் என்று பெரியபுராணம் சொல்கிறது, தெரியுமா? 'வாழி மண்மேல் விளையாடுவாய்' என்றார் தெய்வச் சேக்கிழார்"[94]

என்னும் பகுதி அமைகிறது. இவ்வாறு தம் கருத்திற்கு அரண்சேர்க்கும் விதத்தில், தேவார முதலிகளின் பாடல்களையோ, நிகழ்வுகளையோ எடுத்தாண்டிருப்பது படைப்பாசிரியரின் தேவாரப் பயிற்சியைத் தெற்றெனப் புலப்படுத்துகிறது.

மனம் சமநிலை அடையும் போது செய்யும் செயல்களுக்குப் பொறுப்பேற்க வேண்டியது தெய்வம். இந்நிலை வாய்த்தால் எல்லா நிலைகளையும் கடந்து விடுவர். இதற்குச் சான்று காட்டும் வகையில்

> 'நன்றே செய்வாய்; பிழை செய்வாய்
> நானோ இதற்கு நாயகமே'

என்கிற திருவாசகமும்,

> 'நன்றே வருவினும் தீதே விளைகினும் நான்
> அறிவது ஒன்றேயும் இல்லை'

என்ற அபிராமி அந்தாதியும் எல்லாம் கடந்த இந்த அனுபவத்தின் வெளிப்பாடுகள்'[95] எனவரும் பகுதியில், திருவாசகத்தையும் அபிராமி அந்தாதியையும் எடுத்தாண்டுள்ளார். மேலும், உணவைக் குறைத்து உடலைச் சுருக்க வேண்டும் என்பதைத் தெளிவுபடுத்துவதற்குத் திருவாசகத்தல் வரும் 'ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி' என்னும் பாடலடியைச் சுட்டிச் செல்கிறார்.[96]

ஆன்மிகப் பூங்காவில் அதிசயத் துளசி என்னும் நூலில்,

'அபிராமி அந்தாதி – ஒரு விளக்கம்' என்ற தலைப்பிலமைந்த கட்டுரை, அபிராமி அந்தாதி பிறந்த கதை, அபிராமியின் தாய்மை, சமயம், தவம் செய்யும் வழி முதலானவற்றை ஆராய்கிறது. கட்டுரை முழுவதும் அபிராமி பட்டரின் அபிராமி அந்தாதியைப் பல கோணங்களில் அலசும் படைப்பாசிரியரின் கருத்தோட்டம் இழையோடுகிறது.

"'ஈன்றெடுப்பாள் ஒருதாயும் இல்லை'

'உன்னையே யன்னை என்பன் ஓடிவந்தே'"[97]

என்னும் பாடலடிகள், அபிராமியின் தாய்மைச் சிறப்பை எடுத்துரைக்கும் அபிராமி பட்டரின் வைரவரிகளாகும். மேலும், எமனின் கைப்பிடியிலிருந்து மீண்டு சிவலோகப் பதவி பெற்று உய்வதே அபிராமியின் சமயம்[98] என்று கூறியிருப்பதும்,

"அபிராமி அந்தாதி ஓர் அற்புத இலக்கியம், தேவர்கள்

அழுது பெற்ற தலத்தில் மனிதர்கட்காக அம்பிகை

வழங்கிய அரும் தமிழ் அமிர்தம் அபிராமி அந்தாதி"[99]

என்னும் கருத்தும் ஈண்டு நோக்கத்தக்கன.

அருணகிரிநாதரின் கந்தர் அநுபூதி என்னும் நூலிற்குத் தெளிவுரை பகரும் வகையில் கந்தர் அநுபூதி என்னும் தலைப்பில் ஒரு நூலைப்படைத்துள்ளார். அநுபூதி அனுபவத்தின் சாரம் என்ன என்பதை இந்நூலில் விளக்கிச் செல்கிறார்.

> "பாடல் பாடலாக எழுதி, உரையோ, விளக்கமோ தருவது என் நோக்கம் அன்று. அநுபூதி விளக்கங்களைப் பல பெரியார் வாக்காலும், எழுத்தாலும் கற்று, என் அறிவெல்லைக்குள் ஆராய்ந்த போது, ஓர் உண்மை புலப்பட்டது. இந்தப் பாடல் வரிசையில் அநுபூதியை ஆராய்வதைக் காட்டிலும் எண்ணங்களை முதன்மைப்படுத்தி, பாடல்களை அங்கங்கே எடுத்து ஆய்வது நல்லது என்று தோன்றியது"[100]

என்னும் கூற்று, இந்நூலாசிரியரின் நோக்கத்தைப் பறைசாற்றுகிறது. ஆசையை விட்டொழித்து, துன்பத்தில் இருந்து நீங்கும் அநுபூதிநிலையை, அநுபூதிப்பாடல்களை ஆங்காங்கே எடுத்துக்காட்டியும் நூலின் இறுதியில் கந்தர் அநுபூதிப் பாடல்களைத் தந்தும் இந்நூலை அமைத்துள்ளார். மேலும் அச்சந்தவிர் என்னும் நூலில், தொடர் வழிபாடு மூலம் இறைவன் எக்காலமும் துணையிருப்பான் என்னும் கருத்தை விளக்கவந்த ஆசிரியர், அருணகிரிநாதரின் பாடல் ஒன்றைச் சான்று காட்டிச் செல்கிறார்.

"தமக்கு எல்லா வகையிலும் இறைவனது அம்சங்கள் துணையிருப்பதாக அருணிகிரிநாதர் பாடுகிறார்,

‘விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கள்
மெய்ம்மை குன்றா
மொழிக்குத் துணைமுரு காஎனும் நாமங்கள்
முன்பு செய்த
பழிக்குத் துணைஅவன் பன்னிரு தோளும்
பயந்த தனி
வழிக்குத் துணைவடி வேம்செங் கோடன்
மயூரமுமே”[101]

என்னும் பகுதி இங்குச் சுட்டிக்காட்டத்தக்கது.

வாழ்தல் ஒரு கலையில் மரண பயம் தேவையில்லை; மரணத்தினை நினைத்துக் கலங்க வேண்டாம் என்ற கருத்தைச் சொல்லவந்த படைப்பாசிரியர்,

“அழுகையும் துக்கமும் நீடிப்பதில்லை. காலம் அந்தச் சோகத்தை மறக்கச் செய்துவிடுகிறது. காலத்தால் சோகம் மாறட்டும் என்று காத்திருக்காமல் நீரினுள் மூழ்கி உடனே நினைப்பினை ஒழித்து விடுபவர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள்”[102]

என்று கூறிச் செல்கிறார். இதற்கு அரண் சேர்க்கும் வகையில்,

“ஊரெல்லாம் கூடி ஒலிக்க அழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்
சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு
நீரினுள் மூழ்கி நினைப்பொழிந் தார்களே!”[103]

என்னும் திருமந்திரப் பாடலை எடுத்தாண்டிருப்பது பொருத்தமுடையதே.

கோயில் வாசலில் அமர்ந்திருக்கும் பட்டினத்தார், உள்ளன்போடு கொடுத்தால் தான் உண்பேன் என்று கூறுவதாக வரும்,

‘இருக்குமிடம் தேடி அன்னத்தை

உருக்கமோடு கொண்டு வந்தால் உண்பேன்’

என்னும் பகுதியை எடுத்துக்காட்டி, உணவு விசயத்தில் ஆர்வம் காட்டுவோர் ஒருபோதும் ஞானியாக முடியாது[104] என்னும் கருத்தை விளக்கிச் செல்கிறார்.

சைவ இலக்கியங்களைப் போன்றே, வைணவ இலக்கியங்களையும் தம் படைப்புகளில் ஆங்காங்கே குறித்துச் சென்றுள்ளமை ஈண்டு சுட்டிக்காட்டத் தக்கது.

**வைண இலக்கிய ஆளுமை**

பழம்பெரும் சமயமாகக் கருதப்படுகிற வைணவ சமயத்தின் இறைவனான திருமாலைப் போற்றப் பன்னிரு ஆழ்வார்கள் தோன்றினர். இவர்களுள் பொய்கையாழ்வார், பேயாழ்வார், பூதத்தாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார், குலசேகர ஆழ்வார், நம்மாழ்வார் ஆகிய எண்மரது படைப்புகளிலிருந்தும் சில பகுதிகள் படைப்பாசிரியரால் எடுத்தாளப் பெற்றுள்ளன. முதல் ஆழ்வார்கள் எனப்படும் பொய்கையார், பூதத்தார், பேயார் ஆகியோரது பாடல்கள் இங்குக் குறிப்பிடப்பட்டுள்ளன.

'வையம் தகளியாய் வார்கடலே நெய்யாய்

வெய்ய கதிரோன் விளக்காய்'

என்னும் பொய்கையாழ்வார் பாடலடிகளும்,

'அன்பே தகளியாய் ஆர்வமே நெய்யாய்

இன்புருகு சிந்தை இடுதிரியாய்'

என்னும் பூதத்தாழ்வார் பாடிய பாடலடிகளும்,

'திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்

அருக்கன் ஆணிநிறமும் கண்டேன்'

என்னும் பேயாழ்வாரின் பாடலடிகளும்[105] இருட்டில் நெருக்கும் நாலாவது நபரைப் பார்க்க விளக்கேற்றும் வகையில் அமைவன. இப்பாடல்களை எடுத்தாண்டு, திருமாலின் பெருமை பேசிச் செல்கிறார் படைப்பாசிரியர். சங்கரன்கோயில் திருத்தலத்தை விளக்க எண்ணிய ஆசிரியர், திருமாலைத் தன் இடதுபாகத்தில் கொண்டு காட்சியளிக்கும் சிவபெருமானின் சங்கரநாராயணர் திருக்கோலத்தைச் சுட்டி அரியும் அரனும் ஒன்றே என்று தலபுராணம் கூறுகிறது என்றும் கூறிச் செல்கிறார். இதற்கு,

"ஹரியும் ஹரனும் ஒன்றே என்று கருதும் மிதவாதிகள்

கூட்டமும் உண்டு.

'தாழ் சடையும் நீள்முடியும் ஒண் மழுவும் சக்கரமும்

சூழ் அரசம் பொன் நாணும் தோன்றுமால்...'

என்கிற பேயாழ்வார் அனுபவமும், ஆழ்வார் வாக்கை அனுபவித்துச் சமமாகக் கருதும் சமயவாதிகளும் உண்டு"[106]

என்கிற இப்பகுதி அரணாக அமைகிறது.

திருவரங்கத்தில் பள்ளி கொண்டிருக்கும் அரங்கநாதர், விபீடணன் வேண்டியதால் தென்திசை இலங்கை நோக்கிப் படுத்தார் என்பதால்,

'குடதிசை முடியை வைத்து

குணதிசை பாதம் நீட்டி

வடதிசை பின்பு காட்டி

தென்திசை இலங்கை நோக்கி'

என்று அருளினார் ஆண்டவனில் ஆழ்ந்த ஆழ்வாரான தொண்டரடிப் பொடியாழ்வார்[107] என்னும் பகுதியும் இங்குச் சுட்டத்தக்கது.

திருவரங்கத்து அரங்கநாதரை வணங்கும்போது, மறவாமல் மனத்தூண்களைப் பற்றிக் கொண்டு வணங்கும் வகையில்,

'காயாம்பு மலர்ப் பிறங்கலன்ன மாலைக்

அடியரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்

மாயோனை மனத்தூணே பற்றி நின்று என்

வாயார என்று கொலோ வாழ்த்தும் நாளே'

என்று குலசேகராழ்வார்[108] பாடிய பாடலை எடுத்தாள்கிறார் ஆசிரியர்.

வேதாத்ரி என்னும் அகோபிலம் என்னும் சிங்கப்பெருமாள் குன்று அழைக்கப்பெறுகிறது. இதனைத் திருமங்கையாழ்வார் பாடியுள்ளார்.

"திருமங்கையாழ்வார் தித்திக்கும் தமிழாலே மங்களாகாசனம் செய்த தெய்வப்பதி இத்தலம்.

'அங்கண் ஞாலம் அஞ்ச அங்கு ஓர் அளி அரியாய் அவுணன்
பொங்கு ஆசம் வள் உகிராங் போழ்ந்த புனிதன் இடம்
பைங்கண் ஆணைக் கொம்பு கொண்டு பக்திமையால் அடிக்கீழ்ச்
செங்கண் ஆளியிட்டிறைஞ்சும் சிங்கவேள் குன்றமே'

என்பது அவர்தம் திருவாக்கு".[109]

மேலும், திருக்கோவிலூரில் குடிகொண்டிருக்கும் உலகளந்த பெருமானைப் படம்பிடித்துத் தருகிறார் திருமங்கையாழ்வார்.

'உறியார்ந்த வெண்ணெய் ஒளியால் சென்று அங்கு
உண்டானைக் கண்டு ஆய்ச்சி உரவோடு ஆர்க்கத்
தறியார்ந்த கருங்களிறே போல் நின்று
தடங்கண்கள் பனிமங்கும் தன்மையானை'

என்று திருக்கோவிலூர் இறைவனை அனுபவிக்கிறார் திருமங்கையாழ்வார்.[110]

இவ்விரு பகுதிகளும், திருமங்கையாழ்வாரின் பாசுரங்களை ஆசிரியர் எடுத்தாண்டுள்ளமைக்குச் சான்றுகளாக அமைகின்றன.

பெரியாழ்வாரின் மகளான ஆண்டாள் குறித்து, 'ஆன்மிகப் பூங்காவில் அதிசயத் துளசி' என்னும் பெயரில் கட்டுரையொன்றை ஆன்மிகப் பூங்காவில் அதிசயத் துளசி என்ற நூலில் படைத்துள்ளார் ஆசிரியர். ஆண்டாளின் பிறப்பு, வளர்ப்பு, கண்ணனையே தன்

தலைவனாக வரித்துக் கொண்டாடும் நிலை முதலானவற்றை எடுத்தியம்பும் இக்கட்டுரை முழுவதும் ஆண்டாள் பாசுரங்கள் இழையோடுகின்றன. "தன் அவதார நோக்கமாக வராகப்பெருமாள் முக்திக்குச் சொன்ன சுலபமான வழியை 'வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க போய பிழையும்' என்று எளிமையாகப் பாடி விளங்காத வேதத்தை விளக்கிய கோதைத் தமிழ் கொண்டாடத் தக்கது. பக்திப் பூங்காவின் அதிசயத் துளசியே ஆண்டாள்"[111] என்னும் பகுதியைச் சான்றாகச் சுட்டமுடிகிறது.

எண்ணமும் கருத்துமாக வாழ்ந்தவர்களின் இதயக் கனவுகள் நிச்சயம் ஈடேறும் என்பதை விளக்குவதற்கு ஆண்டாள் நாச்சியாரின் விருப்பத்தைச் சான்று காட்டுகிறார். திருமாலிருஞ்சோலைப் பெருமாளுக்கு நைவேத்தியம் படைக்க விரும்பும் ஆண்டாள்,

"நூறு நறும்பொழில் மாலிருஞ்சோலை
நம்பிக்கு நான்
நூறு தடாவில் வெண்ணெய் வாய்நேர்ந்து
பசாவி வைத்தேன்
நூறு தடாநிறைந்த அக்கார
அடிசில் சொன்னேன்..."

என்று பாடுகிறாள். திருவில்லிபுத்தூர் கோயில் பட்டரான ஏழைத் தந்தைக்கு மகளாகப் பிறந்த ஆண்டாள், நூறு அண்டா வெண்ணெய், நூறு அண்டா நிறையச் சர்க்கரைப் பொங்கல் வைத்துப் படையல்

வைக்கப்போகிறேன் என்று பாடலில் சொல்லத்தான் முடிந்தது. அவள் காலத்திற்குப் பிறகு வந்த ஸ்ரீராமானுஜர் ஆண்டாளின் பாசுரத்தைப் படித்து மனம் நெகிழ்ந்து, திருமாலிருஞ்சோலைப் பெருமாளுக்கு ஆண்டாள் பாடியபடியே நைவேத்தியம் செய்து எல்லோருக்கும் பிரசாதம் கொடுத்ததாக வரலாறு சொல்கிறது. எண்ணமும் கருத்துமாகப் பரிணமித்திருந்ததால் ஆண்டாளின் எண்ணம் அவளது இறப்புக்குப்பின் ஈடேறுகிறது.[112] இந்நிகழ்வைத் தம் கருத்தை நிலைநாட்டச் சான்று காட்டும் விதத்தில் எடுத்தாண்டிருப்பது போற்றுதற்குரியது.

அர்த்தமுள்ள வாழ்வில், ஒவ்வொரு மனிதனுள்ளும் இறைத்தன்மை தூங்குகிறது! அதை எழுப்பும் ஆன்மிக முயற்சியே இறைவழிபாடு. அதை உணர்த்தவே திருப்பள்ளி எழுச்சி. இதனை அரண் செய்யும் வகையில்,

'குத்து விளக்கெரியக் கோட்டுக்கால் கட்டில்மேல்
மெத்தென்று விரித்த பஞ்ச சயனத்தின் மீதேறி
கொத்தலர் பூங்குழல் நம்பின்னை கொங்கைமேல்
வைத்துக் கிடந்த மலர்மார்பா வாய்திறவாய்'

என்று நெருக்கமான உரிமையோடு கடவுளை எழுப்பும் ஆண்டாளின் பாடலை[113] எடுத்துக்காட்டுகிறார்.

இவ்வாறு சைவசமயத்தைச் சார்ந்த நாயன்மார்களும், வைணவ சமயத்தைச் சார்ந்த ஆழ்வார்களும் பாடிய பக்தி இலக்கியங்களைத் தம் கருத்திற்கு அரண் சேர்க்கும் வகையில் பொருத்தமுற எடுத்தாண்டிருப்பது படைப்பாசிரியரின் தனிச்சிறப்பாகிறது.

**இக்கால இலக்கிய ஆளுமை**

இக்கால இலக்கிய வகைமைகளுள் ஒன்று கவிதை. பாரதியார் கவிதைகளையும், பலரின் புதுக்கவிதைகளையும் படைப்பாசிரியர் தம் படைப்புகளில் எடுத்தாண்டுள்ளார். ஆய்விற்கு எடுத்துக்கொண்டுள்ள நூல்களுள் அச்சம் தவிர், அர்த்தமுள்ள வாழ்வு, இந்த நாள் இனிய நாள், மனிதனும் தெய்வமாகலாம், வாழ்தல் ஒரு கலை, கம்பன் நேற்று - இன்று – நாளை ஆகிய நூல்களில் கவிதைகளைக் கையாளும் ஆளுமை வெளிப்படுகிறது.

பாரதியின் புதிய ஆத்திச்சூடி வரிகளுள் ஒன்றான ‘அச்சம் தவிர்’ என்னும் தலைப்பிலேயே பாரதியின் அச்சமின்மையை இளைய தலைமுறைக்கு அடையாளப்படுத்துகிறார். நூல் நெடுகிலும் பாரதியின் துணிச்சலான வரிகள் விரவிக்கிடக்கின்றன. புதிய கருத்துக்களை எடுத்துச் சொல்பவர்களுக்கு உலகின் அனைத்துப் பகுதிகளிலும் மாபெரும் எதிர்ப்புக் கிளம்பியிருக்கிறது என்பது வரலாறு கூறும் உண்மை. இதற்குச் சான்றாகத் தன்னை இழிவாக எண்ணிப் பழிச்சொற்களை இந்தப் பாரிலுள்ளோர் வீசிய போதும் பயம் என்பதே இல்லை எனக் கர்ச்சிக்கும்,

‘துச்சமாக எண்ணி நம்மைத் தூறு செய்த போதிலும்
அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்ப தில்லையே’

என்னும் பாரதியார் பாடல் வரிகளை[114] எடுத்தியம்புகிறார் ஆசிரியர். சமூகத்திற்கு நன்மை பயக்கும் வகையில் செயல்படுவதை விமர்சிக்கும் எந்த மோசமான கருத்திற்கும் முன்னுரிமை தராமல் அவற்றைப் புறந்தள்ளிவிட்டு, அச்சமின்றி முன்னேறிச் செல்ல வேண்டும் என்னும்

பாரதியார் கருத்தை இளைய சமுதாயத்தில் விதைப்பது காலத்திற்கேற்ற பொருத்தமுடையதென்றே தோன்றுகிறது.

மனதின் கலக்க நிலையான பயத்திலிருந்து எப்படி விடுபடுவது என்றால், ஆன்ம ஒளிக்கடலில் மூழ்குதல் வேண்டும் என்றான் பாரதி. வாழ்க்கைப் பயணம் இருளிலிருந்து ஒளிக்கும், அசத்யத்திலிருந்து சத்யத்திற்கும், நிலையாமையிலிருந்து நிலைப்புக்கும், அதாவது அறியாமையிலிருந்து ஞானத்திற்கான பயணமானால் அச்சம் இல்லை.

'அச்சமற்ற வாழ்வு அமைவது எப்படி?

'ஆன்ம ஒளிக்கடல் மூழ்கித் திளைப்பவர்க்
கச்சமும் உண்டோடா? மனமே
தேன்மடை இங்குத் திறந்தது கண்டு
தேக்கித் திரிவமடா?'

என்னும் பாரதி வரிகளே இதற்கான விடை'[115]. இவ்வாறு பாரதியின் கவிதைவரிகளை எடுத்துக்காட்டித் தம் கருத்தை நிறுவுகிறார் படைப்பாசிரியர்.

'ஓடி விளையாடு பாப்பா' என்று பாரதி பாடியதை வைத்துக் கொண்டு, குழந்தைகள் துருதுரு என்று விளையாட வேண்டும்[116] என்பதை எடுத்துக் கூறுகிறார். 'உயிர்களிடத்தில் அன்பு வேண்டும்' என்றார் மகாகவி பாரதி[117]. இதன் மூலம் மக்கள் அனைவரும் அனைத்து உயிர்களையும் அன்புடன் நேசித்தல் வேண்டும் என்பதைக் கோடிட்டுக் காட்டுகிறார்.

"சென்றதினி மீளாது மூடரே நீர்
எப்போதுஞ் சென்றதையே சிந்தை செய்து
கொன்றழிக்கும் கவலை யெனும் குழியில் வீழ்ந்து
குமையாதீர்! சென்றதனைக் குறித்தல் வேண்டா;
இன்று புதிதாய்ப் பிறந்தோ மென்று நீவிர்
எண்ண மதைத் திண்ணமுற விசைத்துக் கொண்டு
தின்று விளை யாடியின்புற் றிருந்து வாழ்வீர்,
தீமையெலாம் அழிந்துபோம், திரும்பி வாரா"[118]

என்னும் பாரதியின் பாடல் மேற்கோளாகக் கையாளப்பட்டுள்ளது. பாரதியின் இந்த வரிகளை நினைவில் நிறுத்துங்கள். இந்த வரிகள் ஞாபகத்திற்கு வரும்போது உங்களுக்குள் ஒரு புதிய உற்சாக அலை எழும். அந்த அலை நீங்கள் ஒவ்வொரு நாளிலும் புதிய பிறப்பெடுப்பதாக ஓர் உணர்வைக் கட்டாயம் ஏற்படுத்தும். நீங்கள் ஒரு புதிய உயிர்[119] என்று பாரதியார் வரிகளைக் கொண்டு உணர்த்தும் திறம் போற்றுதற்குரியது.

**புதுக்கவிதை**

இயந்திரமயமான இன்றைய உலகில், கம்பனின் கவிதை நயங்களைச் சுவைக்கும் மனப்பக்குவம் வாய்க்குமா? என்ற கேள்விக்கு விடைதரும் முகமாகப் பல புதுக்கவிதைகளை ஆசிரியர் எடுத்தாள்கிறார். "நகர வாழ்க்கையின் பரபரப்பை

'என்ன சேது
எப்போ வந்தீங்க
இருபது வருஷமாச்சே.. பாத்து..
இதோ…

இருபத்து நூலு வருது

வரட்டுமா பார்ப்போம் ... பிறகு'

என்று தோல்உரித்துக் காட்டுகிறார்'.[120] மேலும்,

" 'உழைத்தால் உயரலாம்

அது சரி

யார் உழைத்தால் யார் உயரலாம்'

என்று கேள்வி கேட்கிறார் கவிஞர் நீலமணி. இப்படிப்பட்ட பொறிபறக்கும் கவிதை மின்னலை அண்மைக் காலமாய் ரசிக்கப் பழகிவரும் மக்கள் கம்பனை ஆற அமர ரசிக்க முடியுமா என்ற கேள்வி எழத்தான் செய்கிறது.[121] கம்பன் கவிதை பழைய காலத்து அரண்மனை போல இருப்பதால் அதில் வசிக்கப் பக்குவம் தேவை. புதுக்கவிதை இன்றைய அவசரயுகத்திற்கேற்றாற் போல அமையும் அடுக்குமாடிக் கட்டிடம். நிகழ்காலப் பிரச்சினைகளைப் பேசுகிற இயல்பு காரணமாகப் புதுக்கவிதை சிறப்புப் பெறும்.

"இரண்டு நிகழ்காலப் பிரச்சினைகளை இணைத்து ஒரு கல்லூரி மாணவி கவிதை எழுதுகிறார். இரண்டுமே தகிக்கிற, கொழுந்து விட்டு எரிகிற நிகழ்காலப் பிரச்சினைகள், கோபம் கொப்பளிக்க எழுதுகிறார்.

'நாங்களும் பாபர் மசூதிதான்,

எங்களை இடிப்பதற்கு எல்லோரும் தயார்.

ஆனால்

கட்டுவதற்கு ஒருபயல் கூட இல்லை".[122] இத்தகைய

புதுக்கவிதைகளில் நாட்டின் அவலநிலை நன்கு படம்பிடித்துக் காட்டப்படுகிறது. குடிகாரர்களுக்காக,

‘வேட்டி சொன்னது
மானம் கெட்ட
இந்த குடிகாரப்பயல்
இடுப்பில் இருப்பது அவமானம் என்று
விலகிக் கொண்டேன்’

என்ற புதுக்கவிதையைத் தந்து அறிவுறுத்துவதும்,[123] பெற்றோரைப் பங்கு பிரிக்கும் பண்பாட்டுச் சீர்குலைவைக் காண்பிக்க,

‘பானையிலே சோறிருந்தா
பூனைகளும் சொந்தமடா
பெட்டியிலே பணமில்லை
பிள்ளைகளும் சொந்தமில்லை’

என்ற கவியரசர் கண்ணதாசனின் தத்துவ வரிகளைத் தருவதும்[124]

ஆணுக்கு மறுமணம் நடக்கும் வேகத்தைக் காட்டுகிற

‘இறந்து போன் தன் மனைவிக்காக
ஷாஜகான் தாஜ்மகால் கட்டினான்,
நான் இறந்தால் என்ன கட்டுவீர்கள்! என்றாள் மனைவி
உன் தங்கையைக் கட்டுவேன்
என்றான் அவன்’

என்னும் புதுக்கவிதை மூலம் ஆண்களின் மனோநிலையைப் படம்பிடித்துச் சொல்வதும்[125] புதுக்கவிதை ஆளுமைக்குச் சான்றுகளாகச் சுட்டத்தக்கவை. இத்தகைய சூழலில் கம்பனின் மரபுக்கவிதை வரவேற்கப்படுமா? என்ற வினாவிற்கு, பழமையையும் புதுமையையும் ஏற்கும் மனப்பாங்கு நம்நாட்டினர்க்கு உண்டென்பதால், கம்பனின் மரபுக்கவிதையும் புதுக்கவிதையும் ஏற்கப்படும் என்றே, பல்வேறு சான்றுகளைக் காட்டி எடுத்தியம்புகிறார்.

## தொகுப்புரை

எந்தவொரு கருத்தையும் சுவைபடக் கூறினால்தான் அது படிப்பவரின் மனத்தில் நிற்கும். தாம் கூறவந்த கருத்தின் இடையில் சங்க இலக்கியங்கள், திருக்குறள் முதலான இலக்கியங்களைச் சுவைபடக் கூறும் திறன் ஆய்வில் புலப்படுத்தப்பெற்றுள்ளது.

காப்பியங்களுள் சிலப்பதிகாரம், பெரியபுராணம், கம்பராமாயணம், மகாபாரதம் போன்ற இலக்கியங்களின் பாடல்களும் கருத்துகளும் எடுத்தாண்டுள்ள படைப்பாசிரியரின் போக்கு ஆய்வின்வழி எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

சைவ, வைணவ பக்தி இலக்கியங்களில் இருந்து சில மேற்கோள்களை எடுத்துக் காட்டிக் கருத்துக்களை விளக்கும் திறன் ஆய்வில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. கருத்தை நிலை நாட்டவும், சமூகத்திற்கு அறிவுரை கூறவும் புதுக்கவிதையைக் கையாண்டுள்ள போக்கு ஆய்வில் விளக்கப்பெற்றுள்ளது.

**சான்றெண் விளக்கம்**

1. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.154.
2. தொல். பொருள், நூ. 1526.
3. வ.சுப. மாணிக்கம், இலக்கிய விளக்கம், ப.1.
4. ந.வீ. செயராமன், புதுக்கவிதையியல், ப.10.
5. சுகி.சிவம், ஞானமலர்கள், ப.27.
6. நற்.பா.
7. குறுந்.பா.
8. சுகி.சிவம், ஞானமலர்கள், ப.28.
9. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.30.
10. குறள், 600.
11. சுகி.சிவம், வெற்றி நிச்சயம், ப.78.
12. குறள், 611.
13. சுகி.சிவம், வெற்றி நிச்சயம், ப.86.
14. மேலது. ப.161.
15. குறள். 595,
16. சுகி.சிவம், நல்லவண்ணம் வாழலாம், ப.52.
17. சுகி.சிவம், மனசே, நீ ஒரு மந்திரச் சாவி, ப.38.
18. மேலது. ப.55.
19. சுகி.சிவம், கனவு மெய்ப்படும், ப.62.
20. குறள். 126.
21. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.43.
22. மேலது. ப.78.

23. சுகி.சிவம், ஞானமலர்கள், ப.42.

24. மேலது. ப.73.

25. குறள். 361.

26. குறள். 35.

27. குறள். 419.

28. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.108.

29. குறள். 391.

30. குறள். 666.

31. சுகி.சிவம், ஞானமலர்கள், ப.25.

32. குறள். 623.

33. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.130.

34. குறள். 628.

35. குறள். 629.

36. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.102.

37. குறள். 251.

38. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.156.

39. குறள். 337.

40. சுகி.சிவம், வாழ்தல் ஒரு கலை, ப.10.

41. மேலது. ப.33.

42. மேலது. ப.50.

43. மேலது. ப.53.

44. மேலது. ப.35.

45. குறள். 751.

46. சுகி.சிவம், ஆன்மிகப் பூங்காவில் அதிசயத் துளசி, ப.62.

47. சுகி.சிவம், கந்தா் அநுபூதி, ப.7.

48. சுகி.சிவம், அர்த்தமுள்ள வாழ்வு, ப.88.

49. குறள். 350.

50. சுகி.சிவம், நினைப்பதும் நடப்பதும், ப.57 – 58.

51. சுகி.சிவம், அர்த்தமுள்ள வாழ்வு, ப.63.

52. குறள். 45.

53. சுகி.சிவம், ஒரு தலம், ஒரு பாடல், ஒரு நயம், ப.2.

54. சுகி.சிவம், அச்சம் தவீர், ப.22.

55. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.129.

56. சுகி.சிவம், நல்ல குடும்பம் நமது இலட்சியம், ப.24.

57. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலம், ப.118.

58. சுகி.சிவம், இந்த நாள் இனிய நாள், ப.131.

59. சுகி.சிவம், நல்ல குடும்பம் நமது இலட்சியம், ப.24.

60. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.120.

61. சுகி.சிவம், நல்லவண்ணம் வாழலாம், பக். 68 – 69.

62. மேலது. ப.95.

63. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், பக்.103 – 104.

64. சுகி.சிவம், கந்தர் அனுபூதி, பக். 9, 10, 11.

65. சுகி.சிவம், கம்பன் : நேற்று - இன்று – நாளை, ப.12.

66. மேலது. ப.13.

67. மேலது. ப.55.

68. மேலது. ப.86.

69. மேலது. பக்.144 – 145.

70. மேலது. ப.145.

71. மேலது. ப.44.

72. சுகி.சிவம், சுந்தர காண்டம், ப.6.

73. மேலது. பக். 95 – 96.

74. சுகி.சிவம், நல்ல வண்ணம் வாழலாம், ப.25.

75. சுகி.சிவம், சுந்தர காண்டம், ப.70.

76. சுகி.சிவம், ஞானமலர்கள், ப.34.

77. மேலது. பக். 68, 95.

78. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.106.

79. கம்ப இராமாயணம், சுந்தர காண்டம், பஞ்சசேனாதிபதிகள வதைப்படலம், ப.64.

80. சுகி.சிவம், நல்ல குடும்பம் நமது இலட்சியம், ப.146.

81. கம்ப இராமாயணம், சுந்தர காண்டம், காட்சிப்படலம், ப.15.

82. சுகி.சிவம், படிக்க.. ஜெயிக்க.., ப.12.

83. சுகி.சிவம், கனவு மெய்ப்படும், ப.35.

84. சுகி.சிவம், மனசே, நீ ஒரு மந்திரச் சாவி, பக்.54 – 55.

85. சுகி.சிவம், வாழ்ந்து பார்க்கலாம் வா, ப.112.

86. தேவாரம் திருமுறை பாராணயத் திரட்டு, ப.59, (சுகி.சிவம், நல்ல வண்ணம் வாழலாம், ப.58.) தேவாரம் திருமுறை பாராயணத் திரட்டு, ப.59.

87. சுகி.சிவம், ஒரு தலம், ஒரு பாடல், ஒரு நயம், ப.7.

88. பெரியபுராணம், திருஞானசம்பந்த சுவாமிகள் புராணம், ப.475.

89. சுகி.சிவம், இந்த நாள் இனிய நாள், ப.61.

90. சுகி.சிவம், ஒரு தலம் ஒரு பாடல் ஒரு நயம், பக்.49-50.

91. மேலது. ப.85.

92. சுகி.சிவம், ஏமாற்றாதே ஏமாறாதே, ப.112.

93. சுகி.சிவம், ஒரு தலம், ஒரு பாடல், ஒரு நயம், பக்.46-47.

94. சுகி.சிவம், மனசே, நீ ஒரு மந்திரச்சாவி, ப.295.

95. சுகி.சிவம், கனவு மெய்ப்படும், ப.56.

96. சுகி.சிவம், உணவே, உயிரே, ப.21.

97. அபிராமி பட்டர், அபிராமி அந்தாதி, பக்.31-33.

98. சுகி.சிவம், ஆன்மிகப் பூங்காவில் அதிசயத் துளசி, ப.117.

99. சுகி.சிவம், ஒரு தலம், ஒரு பாடல், ஒரு நயம், ப.18.

100. சுகி.சிவம், கந்தர் அநுபூதி, ப.6.

101. சுகி.சிவம், அச்சந்தவிர், ப.51.

102. சுகி.சிவம், வாழ்தல் ஒரு கலை, ப.109.

103. திருமந்திரம், ப.189.

104. சுகி.சிவம், உணவே உயிரே, பக்.21-22.

105. சுகி.சிவம், ஒரு தலம், ஒரு பாடல், ஒரு நயம், ப.110.

106. மேலது. ப.40.

107. மேலது. ப.120.

108. மேலது. ப.125.

109. மேலது. ப.11.

110. மேலது. ப.108.

111. சுகி.சிவம், ஆன்மிகப் பூங்காவில் அதிசயத் துளசி, ப.144.

112. சுகி.சிவம், அச்சம் தவிர், பக். 65 – 66.

113. சுகி.சிவம், அர்த்தமுள்ள வாழ்வு, ப.52.

114. சுகி.சிவம், அச்சம் தவிர், ப.70.

115. சுகி.சிவம், அர்த்தமுள்ள வாழ்வு, பக். 71-72.

116. சுகி.சிவம், இந்த நாள் இனிய நாள், ப.142.

117. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.110.

118. பாரதியார் கவிதைகள், ஞானப்பாடல்கள், ப.10.

119. சுகி.சிவம், வாழ்தல் ஒரு கலை, ப.142.

120. சுகி.சிவம், கம்பன் : நேற்று - இன்று – நாளை, ப.96.

121. மேலது. ப.98.

122. மேலது. ப.102.

123. சுகி.சிவம், நல்ல குடும்பம் நமது இலட்சியம், ப.74.

124. மேலது. ப.218.

# இயல்-4

## சுகி.சிவம் படைப்புகளில் பெண்ணியச் சிந்தனை

**முன்னுரை:**

ஐரோப்பியர் வருகைக்குப்பின், நம்நாட்டில் ஏற்பட்ட அறிவியல் வளர்ச்சியாக அச்சு இயந்திரம் தோன்றியது. அதனோடு இணைந்து தோன்றிய பத்திரிகைக் கலையின் விரிவால் உரைநடை இலக்கியம் வளர்ச்சியுற்றது எனலாம். உரைநடை இலக்கியம் இன்று பல வகைமைகளோடு பெரும் இலக்கியப் பரப்பைக் கொண்டதாக அமைந்துள்ளது. இலக்கிய ஆய்வில் பெண்ணியம் குறித்துச் சிந்திப்பதும் அண்மைக்கால ஆய்வுப் போக்குகளில் ஒன்றாகும். இந்தியாவில் பெண்ணியம் ஓர் இயக்கமமாகத் தோற்றம் பெற்ற பிறகு பெண்கள் தமக்கான உரிமையை, விடுதலையை முன்னெடுத்துச் செல்லும் கருவியாகத் தற்கால இலக்கியங்களைக் கையில் எடுத்துக்கொண்டனர். அவ்வகையில் குறிப்பிடத்தக்க இலக்கிய வகையாக உரைநடை உள்ளது. குடும்பத்திலும், சமுதாயத்திலும், வேலைத்தளத்திலும் நிலவும் பெண் ஒடுக்குமுறை, சுரண்டல் பற்றிய பெண்களின் உணர்வு நிலைகளும் இந்நிலையை மாற்றுவதற்குப் பெண்களும் ஆண்களும் எடுக்கும் உணர்வு பூர்வமான நடவடிக்கைகளுமே பெண்ணியம் எனக் கருதப்படுகிறது. இத்தகைய பெண்ணியச் சிந்தனைகள் படைப்பாசிரியர் சுகி.சிவம் படைப்புகளில் இடம்பெறும் விதம் குறித்து இவ்வியல் ஆராய்கிறது.

**பெண்ணியம் - விளக்கம்**

ஆங்கிலத்திலுள்ள ‘Feminism’ என்ற சொல் பெண்கள் பற்றிய அறிவுத்துறை சார்ந்த ஒரு சமூக அறிவியலாகும். இச்சொல் தமிழில் ‘பெண்ணியம்’ என்று வழங்கப்பெறுகிறது. மேலும், பெண்ணியம், பெண்ணிலை வாதம், பெண்நிலை ஏற்பு, மகளிரியல், பெண்ணிலைக் கொள்கை என்றும் பல சொற்கள் வழங்கப்படுகின்றன[1]. அவற்றுள் ‘பெண்ணியம்’ என்ற சொல் பொருத்தமாகவுள்ளது. ஆக்சுபோர்டு அகரமுதலி, ‘பெமினிசம்’ என்ற சொல்லுக்கு,

> “பெண்களின் தேவையை நிறைவேற்ற அவர்கள் சார்பாக வாதாடுவது, போராடுவது”[2]

என்னும் பொருளைத் தந்துள்ளது. சென்னைப் பல்கலைக்கழக ஆங்கிலத் தமிழ்ப் பேரகராதி, ‘Feminism’ என்பதற்கு ‘பெண் உரிமைக் கோட்பாடு’, ‘பெண்ணுரிமை ஆதரவு’[3] என்று விளக்கம் தருகிறது.

> “பெண்ணியம் என்பது பெண்ணை ஓர் உயிர் எனச் சமூகம் அங்கீகரித்து அவளுக்கு ஆணுக்குச் சமமான உரிமையும், சுதந்திரமும் கொடுக்கத் தூண்டும் கொள்கையாகும்”[4]

என்னும் கருத்தும்,

> “பெண்கள் சமத்துவம், மதிப்பு என்பதை வீட்டிற்குள்ளேயும் வெளியேயும் பெறுவதற்கான போராட்டமாகும்”[5]

என்னும் கருத்தும் ஈண்டுச் சுட்டத்தக்கது. இக்கருத்தாக்கங்களிலிருந்து, சமுதாயத்தின் அனைத்துப் படிநிலைகளிலிருந்தும் பெண் விடுதலையைக்

கோருவதும், நவீன சிந்தனைகளை உருவாக்குவதுமே பெண்ணியம் என்பது பெறப்படுகிறது.

**பெண்ணிய வகைகள்**

தனக்கெனச் சில கொள்கைகளையும், விதிமுறைகளையும் வகுத்துக்கொண்டு செயல்படும் பெண்ணிய இயக்கங்கள் இன்று பலவாறாகப் பெருகியுள்ளன. இவ்வியக்கங்கள் அனைத்தும் முழுமையாகப் பெண்ணை அடிமைத்தனத்திலிருந்து நீக்குவதும் அவர்களுக்குரிய உரிமையைப் பெற்றுத் தருவதுமாகும்.

1. மிதவாதப் பெண்ணியம் அல்லது தாராளப் பெண்ணியம்
2. தீவிரவாதம் அல்லது தூய பெண்ணியம்
3. சமதர்மப் பெண்ணியம் அல்லது சோசலிசப் பெண்ணியம்
4. ஆன்மிகப் பெண்ணியம்
5. கிறித்துவப் பெண்ணியம்
6. கலாச்சாரப் பெண்ணியம்
7. மனைப் பெண்ணியம் அல்லது இல்லறப் பெண்ணியம்
8. தலைமைத்துவம் வேண்டாப் பெண்ணியம்
9. கறுப்புப் பெண்ணியம்
10. சூழல் பெண்ணியம்
11. பழமைவாதக் குடும்பப் பெண்ணியம்

எனப் பகுப்பர் பெண்ணியலார். இவற்றுள் படைப்பாசிரியர் நால்வகைப் பெண்ணியச் சிந்தனைகளை ஏற்றும், ஒன்றை எதிர்த்தும் பல

கருத்துகளைச் சுட்டிச் சென்றுள்ளார். அவற்றுள் சிலவற்றைச் சான்றாகச் சுட்டலாம்.

**மிதவாதப் பெண்ணியம் (அ) தாராளப்பெண்ணியம்**

மிதவாதப் பெண்ணியம், குடும்ப அமைப்பு, திருமணம், குழந்தைப்பேறு ஆகியவற்றைப் போற்றியது. பெண்விடுதலை, சமத்துவம் ஆகியவற்றைப் போராட்டங்களின் மூலமாக அன்றிச் சமூகச்சீர்திருத்தம், சட்டங்கள் இயற்றுதல், கல்வியறிவை மேம்படுத்துதல், எல்லாவகையான வாய்ப்புகள் தருதல், சமூகமாற்றம் ஆகியவற்றை ஆதரித்துப் பேசிச் செயல்பட்டது மிதவாதப் பெண்ணியம். பெண்கள் தங்களுடைய கௌரவத்தைக் காத்துக் கொள்ளத் தாம் விரும்பியபடி பற்பல பணிகளை ஏற்பதும், சொத்தில் பங்கு பெறுவதும், ஓட்டுரிமை பெறும் தகுதியை உடையவராவதும் மிக முக்கியமென[6] எடுத்துரைத்தார்.

பெண்ணின் சிறப்புக் குறித்து,

"மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத் தாம்வாழுநாளே"

(புறம் : 264)

என்கிறது புறநானூறு.

மிதவாதப் பெண்ணியம் பகுத்தறிவின் அடிப்படையால் எழுந்தது. கடவுளுக்கு முன் எல்லா மனிதரும் சமம் என்ற முறையில் ஆண் பெண் சமத்துவத்தை வலியுறுத்தியது. இல்லற வாழ்க்கையில் நுழையும் ஆணும் பெண்ணும் எத்தகைய தகுதிகளைப் பெற்றிருக்க வேண்டுமென்று 2000 ஆண்டுகட்கு முன்பே வரையறை செய்திருந்தனர். தமிழின்

தொன்மையான நூலான தொல்காப்பியம், மொழிக்கும், இலக்கியத்திற்கும் மட்டும் இலக்கணம் வகுக்கவில்லை. இல்லற வாழ்க்கைக்கும் இலக்கணம் வகுத்து - அவற்றைப் பட்டியலிட்டு நூற்பாவாகக் கூறியுள்ளது.

“பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டொடு
உருவு நிறுத்த காம வாயில்
நிறையே அருளே உணர்வோடு திருவென
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே”.[7]

இத்தனை இயல்புகளையும் சேமமுறப்பேணியும் ‘பூரண இல்லறத்தை’ உருவாக்கும் பொறுப்பு பெண்மைக்கே உரித்தாயிற்று.

தாராளப் பெண்ணியத்தின் தொடக்ககாலம் 18ம் நூற்றாண்டு. அக்காலகட்டத்தில் ஏற்பட்ட தத்துவப் புரட்சி மூலமே முதன்முதலாகத் தாராளப் பெண்ணியத்தின் கொள்கைகள் வேர்விட ஆரம்பித்தன[8]. பதினெட்டாம் நூற்றாண்டின் தத்துவவாதிகள் மற்றும் எழுத்தாளர்கள் ஆண்களாகவே இருந்தனர். அவர்கள் விடுதலை பற்றிப் பேசியபோதும் அவர்களின் வாதங்கள் யாவும் ஆணினத்தின் மேம்பாடு பற்றியும் அவர்களின் விடுதலையைப் பற்றியும் மட்டுமே இருந்தது. பெண்கள் தங்களுக்காகப் படைக்கப்பட்ட, தங்களுக்கென்றே அடிபணிந்து போக வேண்டிய பகுத்தறிவில்லாத பால்வர்க்கம் என்பது அவர்களின் கருத்தாக இருந்தது[9]. அக்கருத்தை மாற்றியவர் மேரி வோல்ஸ்டோன் கிராப்ட் (Many Wollstone Craft) என்பவராவார். இவர் 1790களில் அதிகம் படித்த பெண் தத்துவ ஞானியாவார். இவரே பெண்விடுதலை பற்றிப் பேசி தாராளவாதப் பெண்ணியத்தின் தோற்றத்திற்கு வித்திட்டார். சமூகத்தில் பெண்களுக்குச் சமஉரிமை, எல்லா நிலைகளிலும் அவர்களுக்குச்

சமவாய்ப்புகள் கொடுத்தல் என்பதே இவரது வாதமாகும். கி.பி.1792ல் இவர் எழுதிய பெண்ணுரிமைக் கொள்கை நிறுவீடு' என்ற நூலில் ஆண்கள் தங்களுக்கான உரிமையைச் சரிநிகராகப் பெண்களுக்கு விட்டுக்கொடுத்தும் அவர்களுக்கு ஓர் உயர்வான நிலையைக் கொடுத்தும் வாழவேண்டும் என வற்புறுத்தியுள்ளார்[10] அதன் பிறகு 1869ல் ஜான் ஸ்டுவர்ட்பில் எழுதிய 'பெண் அடக்குமுறை' என்ற நூல் தாராளவாதக் கருத்தை வளர்த்தது[11].

**தாராளவாதப் பெண்ணியத்தின் திட்டங்களும் செயற்பாடுகளும்**

பெண்களுக்கு எல்லா நிலைகளிலும் சமத்துவம் கொடுக்கப்படவேண்டும் என்பதைச் சட்டத்தின் வழி கொண்டுவருவதே தாராளவாதிகளின் மையச் செயல்பாடாக அமைந்தது.

1. சமஊதியம் சமகல்விவாய்ப்பு, சமவேலைவாய்ப்பு இவற்றைப் பெண்களுக்குப் பெற்றுத் தருதல்.
2. பெண்களை வேறுபடுத்தக்கூடிய அத்தனை அரசியல் அமைப்பையும் ஒழித்தல்
3. தொடர்பு சாதனங்களில் காணப்படும் பால் பேதங்களை ஒழித்தல்
4. பெண்களின் பிரச்சினைகளை முழுவதுமாக அறிந்து கொள்ளுதல்.
5. தன்விருப்பக் கருக்கலைப்பு, குழந்தைப்பராமரிப்பு, தாய்மைப்பேறு மற்றும் நல வாய்ப்புகளை ஏற்படுத்தித் தருதல்.

6. பாலியலில் பெண்களுக்கு ஏற்படுத்தப்படும் வன்மைகளையும் கொடுமைகளையும் கடுமையாக எதிர்த்தல் மற்றும் அதற்கான தண்டனையைப் பெற்றுத் தருதல்.
7. பெண் ஒருபால் சேர்க்கையினரைத் தனிப்படுத்தி விமர்சிப்பதைத் தடுத்தல்.[12]

அரசியல் வட்டாரத்திலும் அரசியல் நடவடிக்கைகளிலும் தங்கள் செயற்பாட்டால் தாராளப் பெண்ணியவாதிகள் பெருத்த அளவில் மாற்றத்தைக் கொண்டு வநதனர்.[13]

"பெண்மைக்கு எதிரான பாலியல் கொடுமைகள், பணி இடங்களில் நிகழும் பாலியல் அவமதிப்பு, பாலியல் பலாத்காரம், ஈவ் டீசிங் போன்ற துயங்களில் போராட வேண்டிய கட்டாயம் பெண்களுக்கு நிச்சயம் இருக்கிறது. அதற்கான சீரிய அமைப்புகள் பல தோன்றி இருப்பது இந்தக் காலத்தின் சாதனை"[14] என்னும் கூற்று, தாராளப் பெண்ணியத்தின்பாற்படும். மேலும் ஒரு சான்றாக,

> 'இயற்கையின் பிழைகளை ஆங்காங்கே சரிசெய்து கொள்வதுபோல் ஆணாதிக்கக் கொடுமைகளை அங்காங்கே சரிசெய்யும் முயற்சிதான் சாத்தியம்"[15]

என்னும் கருத்தைச் சுட்டமுடிகிறது.

> "கணவன் மனைவி உறவு ஆண்டான் அடிமை உறவே அல்ல! முதலாளி தொழிலாளி உறவும் அல்ல. அது நட்பு"[16]

என்னும் கருத்தில் தாராளவாதப் பெண்ணியம் பளிச்சிடுகிறது.

**தீவிரவாதம் அல்லது தூயபெண்ணியம்**

தீவிரவாதப் பெண்ணியம் அல்லது தூயபெண்ணியம் ஒரு புரட்சிகர இயக்கமாகும்.

பாலியல் ரீதியான அடக்குமுறை புறக்கணிக்கப்பட்டு பாலியல் ரீதியான உழைப்புப் பங்கீடும், பொருளியல் வர்க்க அமைப்பும் முக்கியப்படுத்தப்பட்ட போது அது சீர்த்திருத்தமாக அமைந்து தீவிரப் பெண்ணியவாதிகள் தந்தை வழிச் சமுதாயத்தை உடைத்தலை முதன்மை நோக்கமாகக் கொண்டனர். இதன் வேர் உயிரியல் ரீதியான குடும்பம் என்பதால் குடும்பத்தையும் முற்றுமாக உடைக்க விரும்பினார்கள்

‘அந்தரங்கம் பகிரங்கம்’ என்பது தீவிரப் பெண்ணியத்தின் முக்கியக் கருத்தாகும். விடுதலைக் காதலை எதிர்த்தும் பெண்களின் ஒழுக்கம், பண்பாடு, குழந்தைப்பேறு ஆகியவற்றை ஆதரித்தும் லெனின் கூறியுள்ள கருத்தும் ஈண்டுச் சிந்திக்கத்தக்கது. குடும்பம் தனிச்சொத்து வாரிசுருவாக்கம் ஆகியவற்றால் பெண்களை ஒடுக்கும் தந்தை மேலாதிக்கச் சமூகத்தை எதிர்த்து எழுந்தது இந்தப் பெண்ணியம். வன்மை கோபம், ஆளுந்திறம் ஆண்களுக்குத் சொந்தமென்றும், சாந்தம், அமைதி, பேணுந்திறம் பெண்களுக்குச் சொந்தமென்றும் சொல்வதானது, வீரம், வன்மை, கோபம், ஆளுந்திறம் புலிக்குச் சொந்தமென்றும், சாந்தம் அமைதி, பேணுந்திறம் ஆட்டுக்குச் சொந்தமென்றும் சொல்வது போன்றதே ஒழிய வேறில்லை. நாம் வேண்டும் பெண்ணுரிமை என்பது என்னவெனில், ஆணைப்போலவே பெண்ணுக்கும் வீரம், வன்மை, கோபம், ஆளுந்திறம் உண்டென்பதை ஆண்மக்கள் ஒப்புக்கொள்ள வேண்டும் என்பதேயாகும்.[17]

“கள்ளுண்டல் காணில் கணவன் பிரிந்து உறைதல்

வெள்கிலன் ஆய்ப்பிறா்) இல்சேறல் - உள்ளிப்

பிறா்கருமம் ஆராய்தல் தீப்பெண்

கிளைமைத் திறமது தீப்பெண்ணின் தொழில்”[18]

என்கிறது சிறுபஞ்சமூலம்.

நம்முடைய சமூகத்தில் பெண்ணடிமைத்தனம் வளா்ந்ததற்குப் பெண்களின் மனதில் ஆழமாகப் பதிக்கப்பட்ட அடிமைச் சிந்தனைகள் தான் காரணம்.

பெண் குழந்தை பெற்றோருக்கு அடிமை! மணமானதும் கணவனுக்கு அடிமை! முதுமைக் காலத்தில் மகனுக்கு அடிமை! இந்த வகையான அடிமைச் சிந்தனைகள்தான் காலம் காலமாகப் பெண்களைக் கோழைகளாக்கி கட்டிப்போட்டிருந்தது. 1969-70 ஆம் ஆண்டுகளில் தீவிரப் பெண்ணியம் தோன்றியது என்றும் இதனை இரண்டாம் அலைப் பெண்ணியம் என்றும் பெண்ணியவாதிகள் குறிப்பிடுகின்றனா்.

“அண்மைக்காலமாகப் பெண்ணியம் மற்றும் பெண் விடுதலை பேசும் சில பெண்கள் குடும்பம் என்கிற கட்டுக்கோப்பையே உடைத்தெறியும் வகையில் எழுதுகிறாா்கள், பேசுகிறாா்கள். கணவன், மனைவி, குழந்தைகள், அன்பு, பாசம் என்பதெல்லாம் பசப்பு வாா்த்தைகள், கெட்ட வாா்த்தைகள் என்கிறாா்கள். திருமணம் செய்யாமலேயே ஆண் பெண் வாழ்வது, குறைந்த பட்சம் இரண்டு மூன்று ஆண்களுடன் உறவு வைத்துக்கொள்வது, அவசியம்

என்றால் பெண்ணும் பெண்ணுமாகவே வாழ்வது இவையெல்லாம் கூடப் பெண்ணியம் என்று முழங்குகிறார்கள்”[19]

என்று படைப்பாசிரியர் குறிப்பிடுவதன் மூலம், தீவிரவாதப் பெண்ணிய எதிர்ப்பை அறிந்துகொள்ள முடிகிறது. மேலும்,

> “பெண்விடுதலை, பெண்ணியக்க அமைப்புகள் எக்காரணத்தைக் கொண்டும் மனைவி கணவனைச் சார்ந்திருக்கக் கூடாது என்று வற்புறுத்துகிறார்கள். இது தவறு”[20]

என்னும் கருத்தும் இதற்குச் சான்றாக அமைகிறது. “பெண்விடுதலை என்பதை முற்றிலும் ஆணுக்கு எதிரான போராட்டமாகவே நடத்த விரும்பும் ஒரு சில இயக்கங்களும் இல்லாமல் இல்லை. ஆணை ஒரு எதிரியாகவே பாவித்துப் பெண்மைக்கும் ஆண்மைக்கும் பகைமூட்டிப் பாழாக்கும் பெண்ணியக்க வாதிகளையும் நான் அறிவேன்”[21] என்று கண்ணியமற்ற பெண்ணியவாதத்தைக் கண்டிப்பதில், தீவிரவாதப் பெண்ணியத்தை எதிர்க்கும் போக்குக் காணப்படுகின்றது.

> “குடும்பம், திருமணம் என்கிற உன்னத நிறுவனத்தை உடைத்தெறிந்து புரட்சி செய்ய விழைக்கிறார்கள் சில புரட்சியாளர்கள். பெண்ணியம், பெண் விடுதலை என்று பொய்முகம் பூண்டு மீண்டும் காட்டுமிராண்டி வாழ்க்கையைத் திணிக்கவே சிலர் விழைகிறார்கள். இந்த முயற்சி வெற்றி பெற்றால் கோடிக் கணக்கான அநாதைகளால் உலகம் நிரப்பப்படும்”[22]

என்னும் கருத்திலும், "தனிப்பட்ட சிலருக்குக் குடும்ப வாழ்வில் ஏற்பட்ட. விபத்துக்கள், துயர நிகழ்வுகள் காரணமாக, ஒட்டு மொத்தமாகக் குடும்ப அமைப்பைச் சபிக்கிறார்கள். சில பெண்கள் கல்லூரியில் பேராசிரியராகப் பணிபுரியும் ஒரு சில திருமணமாகாத, திருமணம் ஆகித் தோல்வி அடைந்த, அல்லது துயரமடைந்த பெண் பேராசிரியர்கள் மாணவியரைத் திருமணம், குடும்பம் என்கிற சிறையை உடைத்தெறியும்படி போதிக்கிறார்கள். இது ஆபத்தில் முடியும்"[23]

என்று எச்சரிக்கை செய்வதிலும் தீவிரவாதப் பெண்ணிய எதிர்ப்பு பளிச்சிடுகிறது.

**மனைப்பெண்ணியம் அல்லது இல்லறப் பெண்ணியம்:**

இல்லறம் என்பது இல்லத்தில் வாழும் நெறி, முறை, ஒழுக்கம் எனப்படும். மனைப்பெண்ணியம் என்பது பெண்ணியத் தொடக்ககாலச் சிந்தனையாகும். பெண்கள் உடலியல் அடிப்படையில் இல்லம் சார்ந்தவர்கள்; வெளியுலகப் பணிகளுக்குத் தகுதியற்றவர்கள்; தாய், மனைவி என்ற இல்லப் பணிகளுக்கு மட்டுமே தகுதியுடையவர்கள். ஆகவே இல்லப் பணிகளை ஆற்றும் தகுதியை வளர்த்துக் கொண்டால் போதுமானது என்று இப்பிரிவினர் கருதினர். ஆனால் காலப்போக்கில் வளர்ந்த பெண்ணியம் இக்கருத்தை ஏற்கவில்லை. மனைப்பெண்ணியம் அல்லது இல்லறப் பெண்ணியம் குறித்து,

"பெண்கள் தங்கள் மதிப்பையும், அந்தஸ்தையும் உயர்த்திக்கொள்ள வேண்டுமென்றால் மரபார்ந்த தாய், இல்லத் தலைவி என்று பங்கு நிலைகளை இன்னும் முன்னேற்றிக்கொள்ள வேண்டும்"[24]

என்பர் பெண்ணியச் சிந்தனையாளர் பிரேமா. தீவிரவாதப் பெண்ணியத்திற்கு முற்றிலும் வேறுபடும் இப்பெண்ணியக் கருத்தோடு படைப்பாசிரியர் கருத்தும் ஒத்திசைந்து செல்வதைக் காணமுடிகின்றது.

"வாழ்க்கைப் பயணத்திலும் பாதுகாப்பாக இருக்க வேண்டுமென்றால் ஒருவர் இயங்க மற்றவர் இடம் கொடுக்கப் பழகிக்கொண்டால் விபத்துக்கள் நேர்வதில்லை"[25]

என்னும் கருத்தின்மூலம், உடலுறவையும், வாழ்க்கைப் பயணத்தையும் சமமான நிலையில் வைத்து மனைப்பெண்ணியத்தை ஏற்றுக்கொள்ளும் போக்கை அறிந்துகொள்ளவியலுகிறது. இதேபோன்று பெண்ணியக்க வகைகளுள் ஒன்றான சமதர்மப் பெண்ணிய வார்த்தையும் படைப்பாசிரியர் ஏற்றுக்கொள்வதும் குறிப்பிடத்தக்கது.

**சமதர்மப் பெண்ணியம் அல்லது சோசலிசப் பெண்ணியம்**

சமதர்மப் பெண்ணியத்தில் பெண் ஒடுக்குமுறைக்கு, ஆணின் திறன் அல்லது சக்தி, முதலாளித்துவம் ஆகிய இரு காரணங்களைச் சுட்டிக்காட்டுகின்றார். சமதர்மப் பெண்ணியம் கூலிவேலை, குடும்பம், ஆகிய மூன்று கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டது என்பர் பிரேமா.

"எந்த வீட்டில் பெண்ணை அடக்கி ஓர் ஆண் ஜெயிக்கிறானோ- அங்கே ஒரு மிருகம் ஜெயித்தது என்று பொருள். எங்கே ஒரு ஆணை அடக்கி பெண் ஜெயிக்கிறாளோ அங்கே ஒரு பிடாரி ஜெயித்தது என்று பொருள். கணவன் மனைவியிடமும், மனைவி கணவனிடமும் தோற்றுப்போகத் தயாராக இருந்தால் குடும்பம் ஜெயிக்கிறது!"[26]

என்னும் கருத்தைச் சமதர்மப் பெண்ணியவாதக் கருத்தாகவே கொள்ள முடிகிறது. "சமத்துவத்தை நோக்கி நகரவே முடியாதபடி, பெண்மையைக் கீழ்மைப்படுத்தும் எந்த அக்கிரமத்தையும் என்னால் ஏற்க முடிவதில்லை"[27] என்று கூறும் படைப்பாசிரியர்,

"பெண்களை மதித்து, அவர்கள் உணர்வுகளைப் போற்றி அவளுக்குத் துரோகம் செய்யாது, அடிமைப்படுத்தாது, அரவணைப்பு காட்டும் நல்ல ஆண்மகன் தலைமையிலான குடும்பம் என்பதே சிறந்த பாதுகாப்பான ஏற்பாடு என்று நான் நம்புகிறேன்"[28]

என்றும் பதிவு செய்திருப்பது, சமதர்மப் பெண்ணியவாதம் பற்றிப் படைப்பாசிரியருடைய புரிதலை எடுத்துக்காட்டுகிறது. தற்காலப் பெண்ணியம் பல வகைகளாகப் பெருகியிருப்பினும், பழமைவாதக் குடும்பம் சார்ந்த பெண்ணியக் கோட்பாடும் இங்குக் குறிக்கத்தக்கது.

**பழமைவாதக் குடும்பம் சார்ந்த பெண்ணியம்**

இல்லறம் பெரும்பாலும் அகத்துப்பெண், புறத்துக்கு ஆண் என்றே அமைந்துள்ளது. ‘1980-இல் பெட்டி ப்ரைடன், சீன் பெத்தே எல்ஷ்டைன், ஜெர்லைன் க்ரீர், தோல்க் மில்லன் ஆகியோர் தோற்றுவித்த பெண்ணியமானது, இல்வாழ்க்கை முறைக்குத் தக்கவாறு சமூகத்தைச் சீர்படுத்துவது அவசியமாகிறது’ [29] என்னும் கருத்து, பழமைவாதக் குடும்பம் சார்ந்த பெண்ணியவாதக் கோட்பாட்டை வலியுறுத்துகிறது.

> “ஆண்கள் பிள்ளைகளைக் கவனித்தல் என்ன? என்பார்கள். ஆழமான அன்பு என்பதை ஒரு தாய் குழந்தையிடம் வெளிப்படுத்துகிற அளவு ஆணால் வெளிப்படுத்த முடியாது”[30]

என்னும் கருத்து பழமைவாதக் குடும்பம் சார்ந்த பெண்ணியத்தின்பாற்படும் என்றே கொள்ளலாம். இருபதாம் நூற்றாண்டில் இந்தியாவில் படிப்படியாகப் பெண்ணியம் பல நிலைகளில் வளர்ந்துள்ளது. தாராளவாதப் பெண்ணியம், மனைப்பெண்ணியம், சமதர்மப் பெண்ணியம், பழமைவாதப் பெண்ணியம் ஆகிய நான்கு வகைப் பெண்ணியவாதக் கோட்பாடுகளோடு ஒத்த கருத்தினை வெளியிடும் படைப்பாசிரியர், தீவிரவாதப் பெண்ணியத்தைக் கண்டிக்கவும் தவறவில்லை. குடும்பம், குழந்தைப்பேறு, குழந்தை வளர்ப்புக்கு எதிரானவர்களைச் சாடும் படைப்பாசிரியர், பெண்ணை மதித்துப் போற்றும் சமதர்மப் பெண்ணியத்தைப் பெரிதும் போற்றியிருப்பதை ஆசிரியருடைய படைப்புகளின் வழி அறியவியலுகிறது. மேலும் ஆய்விற்கு எடுத்துக்கொண்ட படைப்புகளில் பெண்விடுதலை, மறுமணம், பெண் உரிமை, மாமியார்-மருமகள் உறவு, அலுவலக மகளிர்

நிலை, ஆணாதிக்கம், தந்தை வழிச் சமூகம் முதலான பெண்ணியம் சார்ந்த பதிவுகள் இடம்பெற்றுள்ளமை ஈண்டுக் குறிக்கத்தக்கன.

**பெண்விடுதலை:**

சமுதாயத்தில் ஆண் துணையின்றிப் பெண் தனித்தியங்க முடியாது என்ற நிலையே நீடித்தது. "இளமையில் தகப்பன், பருவத்தில் கணவன், விதவையானபின் மக்கள்-இவர்கள் காவலில் அன்றிப் பெண்கள் தன்னிச்சையாக இயங்கலாகாது"[31] என்னும் கூற்று பெண்கள் நிலையைத் தெளிவுபடுத்துகிறது. சமுதாய அமைப்பில் பெண்களுக்கும் ஆண்களுக்குமிடையே பல வேறுபாடுகள் நிலவின. பெண் தான் வீட்டுக் கடமைகள் அனைத்தையும் செய்ய வேண்டுமென்று நடத்தப்பட்டிருக்கிறாள். இதனை,

> "ஆணின் நலத்துக்குப் பயன்படுவதற்கும் ஆணின் திருப்திக்கும் ஆணின் பெருமைக்கும் பெண் ஓர் உபகருவி என்பதல்லாமல் வேறு என்ன? ஓர் ஆணுக்கு ஒரு சமையல்காரி; ஓர் ஆணின் வீட்டிற்கு ஒரு வீட்டுக்காரி; ஓர் ஆணின் குடும்பப் பெயருக்கு ஒரு பிள்ளை விளைவிக்கும் பண்ணை; ஓர் ஆணின் கண் அழகிற்கும் மனப்புளகாங்கிதத்திற்கும் ஓர் அழகிய அலங்கரிக்கப்பட்ட பொம்மை என்பதல்லாமல் பெண்கள் பெரிதும் எதற்குப் பயன்படுகிறார்கள், பயன்படுத்தப்படுகிறார்கள்?"[32]

என்னும் கருத்து வலிமைப்படுத்துகிறது. இத்தகைய சமுதாய அமைப்பில் இருக்கும் பெண்களின் நிலை இலக்கியப் படைப்பாளர்களால் உலகின்

கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டுள்ளது. படைப்பாசிரியரும் பெண்விடுதலை குறித்துத் தன் கருத்தாக்கத்தைப் பதிவு செய்துள்ளார். "இந்தியச் சமூக அமைப்பில் தளபுள என்று கொதித்துக் கொண்டிருக்கும் இன்றைய சிக்கலான பிரச்சினை பெண்விடுதலை. பெண்ணடிமைத் தனத்தைக் களைய பாரதி, திரு.வி.க., பெரியார் போன்ற சிந்தனையாளர்கள் தமிழ் மண்ணில் முயன்றனர். அடிமைப் பெண் வயிற்றில் அடிமையே பிறப்பான். ஆகவே பெண்ணடிமை தீரும் மட்டும் மண்ணடிமையும் தீராது என்று கவலைப்பட்டவன் பாரதி... ஆண்களால் கொடுமைப்படுத்தப்படும் பெண்களுக்கு ஆதரவாகச் செயல்படும் பல்வேறு அமைப்புகள் நற்பணி ஆற்றுவதைச் சமூகம் நன்றியோடு கொண்டாட வேண்டும்"[33] என்று படைப்பாசிரியர் கூறிச் செல்வது பெண்விடுதலையை வலியுறுத்துவதாக அமைகிறது.

சமுதாயத்தில் விதவையாகும் பெண்கள் நிலை குறித்துச் சிந்தித்துள்ளதும் இங்குக் குறிப்பிடத்தக்கது.

**மறுமணம்**

கணவன் இறந்துவிட்டால், ஒரு பெண் இறுதிவரையிலும் விதவைக் கோலம் கொள்வதும் அக்கால வழக்கமாயிருந்தது. சங்க இலக்கியங்களில் அக்கால விதவையரின் அவல வாழ்வைக் காணமுடிகிறது.

"ஒண்ணுதல் மகளிர் கைம்மை கூர,
அவிரறல் கடுக்கு மம்மென்,
குவையிருங் கூந்தல் கொய்தல் கண்டே"[34]

"… … … நறுநெய் தீண்டாது,
ஆடை, இடைக் கிடந்த கை பிழி பண்டம்,
வெள் எட் சாந்தொடு, புளிப் பெய்து சுட்ட
வேளை வெந்தை, வல்சி ஆக,
பரற் பெய் பள்ளிப் பாய் இன்று வதியும்
உயவல் பெண்டிரேம் அல்லேம் மாதோ?"[35]

ஆகிய புறநானூற்றுப் பாடல்கள் சுட்டிக்காட்டும் இத்தகைய அவலம் நம்நாட்டில் மட்டும் இல்லை. மேலை நாட்டிலும் விதவையர் நிலை அவலத்திற்குரியதாகவே இருக்கிறது. விதவைப் பெண்கள் எளிய உணவு உண்டு வாழ்ந்ததை, 'எனக்குக் கொஞ்சம் விதவை உணவாகிய காய்கறிச் சாறே போதும்'[36] என்னும் கருத்து உறுதிப்படுகிறது. இக்கொடுமையை எதிர்த்தும் விதவை மறுமணத்தை ஆதரித்தும் பலரும் பேசியும் எழுதியும் வந்தனர். காந்தியடிகள்,

> "விதவைகள் வாழ்வில் மறுமலர்ச்சி ஏற்படும் வகையில், மனைவியை இழந்த ஆடவனுக்கு மறுமணம் செய்துகொள்ள எவ்வளவு உரிமை உண்டோ அவ்வளவு உரிமை ஒவ்வொரு விதவைக்கும் உண்டு"[37]

என்று விதவையர்க்குள்ள மறுமண உரிமையைத் தெளிவுபடுத்தியுள்ளார். பாரதியாரும், "எல்லா விதவைகளும் மறுமணம் செய்துகொள்ள இடம்கொடுப்பதே இந்தியாவில் மாதருக்குச் செய்யப்படும் அநியாயங்கள் எல்லாவற்றிலும் பெரிதான அநியாயத்திற்கு மாற்று; மற்றப் பேச்செல்லாம் வீண்"[38] என்று கூறியிருப்பது இங்குச் சுட்டத்தக்கது.

"என் மனைவி இறந்திட்டாள்
வேறு மணம் வேண்டுமென்பாய்
பின் நீ சாவுமுனை அடைந்திட்டால்
உன் மனையாள் காவு கொடுக்க
வேண்டுமோ காதல் தனை?"[39]

என வினவும் கலைஞர் மு.கருணாநிதி, ஆணுக்கும் பெண்ணுக்கும் தன் துணையை இழந்துவிட்டால் மற்றொரு துணையைத் தேர்ந்தெடுக்கச் சமவுரிமை உண்டு என்பதை உறுதிப்படுத்துகிறார். அந்த வரிசையில் படைப்பாசிரியரும்,

"மனைவி செத்தால் பத்தாம் நாள் கணவன் புதுமாப்பிள்ளை?
ஆனால் கணவன் செத்தால் மனைவி மட்டும் வாழாவெட்டி...
ஆணுக்கு மறுமணம் நடக்கும் வேகத்தில் பெண்ணுக்கு மறுமணம் நடக்கிறதா? ஏன் இந்த அநீதி?"[40]

என்று சமூகத்தைச் சாடுவதில் மறுமணம் புரிவதில் இருவருக்கும் சமஉரிமை உண்டு என்பதை வலியுறுத்தும் போக்கைக் காணமுடிகின்றது. இன்றைய பெண்கள் சமுதாயம் பெண்ணுரிமைக் கோட்பாடுகளை வகுத்துச் செயற்படும் அளவிற்குச் சீரடைந்திருக்கும் நிலை குறிக்கத்தக்கது.

**பெண்ணுரிமை:**

ஆணும் பெண்ணும் எல்லாத்துறையிலும் சமஉரிமை படைத்தவர்கள் என்ற சிந்தனையின் விளைவாகவே பெண்ணுரிமைக் கோட்பாடு தோன்றியது. "பெண்ணுரிமை என்பது ஓர் இயக்கமாகவும் கோட்பாடாகவும் பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் ஐரோப்பாவில் தோற்றம்

பெற்றது".[41] மேலைநாட்டில் பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் இச்சிந்தனையின் முன்னோடியாக மேரி உல்ஸ்டன் கிராப்ட் என்னும் ஆங்கிலப் பெண்மணியைக் குறிப்பிடுகின்றனர். பெண்கள் முழுவிடுதலையை வென்று பெறாத வரையில் பாட்டாளிவர்க்கம் முழுவிடுதலையை அடையமுடியாது என்ற உறுதியோடு, உருசியாவில், தம் ஆட்சியின் மூலம் பெண்ணுரிமையை நடைமுறைப்படுத்திய இலெனின், உலக நாடுகளில் பெண் விடுதலைக்காகப் பணியாற்றுவோருக்குப் பாதையமைத்துக் கொடுத்தார் என்று கூறமுடிகிறது. இந்தியாவில் பத்தொன்பதாம் நூற்றாண்டுச் சமுதாயத் தேவை கருதிப் பெண்ணுரிமைக்காகப் பிரம்மசமாஜம் முதலான பல இயக்கங்கள் தோன்றின. பெண்ணுரிமைக்காகப் பாடுபட்ட ஈசுவர சந்திர வித்யாசாகர், காந்தியடிகள், இரானடே முதலான பலருள் இராசாராம் மோகன்ராய் முதன்மையிடம் பெறுபவர். அவரைத் தொடர்ந்து அன்னிபெசண்ட் அம்மையார், சுப்புலெட்சுமி, டாக்டர் முத்துலெட்சுமி ரெட்டி, வேதநாயகம்பிள்ளை, மாதவையா, தந்தை பெரியார், திரு.வி.க., பாரதியார், பாரதிதாசன், அறிஞர் அண்ணா முதலானோர் பெண்ணுரிமைக்காக ஆற்றிய பணிகளும் குறிப்பிடத்தக்கன.

> "இந்திய மறுமலர்ச்சி இயக்கத்தின் தோற்றத்திற்குக் காரணம் சமயச் சீர்த்திருத்தமே எனினும் அதன் நடவடிக்கைகளில் முன்னுரிமை பெற்றது பெண்ணுரிமை எனல் மிகையாகாது. அந்த அடிப்படையில் இராமலிங்க அடிகள் முதல் பெரியார், அண்ணாதுரை வரை பலரும் அந்தக் கோணத்தில் அரும்பணியாற்றிய பின்னரும்

பெண்களின் நிலை அவர்களுக்குச் சமமாக வளர்ந்து விட்டதாகத் தெரியவில்லை."[42]

என்னும் கூற்று இங்குச் சுட்டிக்காட்டத்தக்கது.

திரு.வி.க. 'பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத்துணை' என்னும் நூலின் மூலம் பெண் விடுதலைக்குக் குரல் கொடுத்ததும் சிந்திக்கத்தக்கது. பெண் உரிமை குறித்து ஜவஹர்லால் நேருவுக்கும் தீர்க்கமான சிந்தனையிருந்தது. பொருளாதாரச் சுதந்திரமும் பொருளீட்டும் வாய்ப்பும் பெண்களுக்குக் கிடைக்கும்போதுதான் பெண்விடுதலை சாத்தியமாகிறது. இல்லையெனில் கணவரையோ அல்லது வேறு ஒருவரையோ பெண்கள் சார்ந்திருக்கும் வரையிலும் விடுதலைக்கே இடமில்லை என்பது நேருவின் பெண்ணுரிமைச் சிந்தனையாகிறது. மாதரை விடுதலை பெறச் செய்து அவர்களுடன் ஆண்களும் ஒன்று கூடி உழைக்கும் போதே சோசலிச நிர்மாணம் தொடங்கப்பெறுகிறது என்றார் திரு.வி.க.இச்சீர்திருத்தச் சிந்தனையாளர்களின் கருத்துகளை உள்வாங்கிக் கொண்டு, படைப்பாசிரியரும் பெண்ணுரிமை குறித்துச் சிந்தித்துள்ளார்.

"எதிர்ப்பதும் மறுப்பதும் தன் நிலையைக் கணவன் ஏற்கவேண்டும் என்று எதிர்பார்ப்பதும் பெண்ணுக்குரிய ஜீவாதார உரிமை"[43]

என்னும் கூற்று பெண்ணுரிமை குறித்த ஆழமான கருத்தாகும். மேலும்,

"மதுரையை அரசாண்ட மீனாட்சியம்மை தம் தந்தை இறந்தபோது தாமே இறுதிக்கடன் செய்கிறார் என்று திருவிளையாடல் புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது"[44]

என்றும் கூறிச்செல்வது, புராணத்திலிருந்து சான்று காட்டிப் பெண்ணுரிமையை வலியுறுத்தும் போக்காக அமைகிறது. பலரால் பலவந்தப்படுத்தப் பட்ட ஜாபாலி என்ற பெண், தன் மகனைக் குருகுலத்திற்கு அனுப்பினாள். தந்தை பெயர் கேட்டால், ஜாபாலி மகன் என்று தாயின் பெயரைச் சொல்லச் சொல்கிறாள். குருநாதரும் உன்தாய் உண்மை சொல்லச் சொன்னதைப் போல நீயும் சத்தியத்தைச் சொல்லியிருக்கிறாய். ஜாபாலி புத்திரனே. நீ வேதம் கற்க முழுத்தகுதி உடையவன்[45] என்று கூறியதை எடுத்துக்காட்டுவது பெண்ணுரிமைக்கு அரண்சேர்ப்பதாக உள்ளது. மாமியார்-மருமகள் உறவு குறித்த சிந்தனையும் சுட்டத்தக்கதாகிறது.

**மாமியார்-மருமகள் உறவு:**

இன்று பல குடும்பங்களில் மாமியார்-மருமகள் உறவுநிலை சிக்கலானதாகவே இருக்கிறது. ஒரு காலத்தில் மருமகளாக இருக்கும் பெண். மாமியாரானதும், தான் பட்ட துன்பத்தை நினையாமல், மருமகளைக் கொடுமைப்படுத்துவது பேதைத்தனமான செயலாக இருக்கிறது. இதற்குச் சான்றாக,

> “மேலும் பார்; ஆண்பிள்ளைகள்தான் மூடர்களாக இருக்கிறாகள் என்றால் மாமியார் பதவிக்கு ஏறிவிடும் பெண்ணுக்குமா சூடும் சுரணையும் அழிந்து போக வேண்டும்? மாமியார் ஆகிவிட்டால் வீட்டுக்கு ராஜாத்தியாகிவிட்டார் என்று எண்ணிக்கொள்ளும் பெண்பிள்ளையின் பேதைத்தனத்தை என்னென்று சொல்வது”[46]

என்னும் கூற்றினைக் குறிப்பிடலாம். மாமியாரானதும் தனக்குப் பெருமை கூடிவிட்டதாகவும், அதிகாரம் செய்துதான் ஆகவேண்டும் என்றும் எண்ணுகிறாள். இதற்குக் கால இடைவெளி, தன்னலம் போன்ற பல காரணங்கள் சுட்டப்படுகின்றன.

படைப்பாசிரியரும் மாமியார் - மருமகள் சிக்கலுக்கு, மாமியாரின் எதிர்காலப் பாதுகாப்பு குறித்த பயமே காரணம் என்பதைக்கண்டு, சிக்கலுக்குத் தீர்வாக,

> "தன்தாயின் எதிரகாலப் பாதுகாப்பு தன் மனைவியால் எக்காரணம் கொண்டும் தகர்க்கப்படாது என்று ஆண்மகன் தன் தாய்க்குப் புரியவைத்துவிட்டால், உத்தரவாதம் கொடுத்துவிட்டால் பெருவாரியாக ஒரு தாய் அமைதியாகிவிடுவாள்"[47]

என்னும் கருத்தை முன்வைப்பது சிந்திக்கத்தக்கது. மேலும் மாமியார்-மருமகள் உறவு நிலை சீரடைய, "உறவுகள், ஆசாபாசங்கள், உணவுத்தயாரிப்பு, சினிமா, வெட்டிப்பேச்சு, புடவை, நகை, டம்பம் என்கிற குறுகிய வட்டத்தில் இருந்து பெண்கள் வெளியேறி வரத் தொடங்கினாலேயே மருமகள் பலர் சுதந்திரதினம் கொண்டாட முடியும்"[48] என்றும் அறிவுரை கூறுகிறார்.

> 'நல்ல மாமியார்களைப் பெற்ற மருமகள்கள் இரட்டை அம்மாக்களைப் பெற்றது மாதிரி. அம்மா என்ற சொல்லுக்கு நூறுகோடி மந்திரங்களுக்கு இல்லாத பலம் இருக்கிறது!

கல்லைக் கூடக் கண்ணீராய்க் கரைக்கும் திறம் இருக்கிறது!

மாமியார்களை அம்மாக்கள் ஆக்குவோம்'[49]

என்று மாமியார்-மருமகள் உறவு நிலை சீரடைய அறைகூவல் விடுக்கும் திறம் போற்றுதற்குரியது.

அலுவலக மகளிர் நிலை குறித்தப்பதிவுகளும் இங்குக் குறிக்கத்தக்கன.

**அலுவலக மகளிர் நிலை:**

வீட்டை விட்டு வெளியே சென்று அலுவலகப் பணிபுரியச் செல்லும் பெண்களுக்கும் பல உரிமைகள் மறுக்கப்படுகின்றன.

"அலுவலகத்தில் ஆண்கள் மட்டும் தன் சக ஊழியர் பெண் என்றாலும் பேசலாம், ஈசலாம்… ஸ்கூட்டரில் கொண்டு போய் விடலாம். ஆனால் மனைவி மட்டும் மழையாகவே இருந்தாலும் மானேஜரின் காரில் வரக்கூடாது. அடுத்தவன் ஸ்கூட்டரில் வருவதுதான் ஆபத்தான ஆரம்பம். ஆண்களின் இந்த அநியாயமான அடக்குமுறைகள்தான் குடும்பத்தில் ஆயிரம் ஆயிரம் சிக்கல்களை ஏற்படுத்துகின்றன. பெண்களை நித்திய சோகத்தில் ஆழ்த்துகின்றன"[50]

என்னும் கூற்று அலுவலகப் பெண்களுக்கு மறுக்கப்படும் உரிமையை எடுத்தியம்புகிறது.

"சீதைக்காவது ராமாயணத்தில் ஒருமுறைதான் அக்கினிப் பிரவேசம். அலுவலகம் போகும் இன்றைய சீதைகளுக்கு ஒவ்வொரு நாளும்

அக்னிப்பிரவேசம் தான். அந்த ராமனாவது சந்தேகத்தை வெளிப்படையாகக் கேட்டுவிட்டான். இந்தச் சாப்பாட்டு ராமர்கள் மனைவியிடம் கேட்கவும் தயக்கம்… நம்பிக்கையும் இல்லை. திருட்டுத்தனமாக மனைவியின் ஹேண்ட் பேக்கைக் குடைகிறார்கள். பீரோவை உருட்டுகிறார்கள். அலுவலகத்துக்கு ஆளை அனுப்பித் துப்புத் துலக்குகிறார்கள். தொலைபேசியை ஒட்டுக் கேட்கிறார்கள். அலுவலகத்திலிருந்து தாமதமாக வரநேர்ந்தால் மனைவியைப் பார்க்கும் பார்வையே அசிங்கமான அக்கினிப் பிரவேசம்”[57]

என்று அலுவலகம் செல்லும் மகளிருக்கு இழைக்கப்படும் கொடுமைகளை எடுத்துக்காட்டுகிறார் படைப்பாசிரியர். இத்தகைய நிலைக்குக் காரணமாக அமையும் ஆணாதிக்க மனப்பான்மையும் இங்குக் குறிப்பிடத்தக்கது.

**ஆணாதிக்கச் சமுதாயம்:**

ஆணாதிக்கம் என்பது பெண்ணியக் கருத்தாக்கங்களில் மிக முக்கியமானதாகும். தீவிரவாதப் பெண்ணியவாதிகள் பெண்ணியத்தின் உண்மைப்பொருளை உணர்ந்து பார்ப்பதில்லை. குடும்பத்தகர்ப்பு, வரைமுறையற்ற பாலியல் சுதந்திரம், தாய்மைப் புறக்கணிப்பு, ஆணைப்போன்று புகைப்பது, குடிப்பது என்று கருத்தியல்களை முன்வைக்கும் தீவிரவாதப் பெண்ணியம், பெண்ணியமே அல்ல; அது ஆணாதிக்கம் ஆகும்.

“…சமுதாயத்தில் இருக்கக்கூடிய ஆணாதிக்கப் பலதார முறையை இப்பெண்ணியவாதிகள் தமக்குள் விரிவுபடுத்தும் பண்பாட்டில் ஆணாதிக்க மயமாகின்றனர். வரைமுறையற்ற

ஆணாதிக்கப்புணர்ச்சியை ஆணுக்கு மட்டுமல்ல பெண்ணுக்கும் உண்டு என்ற கோரிக்கையின் பின் இது இன்று ஏகாதிபத்திய பண்பாடாகிறது… ஆணின் மனிதவிரோதச் செயல்களைப் பெண் இரவல்வாங்கி முன்வைக்கும் பெண்ணியம் ஆணாதிக்கமாகும். இதற்கு எதிராக ஆணாதிக்க ஒழுக்கக்கேடுகளை எதிர்த்துப் போராடுவதே உண்மையான பெண்ணியம்”[52]

என்னும் கூற்று இதற்கு அரண்சேர்க்கிறது. “இன்றைய குடும்பச் சிக்கல்களுக்குக் காரணம் பெண்கள் என்பது போல வெளிப்படையாகத் தோன்றினாலும் உண்மை இது இல்லை. ஆண்களின் அத்துமீறல், அராஜகம், அடிமைப்படுத்தும் ஆக்கிரமிப்பு உணர்வே உண்மையான மூலகாரணம்”[53] என்று கூறிச்செல்வதும், “பொருளாதார ரீதியாகவும், அதிகார ரீதியாகவும் முடிவுகள் எடுக்கும் அதிகாரம் ஆணுக்குரியது. கிட்டத்தட்ட ஒவ்வொரு ஆணும் ஒரு சர்வாதிகாரியே”[59] என்று நடப்பியலை வெறுத்துக் கூறுவதும் ஆணாதிக்கச் சமூகத்தைச் சாடும் படைப்பாசிரியரின் நேர்மை சிறப்பாகச் சுட்டத்தக்கது.

தந்தைவழிச் சமூகமும் இங்குக் குறிக்கத்தக்கதாகிறது.

**தந்தைவழிச் சமூகம்:**

பெண்ணடிமைத் தனத்தின் தொடக்க காலத்தைக் குறிப்பது தந்தை வழிச் சமூக அமைப்பு ஆகும்.

“காட்டுமிராண்டிக் காலத்திலிருந்து வேட்டைக்காக, உயிர் வாழ்வதற்காகப் போராடி ஒருவரை ஒருவர் அழிக்கும் உயிர் பலம் அவசியமாக இருந்தது. போராட்டத்தின் முடிவில் தோற்ற உயிரை

அடிமையாக்கி ஆளும் வெறியும் Survival-க்கு அவசியமாக இருந்தது. இந்த வெறித்தனமான வேட்டையில் இருந்து, சேகரிப்பும், குழந்தைகளும், குழந்தைகளைப் பராமரிக்கும் பெண் இனமும் பாதுகாப்பாகப் பிரித்து வைக்கப்பட்டன"[55]

என்று குறிப்பிட்டுச் செல்வதும்,

"பெண் செல்வம் போல, உடைமையாகக் கருதப்பட்டாள். ஆண் உரிமைத் தலைவனாக இருக்கலானான். இந்த ஆண் இல்லை என்றால், வந்த ஆணுக்குப் பெண் உடைமைப் பொருள் ஆனாளே ஒழிய அவள் தலைமை ஏற்க வழியே இல்லாமல் போனது. ஆங்காங்கே சில விதிவிலக்குகள்தான் நிகழ்ந்தனவே ஒழிய ஆண் ஆதிக்கம் என்கிற கட்டமைப்பில் இருந்து குடும்பங்கள் வெளியேறவே முடியாத நிலை இருந்தது"[56]

என்னும் கூற்றும், தந்தை வழிச் சமூக அமைப்பைத் தெளிவாகப் படம்பிடித்துக்காட்டுகின்றன. 'படித்துச் சிந்திக்கின்ற அறிவாளியாக அறிவிக்கப்பட்ட ஆண்கள் கூடத் தயக்கம் இன்றிப் பெண்களுக்கு அநீதி இழைக்கிறார்கள். தெருநாய் போல நடந்து கொள்கிறார்கள்"[57] என்று படைப்பாசிரியர், இத்தகைய ஆண்வர்க்கத்தினைக் கண்டிக்கவும் தவறவில்லை.

**தொகுப்புரை**

சமுதாயத்தின் அனைத்து நிலைகளிலிருந்தும் பெண் விடுதலையைக் கோருவதும், நவீன சிந்தனைகளை உருவாக்குவதுமான பெண்ணியம் குறித்த வரையறை ஆய்வில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. தாராளவாதப் பெண்ணியம், தீவிரவாதப் பெண்ணியம், சமதர்மப் பெண்ணியம், ஆன்மிகப்பெண்ணியம், கிறித்துவப் பெண்ணியம், கலாச்சாரப் பெண்ணியம், மனைப்பெண்ணியம், தலைமைத்துவம் வேண்டாப் பெண்ணியம், கறுப்புப் பெண்ணியம், சூழல் பெண்ணியம், பழமைவாதக் குடும்பப் பெண்ணியம் எனப் பெண்ணிய வகைகள் ஆய்வில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. தாராளப் பெண்ணியம், மனைப்பெண்ணியம், சமதர்மப் பெண்ணியம், பழமைவாதக் குடும்பம் சார்ந்த பெண்ணியம் ஆகிய பெண்ணியவாதக் கருத்துகளோடு ஒத்தும், தீவிரவாதப் பெண்ணியத்திற்கு எதிராகவும் அமையும் படைப்பாசிரியரின் கருத்தாக்கங்கள் ஆய்வில் புலப்படுத்தப்பெற்றுள்ளன.

ஆண்கள் பெண்களை மதிக்க வேண்டும். பெண்கள் வீட்டின் மூலையிலிருந்து குறுகிய கண்ணோட்டத்தை விட்டு விலகி வெளியே வர வேண்டும். விலைமதிப்பற்ற தாயாக மாமியார்கள் மாறவேண்டும் என்பன போன்ற கருத்துகளும் ஆய்வின் வழி பெறப்படுகின்றன.

அலுவலகமகளிர் நிலை, ஆணாதிக்கம், தந்தைவழிச் சமூகம் ஆகியன குறித்துச் சான்றுகளுடன் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. இன்றைய உலகமயச் சூழலில் விளைந்த பின்நவீனத்துவ ஆணாதிக்கத்தை எதிர்த்துப் போராடுவதும், குடும்ப நிறுவனத்தைக் காப்பாற்றுவதும் உண்மையான பெண்ணியவாதியின் கடமையாகும் என்னும் படைப்பாசிரியரின் பெண்ணிய நோக்கு ஆய்வில் வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

**சான்றெண் விளக்கம்**

1. பிரேமா, பெண்ணியம், ப.7.
2. மேலது., ப.8.
3. மேலது., ப.8.
4. மேற்கோள்: ஆ.புனிதா (கட்.ஆ), ‘இன்றைய நடைமுறை வாழ்க்கையில் பெண்ணியச் சிந்தனைகள்’, சு.சண்முகசுந்தரம் (தொகு.ஆ.), பெண்ணியம், ப.35.
5. மேலது., ப.36.
6. தேவதத்தா (கட்.ஆ.), ‘பெண்ணியம் ஒரு வரலாற்றுப் பார்வை’, சு.சண்முகசுந்தரம் (தொகு.ஆ.), பெண்ணியம், ப.17.
7. தொல்.பொருள். மெய்ப்பாட்டியல், நூ.25.
8. பிரேமா, பெண்ணியம், ப.61.
9. மேலது., ப.61.
10. மேலது., ப.61.
11. மேலது., ப.62.
12. மேலது., ப.66.
13. மேலது., ப.67.
14. சுகி.சிவம், கம்பன்: நேற்று-இன்று-நாளை, ப.56.
15. சுகி.சிவம், நல்ல குடும்பம் நமது இலட்சியம், ப.117.
16. மேலது., ப.27.
17. தந்தை பெரியார், பெண் ஏன் அடிமையானாள்? ப.24.
18. சிறுபஞ்சமூலம். பா.8.
19. சுகி.சிவம், நல்ல குடும்பம் நமது இலட்சியம், ப.119.

20. மேலது., ப.12.

21. சுகி.சிவம், கம்பன்: நேற்று-இன்று- நாளை, ப.57.

22. சுகி.சிவம், நல்ல குடும்பம் நமது இலட்சியம், முன்னுரை, ப.3.

23. மேலது., ப.5.

24. மேற்கோள்: மு.சாதிக்பாட்சா (கட்.ஆ.), 'சுகி.சிவத்தின் நல்லகுடும்பம் நமது இலட்சியம்- ஒரு பெண்ணியப்பார்வை', துரை.அங்குசாமி (தொகு.ஆ.), சொல்வேந்தர் சுகி சிவம் ஒரு பன்முகப்பார்வை, ப.176.

25. சுகி.சிவம், நல்ல குடும்பம் நமது இலட்சியம், ப.18.

26. மேலது., ப.13.

27. மேலது., ப.111.

28. மேலது., ப.124.

29. மேற்கோள்: மு.சாதிக்பாட்சா (கட்.ஆ.), 'சுகி.சிவத்தின் நல்லகுடும்பம் நமது இலட்சியம்- ஒரு பெண்ணியப்பார்வை', துரை.அங்குசாமி (தொகு.ஆ.), சொல்வேந்தர் சுகி சிவம் ஒரு பன்முகப்பார்வை, ப.176.

30. சுகி.சிவம், நல்ல குடும்பம் நமது இலட்சியம், ப.61.

31. திருலோக சீதாராம் (மொ.பெ.ஆ.), மனு தரும சாத்திரம், ப.157. மேற்கோள்: மு.மதியழகன், பாவேந்தரின் உரைநடைத்திறன், ப.41.

32. வே.ஆனைமுத்து (பதி.ஆ.), பெரியார் ஈ.வே.ரா.சிந்தனைகள், ப.127.

33. சுகி.சிவம், கம்பன்: நேற்று- இன்று –நாளை, ப.56.

34. புறம்: 25: 12-14, கழக வெளியீடு, பக். 73-74.

35. புறம்: 246:5-10, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் வெளியீடு, பக்.112-113.

36. "Let me have a portion of widows vegetable soup" –மேற்கோள்: ச.பரிமளா, வாஸந்தி நாவல்கள் ஓர் ஆய்வு, பக். 28-29.

37. காந்தியடிகள், பெண்களுக்கு, அ.வெ.நடராசன் & வெ.ராமசாமி (மொ.பெ.ஆ.), ப.112.
38. மு.மதியழகன், பாவேந்தரின் உரைநடைத்திறன், ப.49.
39. கலைஞர், கலைஞரின் கவிதைகள், ப.264.
40. சுகி.சிவம், நல்ல குடும்பம் நமது இலட்சியம், ப.178.
41. மேற்கோள்: எம்.ஏ.சுசீலா, விடுதலைக்கு முன் தமிழ் நாவல்களில் பெண்கள், ப.105.
42. ந.பிச்சமுத்து, மு.வ.வின் நாவல்களில் சமுதாய மறுமலர்ச்சியின் தாக்கம், ப.186.
43. சுகி.சிவம், கம்பன்: நேற்று-இன்று-நாளை, ப.61.
44. சுகி.சிவம், நல்ல குடும்பம் நமது இலட்சியம், ப.164.
45. மேலது., ப.70.
46. வ.ராமசாமி, விஜயம், பக்.56-57.
47. சுகி.சிவம், நல்ல குடும்பம் நமது இலட்சியம், பக்.38-39.
48. மேலது., ப.37.
49. மேலது., ப.41.
50. மேலது., ப.110.
51. மேலது., ப.76.
52. இரயாகரன், ஆணாதிக்கமும் பெண்ணியமும், ப.154.
53. சுகி.சிவம், நல்ல குடும்பம் நமது இலட்சியம், ப.72.
54. மேலது., ப.116.
55. மேலது., பக்.117-118.
56. மேலது., ப.118.
57. மேலது., ப.75

# இயல் 5

# சுகி. சிவம் படைப்புகளில் தன்னம்பிக்கைச் சிந்தனைகள்

**முன்னுரை**

மனிதனை மனிதனாக அடையாளப்படுத்துவது அவனுடைய சிந்தனையே. மனிதன் தன்னைப் பற்றிச் சிந்திப்பதும், தன்னுடைய ஆற்றலைச் சிந்தித்திருப்பதும் வெற்றி பெறுவதற்குரிய வழிகள் என்று காலந்தோறும் சிந்தனையாளர்கள் பலர் வலியுறுத்தி வந்துள்ளனர். வாழ்க்கை என்பது பல சோதனைகளையும், போராட்டங்களையும் கொண்டது. அவற்றிலிருந்து மனிதஇனம் கடந்து செல்லும் பாதையே தன்னம்பிக்கை. துன்பங்களைக் கண்டு அஞ்சாமல், தோல்விகளைக் கண்டு துவண்டுவிடாமல் விடாமுயற்சியுடன் உயர்ந்த நிலையை அடைவதற்குத் தன்னம்பிக்கை ஊன்றுகோலாகப் பயன்தரும் எனக் கருதப்படுகிறது. தனிமனிதனின் வளர்ச்சிக்கு ஆணிவேராக அமையும் தன்னம்பிக்கை, அதன் கூறுகளான கவலையற்ற மனம், தியானம், முயற்சி, திறமை, மனக்கட்டுப்பாடு, உழைப்பு, சுயமதிப்பீடு முதலானவை குறித்து இவ்வியல் ஆராய்கிறது.

**தன்னம்பிக்கை- விளக்கம்**

கடலையும் வானையும் வெல்லுவதற்குரிய வழிமுறைகள் கண்டபிறகும் மனத்தை வெல்லும் வழியறியாமல் மயங்கி நிற்கிறது மானுடம். நம்பிக்கை, தன்னம்பிக்கை என்ற இரண்டும் வெவ்வேறா அல்லது ஒன்றை ஒன்று சார்ந்ததா என்ற குழப்பத்தில் சிக்கித் தவிக்கிறது மனம்.

"நம்பிக்கை என்பது பிற ஒன்றின் மீது அல்லது பிறரின் மீது ஒருவர் வைப்பது. தன்னம்பிக்கை என்பது ஒன்றின் மீது (அ) நம்மீது நாம் வைக்கும் நம்பிக்கை"[1]

என்னும் கூற்று, நம்பிக்கை, தன்னம்பிக்கை ஆகிய இரு சொற்களுக்கும் பொருள்விளக்கம் தருவதாக அமைகிறது. "திறமை உள்ளவர்கள் தன் திறமை மீது வைக்கும் நம்பிக்கையே தன்னம்பிக்கை"[2]

என்பது தன்னம்பிக்கைக்கு ஆசிரியர் தரும் விளக்கம்.

"'என்னால் இதைச் செய்யவே முடியாது' என்பது கோழைத்தனம். 'முடியும்' என்பது தன்னம்பிக்கை"[3]

என்னும் கருத்தும் இங்கு இணைத்து நோக்கத்தக்கது. தன்னம்பிக்கை என்ற சொல்லுக்குச் சில எடுத்துக்காட்டுக்களையும் தந்து விளக்குகிறார் படைப்பாசிரியர்.

"இராமாயணத்தைப் பலர் மோட்சகாவியம் என்பார்கள். என் பார்வை வேறு. அது தன்னம்பிக்கைப் பூங்கா எப்படி? எதை இழந்தாலும் தன்னம்பிக்கையை இழக்காதே என்பது இராமாயணத்தின் ஒரு கோணம்"[4]

என்னும் கூற்றும் இங்குச் சிந்திக்கத்தக்கது. பொது வாழ்க்கையில் பதவி போனால் மரியாதை இல்லை. தனி வாழ்வில் மனைவி போனால் மானமே இல்லை. இரண்டையும் இழந்த இராமன் தன்னம்பிக்கையால், இழந்த இரண்டையும் பெற்றதைச் சான்றாகச் சுட்டுகிறார் ஆசிரியர். 'என்னால் முடியாது என்று சோர்ந்து விழுந்த பார்த்தனை பகவான் கிருஷ்ணன்

எழுப்புகிறார் - இது பகவத்கீதை. பரந்தாமன் மீது வைத்த நம்பிக்கை பார்த்தனுக்குத் தன்னம்பிக்கை ஆனது; பாரதப் போரில் வெற்றியைத்தந்தது'[5] பாரதப்போரில் யுத்தகளத்தில் நிற்கும் அர்ஜுனனைப் பார்த்து, "'வித்தையின் மீதும் அதைப் புகட்டும் குருவின் மீதும் நம்பிக்கையோடு போராடு. எழுந்து நில்..! போராடு! என்று ஆணையிடுகிறார் கண்ணன். குருசேத்திரத்தில் யுத்தகளத்தில் நிற்கும் அர்ச்சுனனுக்கு மட்டுமல்ல, வாழ்க்கைப் போராட்டத்தில் இறங்கும் எவருக்குமே இந்த மந்திரச்சொல் பயன்படும்"[6] என்பதும் ஈண்டு நோக்கற்பாலது. மேலும், 'தன்னம்பிக்கை என்பது தொடக்கத்தில் ஒரு சின்ன செடி. அதை ஆரம்பத்தில் யார் வேண்டுமானாலும் வெட்டிவிடலாம். அதுவே ஆழமாக வளர்ந்துவிட்டால், அகலமாகப் படர்ந்துவிட்டால், நம்பிக்கை விருட்சத்தை எவராலும் வெட்ட முடியாது. நம்மைப் பற்றிய நமது நம்பிக்கைகள் ஆரம்பத்தில் சின்னசெடிதான். நம்மைக்கேலி பேசுகின்ற கூட்டம், ஓர் ஆட்டுமந்தைதான். கொஞ்சம் அசந்துவிட்டால், அந்த ஆட்டுமந்தை நமது நம்பிக்கைச் செடியை மேய்ந்து நாசமாக்கிவிடும். நமது தன்னம்பிக்கைகள் வளர்ந்து கம்பீரமான விருட்சமாக நின்றால், இந்த ஆட்டுக்கூட்டம் இதன் நிழலில் ஒதுங்க வரும். குனிந்து கேலிபேசிய மூடர்கள் நிமிர்ந்து பார்த்துத் தலைவரே என்று தலைவணங்குவார்கள்'[7] என்று தன்னம்பிக்கையின் தனித்துவத்தை விளக்குவதும் சிறப்பாகச் சுட்டத்தக்கது.

> "என்னால் பல காரியங்களைச் செய்யமுடியும். எவர் உதவியும் தயவும் இன்றி ஆயிரக்கனக்கான செயல்களைத் தவறின்றி செய்ய முடியும். இப்படி வாழ்வது தன்னம்பிக்கை"[8]

என்னும் கருத்தும் இங்குக் குறிக்கத்தக்கது.

**தன்னம்பிக்கைச் சிந்தனைக் கூறுகள்**

உடல் தோற்றத்தாலும், உள்ள வலிமையாலும், செயல் ஆற்றலாலும் ஒரு மனிதன் ஒட்டுமொத்தமாக உலகப் பார்வைக்குத் தோற்றம் தரும் காட்சி ஆளுமைத்திறன் எனப்படும். இவ்வகப்புற ஆற்றல் பெருக்கத்திற்கு அடித்தளமாக அமைவது தன்னம்பிக்கை. இது நம்பிக்கை, முயற்சி, உழைப்பு, சுய மதிப்பீடு, கவலையற்ற மனம், தியானம். மனக்கட்டுப்பாடும் மன ஒருமைப்பாடும், திறமை, பொறுமை முதலான கூறுகளைக் கொண்டுள்ளது.

**நம்பிக்கை**

உலக வாழ்வில் ஓர் உயரிய நிலையை, ஒருவன் அடைய வேண்டுமெனில் ஆழ்ந்த நம்பிக்கை இருக்க வேண்டும். அந்த நம்பிக்கையே அவனுக்குச் சிறப்பைத்தரும். இதனை,

> “நம்பிக்கைகள் முழுமையாக இருக்க வேண்டும். அரைகுறை நம்பிக்கைகள் ஆபத்தானவை. ராமநாமத்தை அனுமன் நம்பிய அளவு சுக்ரீவன் நம்பவில்லை. அனுமன் பெற்ற நிலையைச் சுக்ரீவனால் பக்தி உலகில் அடைய முடியவில்லை”[9]

என்னும் கூற்றால் அறியவியலுகிறது. இக்கூற்றின் மூலம், அனுமனின் நம்பிக்கையே பக்தியில் உயர்வான நிலைக்குக் காரணம் என்பது தெளிவாகின்றது. எனவே, மனிதனிடம் நம்பிக்கைத் தெளிவும் ஆழ்ந்த நம்பிக்கையும் அமைவது வாழ்வின் மேன்மைக்கு வழிவகுக்கும் என்றே கூறலாம். இதற்கு மேலும் ஒரு சான்றாக,

"வால்மீகி இராமாயணத்தில் ஓர் அழகானவரி. இராமனைக் காணவே முடியாதோ. பிரிவு நிரந்தரமோ என்று அழுத சீதை திடீர் என்று கண்ணீரைத் துடைத்தபடி, திரிசடை என்கிற வீடணன் மகளிடம் நம்பிக்கையோடு பேச ஆரம்பிப்பாள். அந்தத் தருணத்தை 'நம்பிக்கையைக் கைவிடாதிருப்பதே அதிர்ஷ்டத்தின் ஆதாரம் என்று வால்மீகி எழுதுவார்"[10]

என்ற பகுதி அமைகிறது.

நம்பிக்கையைப் பிள்ளைப் பருவத்திலிருந்தே வளர்க்கவேண்டும். ஒரு செயலில் வெற்றிபெற நம்பிக்கை வேண்டும்.

"மழைக்காகப் பிரார்த்தனைக் கூட்டம் நடத்தினால் குழந்தைகள் குடை எடுத்துக்கொண்டு வருவார்கள். பெரியவர்களோ பிரார்த்தனை பலித்து மழை எங்கே பெய்யப் போகிறது என்று வெறுங்கையுடன் வருவார்கள்"[11]

என்னும் கருத்து, எந்தவொரு செயலைச் செய்யும்போதும் அவநம்பிக்கை கூடாது என்பதைத் தெளிவுபடுத்துகிறது.

"நம்பிக்கை இருந்தால் கங்கை நம் வீட்டுக் குழாயிலும் வரும். தோட்டத்திலும் வரும். 'கங்காஸ்நானம் ஆச்சா?' என்ற கேள்வியே இந்த நம்பிக்கையின் வெளிப்பாடுதான்"[12]

என்னும் கூற்றும் இங்கு நினைவுகூரத்தக்கது.

உழைத்து உழைத்து ஓடாகத் தேய்ந்துபோன ஒருவன், எவ்வளவு உழைத்தாலும் மேல்நிலைக்கு வரமுடியவில்லையே என்ற வருத்தம்

ஒருபுறம் இருந்தாலும் என்றைக்காவது ஒருநாள் தன்னுடைய உழைப்பிற்கு ஏற்ற பலன் கிடைத்தே தீரும் என்று நம்பிக்கை கொள்கிறான். அதனால் உழைக்காமல் இருப்பதில்லை. நம்பிக்கையோடு தொடர்ந்து தன் பணியைச் செய்து கொண்டே இருப்பது உணரத்தக்க ஒன்றாகிறது.

> "ஆயுதங்களில் வீரமிருப்பதாக யாரோ உளறி இருக்கலாம். கீழே போடுங்கள் நண்பர்களே! அஞ்சாமை நெஞ்சின் சரக்கு! எல்லா ஆயுதங்களையும் இழந்த பின்னும் நம்பிக்கையை இழக்காத அபிமன்யுவின் வீரம் இந்திய இளைஞனின் இலட்சியமாக இருக்கட்டும். அட்டைக்கத்தி செலுலாய்ட் வீரர்களுக்குக் கொடி கட்டுவதில் இளைஞர்களே நேரத்தை வீணாக்க வேண்டாம்"[13]

என்ற அறிவுரை, இழந்த நம்பிக்கையினை மீட்டுத்தரும் வகையில் அமைந்துள்ளது. வாழ்க்கையில் வெற்றி பெற்றவர்கள் அனைவரும் நம்பிக்கையுடன் முயற்சி செய்தவர்களே; எனவே, நீங்களும் முடியும் என்ற நம்பிக்கையுடன் முயற்சி செய்தால் வெற்றி பெறலாம் என்று இளைஞர்களுக்கு அறிவுறுத்துகிறார் படைப்பாசிரியர். சான்றாக ஆபிரகாம் லிங்கனைச் சுட்டுகிறார். வயலில் வேலை செய்தபடியே மண்வெட்டியில் கரித்துண்டால் எழுதிப்படித்த இளைஞர், பின்னாளில் அமெரிக்காவின் தலையெழுத்தையே மாற்றி அமைத்தார். தன் இருபத்தோராம் வயதில் வியாபாரத்தைத் தொடங்கியதில் தோல்வி, காதலி மறைவு, நரம்புத்தளர்ச்சி, மாகாண சட்டசபையில் தோல்வி, மக்கள் மன்றம், நாடாளுமன்றம், துணை ஜனாதிபதி தேர்தல் ஆகியவற்றில்

தோல்வியுற்றார். இருப்பினும் தளராது நம்பிக்கையுடன் முயன்று, தன் ஐம்பத்திரண்டாம் வயதில் அமெரிக்காவின் ஜனாதிபதி ஆனார்.[14] தனிமனிதனின் வறுமையும், தொடர் தோல்வியும் வெற்றிக்குத் தடையல்ல என்பதைத் தன் வாழ்நாளில் சாதித்துக்காட்டிய சாதனையாளர் ஆபிரகாம் லிங்கனை நம்பிக்கைக்குச் சான்றாகக் கூறுவது மிகவும் பொருத்தமுடையதாகும்.

அசோகவனத்தில் சிறையிருக்கும் சீதை, தற்கொலைக்கு முயல, திரிசடை தடுத்து ஆறுதல் கூறுகிறாள். அப்போது ராமநாமத்துடன் அங்கு வந்த அனுமனின் தோற்றமும் பேச்சும் அவளுக்கு நம்பிக்கையைத் தருகின்றன. இதனை நம்பிக்கையோடு வாழுபவனுக்கு நூறு வருடம் கழித்தாவது நல்லது நடக்கும் என்பது சீதை விஷயத்தில் நிரூபணம் ஆகிவிட்டது என்று குறித்துச் செல்கிறார் ஆசிரியர்.

தன்னம்பிக்கைச் சிந்தனையின் கூறுகளுள் முயற்சியும் குறிக்கத்தக்க ஒன்றாகிறது.

**முயற்சி**

முயற்சி உடையார் இகழ்ச்சி அடையார் என்ற ஔவையின் வாக்குப்படி முயற்சியே வெற்றியின் முதல்படி, முட்டையின் ஓட்டை உடைத்துக்கொண்டு வெளியில் வர குஞ்சு முயற்சிப்பதைப்போல, வெற்றிபெறுவது ஒருவனது முயற்சியைப் பொறுத்தே அமையும். இதனைப் பல சான்றுகளின் மூலம் விளக்கிச் செல்கிறார் படைப்பாசிரியர். பிரான்ஸ் தேசத்தில் ஆயாவாக வேலை செய்த பெண் மேரி. அந்த வீட்டின் மூத்த மகனுக்கு மேரி மீது காதல் அரும்பியது. பணக்காரக் குடும்பத்திற்கு மேரி

எப்படி மருமகளாக முடியும் என்று அவளை அவமானப்படுத்தினர். வீட்டைவிட்டு வெளியேறி பாரிசுக்கு வந்த மேரி, விஞ்ஞான ஆராய்ச்சிகளைத் தொடங்கினாள்; உலகமே வியக்கும் யுரேனிய எக்ஸ்ரே கதிர் வீச்சைக் கண்டுபிடித்து நோபால் பரிசு பெற்றாள். பின்னர் தான் காதலித்து வந்த பணக்கார வாலிபனைக் கைப்பிடித்தாள். அவள் தான் மேடம் மேரிகியூரி.

ஸ்காட்லாந்து மன்னர் இராபர்ட் புரூஸ் தமது அரண்மனையில் உட்கார்ந்திருந்தார். கவலையுடன் மேற்கூரையைப் பார்த்துக் கொண்டிருந்தார். அங்கே ஒரு சிலந்தி வலை பின்னிக்கொண்டிருந்தது. வலை அறுந்து அறுந்து போனாலும் கொஞ்சம் கூடக் கவலைப்படாமல், ஓய்ந்துவிடாமல் வலை பின்னியது சிலந்தி. இடையிடையே ஏற்பட்ட தோல்வி, அந்தச் சிலந்தியைப் பாதிக்கவே இல்லை. மன்னருக்குப் பொறி தட்டியது. இத்தனை தோல்விக்குப் பிறகும் தளராமல் சிலந்தி செயல்படும்போது, தான் இப்படித் தளர்ந்து போகலாமா என்று தன் உணர்வு பெற்றார். சிலந்தியின் முயற்சி அவரைச் சிந்திக்க வைத்தது; நாட்டை மீட்டு மீண்டும் அரியணையில் அமரவைத்தது. இவ்விரு சான்றுகளும் முயற்சியால் வெற்றிகண்ட உண்மையைப் பறைசாற்றுவன.

“முடியாது என்று சிலந்திகூட ஒதுங்குவது இல்லை. முதுகெலும்புடைய மனிதன் ஒதுங்கலாமா? அவமானப் படுத்தப்பட்ட மேரி.. அங்கீகரிக்கப்பட்ட மேடம் மேரி க்யூரி ஆகவில்லையா? நீங்கள் அப்படி ஆக முடியாதா? முடியும்.. முடியும்... உங்களால் முடியும். அதற்கு என்ன வேண்டும்? முயற்சி வேண்டும். தமிழ்க் கிழவன் வள்ளுவன்

‘அருமை உடைத்தென்று அசாவாமை வேண்டும்

பெருமை முயற்சி தரும் (குறள் .611)

என்றாரே! புரிகிறதா?”[15]

என்று இளைய தலைமுறையினரைப் பார்த்து வினவுவது முன்னேற விரும்பும் இளைஞர்களுக்கு ஊக்கவுரையாக அமைகிறது. தொடர் முயற்சியினால் வெற்றிபெற்ற கொலம்பஸ், ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் உரிமையாளர் மகாதேவ ஐயர், படிக்கும் காலத்தில் ஆசிரியரிடம் காதைத் திருகுவதற்காகக் கொடுத்திருந்த தென்கச்சி சுவாமிநாதன் போன்றோரைச் சான்றாக எடுத்துரைக்கிறார்”.[16] தன்னம்பிக்கைச் சிந்தனைகளுள் உழைப்பும் குறிக்கத்தக்கது.

**உழைப்பு**

உழைப்பு என்பது வியர்வை சிந்துகின்ற ஒரு நிகழ்வு என்று எண்ணாமல், எதைச் செய்தாலும், அதைத்திட்டமிட்டு, முறையாகவும், முழுமையாகவும் செய்தலாகும். ‘ஒரு மனிதன் தனக்குள் தேங்கிக் கிடக்கும் ஆற்றலை உரியமுறையில் பயன்படுத்துவானாயின் நன்மைகள் பலவும் பெறலாம். அதனால்தான் சாக்ரடீசு போன்ற அறிஞர்கள் உன்னையே நீ உணர் என்று பண்டைநாள் முதற்கொண்டே கூறி வந்துள்ளனர். நம்முடைய ஆற்றலை நாம் அறிந்து வளர்ந்து நடப்பதைவிடக் கற்றலும் நிற்றலும் வேறொன்றும் இல்லை என்பது தெளிவு.’[17] இஸ்ரேல் நாட்டு முதல் பெண் பிரதமரான திருமதி கோல்டா மேயர் அமெரிக்காவில் மில்வாக்கி பல்கலைக்கழகத்தில் படித்து நாடு

திரும்பி அரசியல் களம் கண்ட சாதனையாளர்[18] உழைப்பின் உயர்வைக் குறிக்கும் வகையில்,

> “ராக்பெல்லரிடம் உங்கள் முன்னேற்றத்தின் ரகசியம் என்ன என்று கேட்ட போது வந்த பதில்; உழைப்பு… அறிவுடன் கூடிய உழைப்பு’ என்றாராம். கடுமையான உழைப்பு என்பதைவிடத் திறமையான உழைப்பு வெற்றிக்கான வித்து”[19]

என்னும் கருத்து அமைகிறது. இன்று ஆகாய விமானம் டவுன்பஸ் மாதிரி ஓடுகிறது. ஆனால் இறக்கை கட்டிக்கொண்டு ஜன்னலில் இருந்து பறந்து அடிபட்டுக் கீழே விழுந்த ரைட் சகோதரர்களின் உழைப்பு இல்லாவிட்டால் விமானம் வந்திருக்க வாய்ப்பில்லை.[20] உழைப்பிற்குச் சரியான விளக்கமாக அமையும்,

> “உழைப்புக்குச் சரியான உதாரணம் கடிகாரம். அது இருபத்து நான்கு மணிநேரமும் உழைக்கிறது. கொஞ்சம் வினாடி, சிறிது நிமிடம் வேலை செய்யாமல் இருப்போமே என்று அது நினைத்தால் அது கோபுரத்தில் (Clock Tower) இருக்காது; குப்பைத் தொட்டிக்குப் போய்விடும்”[21]

என்னும் கூற்றும் இங்குச் சிந்திக்கத்தக்கது. மேலும் ‘உழைப்பு என்றதும் கல் உடைப்பது, உழுவது, கஷ்டப்பட்டுப்பாரம் சுமப்பது என்று பொருள் கொள்ளவேண்டாம். பாடுபடுவது, சிரமங்களை ஏற்பது. சினிமா, சீட்டு, சிட்டு, சிகரெட்டு என்கிற இளவயது இன்பங்களில் தன்னைத் தொலைக்காமல் பல மணிநேரம் படிப்பது கூட உழைப்புத்தான். பல மைல் பயணித்து பள்ளிக்கும் கல்லூரிக்கும் போய் வருவது கூட

உழைப்புத்தான்.'[22] இக்கூற்றும் உழைப்பினைத் தெளிவாக எடுத்துரைக்கிறது. பாடுபடுபவர்களுக்குப் பலனும், உழைப்புக்கேற்ற ஊதியமும், முயற்சிக்கேற்ற முன்னேற்றமும் கிடைக்கும் என்பதில் ஐயமில்லை. இதனை அரண் செய்யும் விதமாக, 'உழைப்பவர்களுக்கு உழைப்பே உணவு. உழைப்பே ஓய்வு, உழைப்பே உயிர். அவர்கள் விடும் மூச்சுக் காற்றால்தான் பூமி புரளுகிறது' என்று உழைக்கும் வர்க்கத்தைப் பாராட்டும் குறிப்பு அமைகிறது. உழைத்து. தோல் கறுத்துப் போவது, உழைப்பைப் பாராட்டிச் 'சூரியன் கொடுத்த 'பட்டமளிப்பு' அல்லது பாரம்பரியத்தின் பரிசளிப்பு'[23] என்று நயம்பட உரைப்பதும் ஈண்டு நினையத்தகும்.

யாத்திரை போய்க்கொண்டிருந்த ஒரு சாதுவிற்குத் தாகம் ஏற்பட்டது. கொஞ்ச தூரத்தில் பசுமையான இடத்தில், கிணற்றில் தண்ணீர் இறைத்துக் கொண்டிருந்த வாலிபனிடம் குடிக்கத் தண்ணீர்கேட்டார். குடித்தது போக, குளியலும் நடத்திக்கொண்டார். அப்போது அந்த வாலிபனிடம், ஊரே வறண்டு கிடக்கையில் உன் நிலம் மட்டும் இப்படி இருக்க உன் அதிர்ஷ்டமே காரணம் என்றார் சாது. பின்பு இருவருக்கும் இடையே நடக்கும் உரையாடல் உழைப்பின் உன்னதத்தை உணர்த்துவதாக அமைகிறது.

> "சாமி.. அதிர்ஸ்டம்னு ஒரே வார்த்தையில் என்னை விளக்குமாத்தால் அடிச்சிட்டீங்க. வர்ற வழியெல்லாம் பார்த்தீங்களே? அப்படித்தான் இருந்தது இந்தப் பாறைபூமி. பாடுபட்டுப்.. பாடுபட்டு... இப்பத்தான் பலன் கிடைச்சது.

இதைக் கடவுள்.. கருணை.. அதிர்ஷ்டம்னு சொல்லி நசுக்காதீங்க சாமி.. அம்புட்டும் உழைப்பு சாமி..' என்றான் வாலிபன்.

'தம்பி.. கிணறு தோண்டினது. வயல்ல உழுதது உன் உழைப்பு.. ஆனா தண்ணி வந்ததும் பயிறு விளைஞ்சதும் கடவுளாலதாம்பா..!' என்றார் சாது. 'ஐயா.. நான் பிறப்பதற்கு முன்னும் இந்த நிலம் இருந்தது.. கடவுளும் இருந்தார். நானில்லாமல் அவர் மட்டும் தனியாக இருந்தபோது, இந்த நிலத்தைப் பார்க்கச் சகிக்கவில்லை' என்றான் இளைஞன்"[24]

இவ்வுரையாடலில் உழைப்பின் உண்மைப்பொருள் தெற்றெனப் பளிச்சிடுகிறது. அமெரிக்காவின் கோடீசுவரர் ராக்ஃபெல்லர் முதுமையிலும் கடுமையாக உழைத்தார். ஒருமுறை விமானப் பயணத்தின் போது ஓர் இளைஞர், 'ஐயா, நீங்கள் இந்த வயதிலும் கடுமையாக உழகைக்க வேண்டுமா? உங்களுக்கு இருக்கும் சொத்துக்கு உட்கார்ந்து சாப்பிடலாமே என்று கேட்டார். அதற்கு ராக்.பெல்லர், இந்தவிமானம் நல்ல உயரத்தில் சுலபமாகப் பறக்கிறது. இப்பொழுது இதன் இஞ்சினை நிறுத்தினால் என்ன ஆகும்? என்றார். விபத்து ஏற்படும் என்றான். 'வாழ்க்கைப் பயணமும் அப்படித்தான். கடுமையாக உழைத்து மேலே வரவேண்டி இருக்கிறது. மேலேதான் வந்துவிட்டோமே என்று உழைப்பதை நிறுத்திவிட்டால் தொழிலில் கண்டிப்பாக விபத்து ஏற்படும். உழைப்பு வருமானத்துக்காக மட்டுமல்ல.. உடல் ஆரோக்கியத்துக்கும் மனமகிழ்ச்சிக்கும் கூட என்றார்

ராக்பெல்லர்'.[25] இக்கருத்து எப்போதும் உழைத்துக் கொண்டிருந்தால் மட்டுமே வெற்றி கிட்டும் என்பதைத் தெளிவுபடுத்துகிறது.

தன்னம்பிக்கைச் சிந்தனைகளுள் சுயமதிப்பீடும் ஒன்றாகும்.

**சுயமதிப்பீடு**

சுயநேசம், சுயகௌரவம், சுய மதிப்பீடு உள்ளவர்கள் வாழ்வில் தோற்பதில்லை. சுயமதிப்பீடு வெற்றிக்கு உதவும். மனம் ஒரு மனிதனுக்கு நீதிமன்றமாகும். மனம் கேட்கும் கேள்விகளுக்கு நேர்மையாக, அதே நேரத்தில் சரியான பதில் கொடுக்க முடிகிறதா எனச் சோதித்தல் சுயமதிப்பீடு ஆகும். மனிதனின் புறநடவடிக்கைகளை, அவன் மனம் நோக்கும்போது அழகாகத் தோன்றினால் அது சுயமதிப்பீடு எனக் கருதப்படுகிறது. தனக்குத்தானே எவன் ஒருவன் நல்லவனாகத் தோன்ற முடிகின்றதோ அப்போதுதான் மற்றவர்களுக்கும் அவன் நல்லவனாகத் தோன்றமுடியும். மனம்தான் வாழ்வின் நிர்ணய சக்தி; வெற்றி தோல்விகளின் விளைநிலம். மனம்தான் வாழ்க்கைப் போராட்டத்திற்கான போர்க்கருவிகளின் பட்டறை. இதனால் தான், மனிதன் மன அளவைக் கொண்டு மதிப்பிடப்பெறுகிறான். இதனையே வள்ளுவரும்,

"வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்

உள்ளத் தனைய துயர்வு"[26]

என்றார். எனவே, மனத்தின் இன்றியமையாமையை உணர்ந்தால் வாழ்வில் நிச்சயம் வெற்றி உண்டு. நன்னடத்தைச் சான்றிதழ் கேட்ட மாணவரிடம் முதலில் மறுத்துப் பின் இதோ நீ கேட்ட நன்னடத்தைச் சான்றிதழ் என்று கொடுக்க முன்வந்தார் கல்லூரி முதல்வர். அப்போது மாணவர், நன்றி.

எனக்கு உங்கள் சான்றிதழ் வேண்டாம். நான் என் நடத்தைக்கு நானே சான்றளிக்கிறேன் என்று அந்த நிறுவனத்திற்கு எழுதினேன். அந்த நிறுவன மேலாளர் என்னை வேலையில் சேர்ந்து கொள்ளுமாறு உத்தரவும் அனுப்பிவிட்டார் என்று கூறினார். அவர் தான் பாரதநாட்டின் முன்னாள் பிரதமர் மொரார்ஜி தேசாய். தன்னம்பிக்கை அவரைத் தலைவராக்கியது[27].

> "உலகை வெல்லவும், உன்னையே நீ வெல்லவும் சிறந்த வழிகள் இரண்டு. ஒன்று சுய விமர்சனம். மற்றொன்று சுய தரிசனம்"[28]

என்னும் கூற்று, சுயமதிப்பீட்டினை விளக்கிச் செல்கிறது. திருவெற்றியூர் தேரடித் தெருவில் ஒரு துறவி நிர்வாணமாக அமர்ந்து கொண்டு, தெருவில் போவார், வருவோரைக் கேலிசெய்து கொண்டிருந்தார். அதோ நாய் போகிறது, குரங்கு போகிறது, நரி போகிறது என்பார். ஒருநாள் இராமலிங்க வள்ளலார் அந்த வழியாகப் போயிருக்கிறார். ஐயோ முதன் முதலாக ஒரு மனிதன் போகிறான்; எனக்கு அவமானமாக இருக்கிறது. யாராவது ஆடை கொடுங்கள் என்று கேட்டாராம். வள்ளலார் மேலாடையைக் கொடுத்து அவரை இடம்மாறச் செய்தார். இச்செய்தி வாயிலாக,

> "இதில் ஒரு உண்மை அடங்கியிருக்கிறது. மனிதன் இயல்பில் ஒரு விலங்குதான். கட்டுப்பாடுகளால்தான் மனிதன். பக்குவத்தால் தெய்வம். இப்போது நாம் எந்த நிலையில் இருக்கிறோம் என்கிற சுயபரிசோதனை அடிக்கடி அவசியம். நமது செயல்பாடுகள் மீதான சுயவிமர்சனம் மிகத்தேவை"[29]

என்னும் உண்மையை எடுத்துரைக்கிறார் ஆசிரியர். சுயமதிப்பீடு விலங்கை மனிதனாக்கும் என்பதை இதன்மூலம் அறியவியலுகிறது. துல்லியமான மதிப்பீடு வாழ்க்கையில் குறைகளைச் சுட்டிக்காட்டும். அதற்கேற்ப மனிதன் தன்னைத் தயார்ப்படுத்திக்கொண்டு முன்னேற்றப் பாதையில் பயணிக்கச் சுயமதிப்பீடு பயன்தரும் என்பதும் தெளிவாகிறது.

கவலையற்ற மனம் என்பதும் இங்குக் குறிக்கத்தக்க ஒன்று.

**கவலையற்ற மனம்**

சோதனை மிக்கதுதான் வாழ்க்கை; சோதனை வந்தால் மனம் கலங்கக் கூடாது. திருநாவுக்கரசருக்குப் பல்லவ மன்னனால் சோதனை மேல் சோதனை வந்தபோது 'நாமார்க்கும் குடி அல்லோம்; நமனை அஞ்சோம்' என அஞ்சாதிருந்த கவலையற்ற மனத்தை வாழ்க்கையில் கடைப்பிடித்தால் துன்பத்தை விரட்டலாம். 'மலையே வந்து வீழினும் மனிதர்கள் கலங்கக் கூடாது' எனவும், நாவுக்கரசரின் ஞானத்துணிவு மனிதகுல மனநோய்க்கு மாமருந்து எனவும் நல்ல வண்ணம் வாழ[30] வழிகாட்டியுள்ளார் படைப்பாசிரியர் சுகி. சிவம்.

> "ஒவ்வொரு நொடிப்பொழுதிலும் வாழ்க்கை வழங்கும் ஜீவரசத்தை அள்ளிப் பருகும் ஆர்வத் துடிப்புடன் செயல்பட்டுக் கொண்டிருப்பவர்களுக்கு வாழ்க்கையில் ஒரு போதும் சலிப்பு ஏற்படாது"[31]

என்னும் சுகி. சிவத்தின் கூற்று, வாழ்வின் மீது பற்றுக்கொள்ள வைக்கிறது. இயற்கை எப்பொழுதும் தனது இயக்கத்தின் மீதோ அல்லது

தனது செயல்பாட்டின் மீதோ சலிப்புக் கொள்ளவதில்லை. மனித மனங்கள் மட்டும் ஒவ்வொன்றிலும் சலிப்புக் கொள்கிறது.

வாழ்க்கையில் முன்னேற விரும்புகிறவர்கள் பிறர் கருத்துக்களுக்கு முக்கியத்துவம் தரவேண்டும் என்பது உண்மைதான்; ஆனால் இதற்கு எல்லை இருக்கிறது. அந்த எல்லையை அடையாளங்கண்டு கொண்டவர்கள் மட்டுமே பிறரால் பாதிக்கப்படாமல் மகிழ்ச்சியாக இருக்க முடியும்; நினைத்த வெற்றிகளைக் குவிக்க முடியும்.

தன்னைப் பிறர் பாராட்ட வேண்டும் என்ற எதிர்பார்ப்பு எல்லோருக்கும் இருக்கும். ஆனால் அது நடக்கவில்லை என்றால் தளர்ந்து போவதோ, முகமும் அகமும் வாடுவதோ சரியல்ல.[32]

> "நம்மீது அக்கறையுடன் விமர்சிப்பவர்கள் விமர்சனத்தை மதிக்கலாம். ஆனால் எல்லோருடைய விமர்சனங்களையும் பொருட்படுத்த வேண்டியதில்லை. இந்த அணுகுமுறை நமது வெற்றி மாளிகையின் முக்கியமான படிக்கட்டு"[33]

என்னும் கருத்து ஈண்டு நோக்கத்தக்கது. முற்றும் துறந்த முனிவராகப் போனால் கூட உலகம் குறைசொல்லும்; கேலிபேசும். பட்டினத்தார் வாழ்வில் நடந்த நிகழ்ச்சியைச் சான்று காட்டி இக்கருத்தை விளக்குகிறார் ஆசிரியர். 'பட்டினத்தார் பெரிய துறவி. ஒருநாள் நடந்த களைப்பால் வயலில் படுத்திருந்தார். அந்தவழியாகப் போன இரண்டு பெண்களில் ஒருத்தி, யாரோ மகான் என்று அவரை வணங்கி நடந்தாள். மற்றொருத்தி ஆமாம்.. ஆமாம்.. இவரு பெரிய சாமியாராக்கும். தலையணை வைச்சுத் தூங்கற சுகம் மாதிரி வரப்பு மேல தலை வைச்சுத் தூங்கறான் பாரு.

ஆசை பிடிச்சவன் என்று கூறி நடந்தாள்'[34]. இக்கூற்று, எப்படி இருந்தாலும் இந்த உலகம் நம்மை விமர்சிக்கும். அதில் தரமானவர்களின் விமர்சனத்தை மதிக்கவேண்டும் என்ற தெளிவைத் தருவதாக அமைகிறது. மேலும் மகாகவி பாரதியை அவரது சமகாலத்தில் மகாகவியாக யாரும் அங்கீகரிக்கவில்லை. பிழைக்கத் தெரியாதவன் என்பதே அவர் மீது வைத்திருந்த அபிப்பிராயம். ஆனால், பாரதி தன் மீது வைத்திருந்த அபிப்பிராயம் முற்றிலும் வேறு.

"புவியனைத்தும் போற்றிட வான்புகழ் படைத்துத்

தமிழ் மொழியைப் புகழில் ஏற்றும்

கவியரசர் தமிழ்நாட்டுக்கு இல்லையெனும்

வசை என்னால் கழிந்தது'

என்பதே பாரதிக்கு, பாரதி மீதான அபிப்ராயம்'[35] இக்கூற்றும் ஈண்டு இணைத்து நோக்கற்பாலது. தன்னம்பிக்கைச் சிந்தனைகளுள் ஒன்றான தியானமும் குறிக்கத்தக்கது.

**தியானம்:**

சிதறி ஓடும் மனத்தை நிகழ்த்த வேண்டிய வெற்றியின் மீது குவித்தல் தியானமாகும். அந்தி, சந்தி ஆகிய இருவேளைகளில் தியானம் மேற்கொள்வது சிறந்ததாகும். சரியான விஷயங்களை மீண்டும் மீண்டும் நினைவில் கொண்டு வரவேண்டும். ஒரே எண்ணத்தை, ஒரே அலைவரிசையில் கொண்டு வரும் ஒழுங்கே தியானத்தின் முதல் நிலையாகும். இதன் மூலம் மனம் தியானிப்பவரின் கட்டுப்பாட்டிற்குள்

வரும். இது வெற்றியை நோக்கிப் பாதி தூரம் பயணித்து வந்து விட்டதை உணர்த்தும்; மேற்கொண்டு நடக்க வேண்டிய வழிகளையும் அறிவுறுத்தும்.

> "உங்களில் இருந்து உங்களைப் பிரித்து உணர வைக்கும் கண்ணாடியின் பெயர் தியானம். தியானம் இருவகை. ஏதேனும் ஒன்றை நோக்கி மனத்தைக் குவித்தல் ஒருவகை தியானம். எல்லா எண்ணங்களிலும் இருந்து விலகி ஏதுமற்றதாக இருத்தல் இன்னொரு வகை"[36]

என்னும் கூற்று, தியானத்தையும் வகைகளையும் விளக்கிச் செல்கிறது.

வாழ்கையில் இன்பமோ, துன்பமோ வரலாம். இன்பம், துன்பம் என்பவையெல்லாம் மனம் சார்ந்தவை. ஆதலால் அந்தத் தருணங்களிளெல்லாம் மனத்தையே உற்றுக்கவனிக்க வேண்டும். மனத்தையே உற்றுக் கவனிக்கத் தொடங்கும்போது இன்பம், துன்பம் ஆகிய எல்லாவற்றிற்கும் மனம்தான் மூலாதாரம் என்பது புரியும். மனம்தான் அனைத்திற்கும் மூலாதாரம் என்பது புரிந்துவிட்டால் அதன்பின் எதையும் சார்ந்திருக்க வேண்டியதில்லை. இன்பத்திற்கும், துன்பத்திற்கும் வெளியிலுள்ள பொருட்கள் தான் காரணம் என்ற எண்ணம் இருக்கும் வரைதான் மற்றவரைச் சார்ந்திருக்க வேண்டி உள்ளது. ஆனால் இன்பம்-துன்பம், சுகம்-துக்கம் ஆகிய அனைத்திற்கும் மனமே மூலகாரணம் என்பதை உணர்ந்தால், 'தீதும் நன்றும் பிறர் தர வாரா' என்னும் கணியன் பூங்குன்றனார் கூறிய உண்மையைப் புரிந்து கொள்ளலாம். இந்தப் புரிதலின் மூலம், மனத்திற்குள் ஒரு நிரந்தர அமைதி குடிபுகுந்துவிடும்.

அதன்பின் வாழ்வே ஆனந்தமயமாகிறது; ஒவ்வொரு கணமும் பரவச நிலை ஏற்படும். அப்போது நிகழ்காலத்தில் வாழவேண்டும் என்ற எண்ணம் இல்லாமலேயே, அதற்கான முயற்சி இல்லாமலேயே நிகழ்காலத்தில் வாழ்ந்து கொண்டிருக்கலாம். அப்போது வாழ்வே தியானமாகிறது. தியானம் வாழ்வின் ஓர் அங்கம் என்பதிலிருந்து வாழ்தலே தியானம் என்கிற முழுமை ஏற்படுகிறது. இத்தகைய தியானத்தை அனைவரும் செய்யலாம் என்பதைப் படைப்பாசிரியரின்,

> "தியானம் என்பது எந்த மதத்தையும், கடவுளையும் சார்ந்தது இல்லை. கடவுள் நம்பிக்கை இல்லாதவர்கள் கூடத் தியானம் செய்ய முடியும்"[37]

என்னும் கருத்து புலப்படுத்துகிறது.

தன்னம்பிக்கைச் சிந்தனைகளுள் மனக்கட்டுப்பாடும் ஒருமைப்பாடும் குறிக்கத்தக்க ஒன்றாகும்.

**மனக்கட்டுப்பாடும் ஒருமைப்பாடும்**

மனிதனை மனிதனாக்குவது மனமாகும். நல்ல மனதில்லையானால் அவன் பிணமாகக் கருதப்படுகிறான். ஆன்மா எப்போது கடவுளை முழுமையாக அறிகிறதோ அப்போதே ஞானியாகிறான்; ஐம்புலன்களை அடக்கியாளுகிறான். அதை நினைவுபடுத்தவே கோயில்களில் ஐந்து பிரகாரங்கள், ஐந்து செயல்கள், ஐந்து பொறிகள் வைக்கப்பட்டுள்ளன.

> "வீடுகளில் விளக்கேற்றும் போது ஐந்து முகமுடைய விளக்குகள் ஏற்றுவதன் நோக்கமே இதுதான். ஐந்து

பொறிகளும் முறையாகப் பயன்படுத்தப்பட்டால் விளக்குபோல் உலகிற்கு ஒளிகாட்டலாம்"[38]

என்னும் கூற்று, இங்கு நினைவுகூரத்தக்கது. வாழ்க்கை என்பது குறித்து,

"இப்பொழுது இருக்கும் நிலையிலிருந்து தான் விரும்பும் நிலைக்கு வரஒருவன் முயற்சி செய்யும்போது எதிர்ப்படும் நிலையான போராட்டம்தான் வாழ்க்கை"[39]

என்பார் ஜே. கிருஷ்ணமூர்த்தி. இப்படிப்பட்ட வாழ்வை ஒவ்வொருவரும் திறம்பட வாழ வேண்டுமென்றால் மனத்தை ஆளுதல் தேவையாகிறது. மனிதனின் மனம் இன்றைக்கு ஒருநிலைப்பட்டதாக அமையவில்லை என்பதே பெரும்பாலோரின் கருத்தாக இருக்கிறது. மனிதன் மனம் ஒரு குரங்கினைப் போன்றது. அங்கு இங்கு என்று காணும் பொருள்களையெல்லாம் அடைந்துவிட வேண்டும் என்ற எண்ணம் மனிதனை ஆட்டிப்படைக்கிறது.

"சராசரி மனிதர்களின் மனம் எப்போதும் சலனப்படத் தயாராயிருப்பது. புறச் சூழ்நிலையில் என்ன மாற்றம் ஏற்படுகிறதோ அதற்கேற்ப உடனே மாறிவிடும் பலவீனம் வாய்ந்தது. எனவே சுற்றுப்புறம் தூய்மையுடன் அழகாக இருந்தால்தான் உள்ளம் தூய்மையாகவும் செம்மையாகவும் இருக்கக்கூடிய சாத்தியக்கூறு அதிகமாகிறது"[40] என்று படைப்பாசிரியர் வாழ்க்கையின் எதார்த்த நிலையைப் பதிவு செய்துள்ளதும் இங்குச் சிந்திக்கத்தக்கது. இக்கூற்று மனக்கட்டுப்பாடு மட்டுமே வாழ்கையில் வெற்றிதரும் என்பதை அறியமுடிகிறது.

மனம் என்ற ஒன்றைக் கண்ணால் காண இயலாது. ஆனால் அதன் செயல்பாட்டை எழுத்தால் சொல்லிவிட முடியும். ஆசைகள் ஒரு மனிதனை ஆட்கொண்டு விடுகிறது. பேராசை வரும்போது மனிதன் மிருகநிலைக்குக்கூடச் சென்று விடுகிறான். எனவே ஆசைப்படும் மனத்தை அடக்கி ஆளவேண்டும் என்பதை, 'ஆசையே இல்லாமலிருக்க முடியாது. ஆனால் ஆசையை நமக்குள் கட்டுப்படுத்த முடியும். ஆசைக்குள் நாம் அகப்பட்டுக் கொள்ளக்கூடாது. ஆசையை நமக்குள் இருக்கும்படி மனதை நிருவகிக்கவேண்டாம்'[41] என்று குறிப்பிட்டுச் செல்கிறார் ஆசிரியர். தவறு செய்யாத மனிதர்கள் உலகிலே இருக்க முடியாது. ஒரு தவறைத் திரும்பவும் செய்யும்போது அது தப்பு என்றாகிறது.

'மனம், முதல்முறை தவறு செய்யும்போது அச்சம், வெட்கம், குற்ற உணர்வு போன்ற உணர்வுகளால் வாடும். முதல் தவறு நடந்துவிட்டால் எல்லாம் மரத்துவிடும். அதனால்தான் தவறு நிகழ்ந்தபின் தண்டிப்பதைவிட, தவறு நிகழும் முன் கண்டிப்பது நல்லது'[42] என்று படைப்பாசிரியர் கூறுவதன் வாயிலாக, தவறு செய்துவிட்டுப்பிறகு வாழ்க்கையில் திருத்திக் கொள்வோம் என்று இளைஞர்கள் முடிவு செய்யக் கூடாது என்பதை அறியவியலுகிறது. மனத்தைக் கட்டுப்படுத்தியே ஆகவேண்டும் என்பதற்கு வாரியார் சுவாமிகள் வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சி ஒன்றைச் சான்று காட்டி விளக்கிச் செல்கிறார். வாரியார் சிறுவனாக இருந்தபோது புதுத்துணி கொடுத்து உடுத்திவரச் சொன்னார் அவருடைய அம்மா. வேட்டியைக் கட்டிக்கொண்டு வந்த வாரியாரிடம், உட்கார் என்று அம்மா கூறியதும் வேட்டியை மடித்துக்கொண்டு உட்கார்ந்தார். வேட்டியை மடித்துக்கொண்டு இப்படி வெறும் உடம்போடா உட்காருவார்கள்;

இறக்கிவிட்டு உட்கார் என்றார் அம்மா. வேட்டி அழுக்காப்போயிடும் என்றார் வாரியார். 'வேட்டி, புதுசு அழுக்காகக் கூடாது என்று நினைக்கிறாயே. மனசு அழுக்காகக் கூடாதுன்னு தெரியுமா? மனசிலே பொய், பொறாமை அழுக்குப் படியாம பார்த்துக்க என்று அம்மா சொல்ல, அது வாரியார் மனத்தில் ஆழமாகப் பதிந்துவிட்டது. தூய்மையான வாழ்க்கை தாம் வாழ்ந்தமைக்கு அம்மாவின் அறிவுரைதான் காரணம் என்பார் வாரியார் சுவாமிகள்.[43] இந்நிகழ்ச்சி மூலம் மனக்கட்டுப்பாடு ஒவ்வொருவரையும் முன்னேறச் செய்யும் என்பதைத் தெளிவாக அறியமுடிகிறது. மனித மனம் இயல்பாகவே சலனப்படக்கூடியது. சலனப்படுவதால் வாழ்க்கை பலதரப்பட்ட பிரச்சனைகளைக் கொண்டதாகக் காணப்படுகிறது. இதனால் பொய், பித்தலாட்டம், வஞ்சம், லஞ்சம், ஆணவம் போன்றவை இன்றைய மனித வாழ்வில் ஓர்அங்கமாகி வருகின்றன. இவற்றையெல்லாம் ஒருவன் அறவே நீக்கவேண்டுமானால், மனித மனத்தை அடக்கி ஆளுதல் வேண்டும் என்பதை இச்சான்றுகளின் வழி அறியவியலுகிறது.

ஒவ்வொருவருக்கும் பல முகம் இருக்கின்றது. அது பல்முகம் இல்லை; பலரது முகம். வாழ்வில் வெகுவாகப் பாதித்த பலரது முகங்களை ஒட்டுப்போட்டுத் தான் ஒருவனது முகமே உருவாகிறது. இப்படிப் பல முகங்கள் உண்டாக ஒரு காரணம், இந்தப் பிறவியில் பலரது பாதிப்பு. அதைவிட முக்கியக்காரணம் மரபணுக்கள் வழி ஏற்பட்ட முன்னோரின் பாதிப்பு. அதையும் விட முக்கியக் காரணம் பல பிறவிகளில் இந்த உயிர் சேகரித்துப் பதிந்து கொண்ட பதிவுகள். இந்தப் பதிவுகளையே சமய உலகம் விதி என்றே ஒரே சொல்லால் சுட்டுகிறது.

அறிவியல் எதை மனம் என்கிறதோ, அதைச் சமயம் விதி என்கிறது. ‘விதியை மதியால் வெல்’ என்று சமயம் கட்டளை இடுகிறது. இப்படிப் பல முகங்கள் தலைவிரித்தாடும்போது மனம் கட்டவிழ்ந்து விதி செயலிழக்கிறது. எனவே மூச்சு ஒழுங்கானால் எண்ணம் ஒழுங்காகி ஒருநிலைப்படுத்தும். மூச்சு அலைபாய்ந்தால் எண்ணங்களும் அலைபாயும். எனவே, ஒருவன் மேற்கொண்ட செயலில் வெற்றிபெற மனத்தினை ஒருமுகப்படுத்துவதன் மூலம், ஆற்றலை முழுமையாகப் பயன்படுத்தி எளிதில் வெற்றி பெறலாம் என்பது திண்ணம்.

> “மனிதனுக்கும் மிருகங்களுக்கும் உள்ள முக்கிய வேற்றுமை மன ஒருமைப்பாட்டு ஆற்றலே. செயலின் எந்தத் துறையிலும் வெற்றி என்பது இதைப் பொறுத்தே அமைகிறது”[44]

என்னும் கூற்றும் இங்கு நினைவுகூரத்தக்கது. ஓர் எல்லைக்குள் அடங்காத வாழ்க்கை முறை மனத்தை அலைபாய விடுகிறது. எல்லாவற்றிலும் ஓர் எல்லை வகுத்துக்கொள்வது நல்லது.

> “மனம் ஒருமையடைய, வாழ்க்கையின் மீதான நமது பார்வை மாறவேண்டும். சஞ்சலம், பயம், வேலை இவைதான் வெகுவாக நமது மன ஒருமைப்பாட்டைப் பாதிக்கின்றன. ‘அஞ்சுவது யாதொன்றும் இல்லை. அஞ்ச வருவதும் இல்லை’ என்ற திருநாவுக்கரசரின் தெளிவு வந்துவிட்டால், அச்சம் இல்லாத போது மனம்-எளிதில் ஒன்றில் குவிகிறது’[45]

என்னும் கூற்றும் இங்குச் சிந்திக்கத்தக்கது. மன ஒருமைப்பாட்டை விளக்க மகாபாரதத்தில் உள்ள கதையைக் கூறிச்செல்கிறார் ஆசிரியர்.

துரோணர் மாணாக்கர்களின் மதிநலத்தைச் சோதிக்க விரும்புகிறார். ஒரு மரத்தின் நுனிக் கிளையில், மரக்கட்டையால் செய்த கள்ளிக்காக்கையைக் கட்டித் தொங்கவிடச் செய்தார். மாணவர்களே எல்லாரும் குறிபார்த்து நில்லுங்கள். நான் விடு என்றவுடன் கணையை விட வேண்டும் என்றார். முதலில் தருமனிடம் வினவுகிறார். தருமன் கள்ளிக்காக்கை, துரோணாச்சாரியார், மரம் ஆகிய மூன்றும் தெரிவதாகக் கூறியதும் வில்லைக் கீழேவை என்கிறார். துரியோதனைச் சோதிக்கிறார். துரியோதனனும் அவ்வாறே கூறியதும் வில்லைக் கீழே வைக்கச் சொல்கிறார். இறுதியாக அர்ச்சுனனைச் சோதிக்கிறார். மரம், இலை, பட்சி, பட்சியின் தலை இவை எதுவும் தெரியவில்லை; ஆனால் பட்சியின் கழுத்து மட்டும் தெரிகிறது என்றான் அர்ச்சுனன். கணையைவிடு என்றார் துரோணர். அர்ச்சுனன் கணையை விட்டதும் பட்சியின் தலைகீழே விழுந்தது. இப்போது துரியோதனனிடம், குறிபார்த்து நின்ற உனக்கு நானும் தெரிகிறேன். மரமும் தெரிகிறது என்றால் எதன் மீது கணை தொடுப்பது? குறிபார்த்து நின்றபவனுக்குக் குறியைத் தவிர மற்றது தெரியக் கூடாது என்று கூறுகிறார் துரோணர்.[46] இக்கதையின் மூலம் எச்செயலையும் சிறப்பாகச் செய்வதற்கு மன ஒருமைப்பாடு மிக மிகத் தேவையான ஒன்று என்பதைப் புலப்படுத்துகிறார் ஆசிரியர். இதே செய்தியைக்கனவு மெய்ப்படும் என்ற நூலிலும்[47] குறிப்பிட்டுச் செல்கிறார் படைப்பாசிரியர். இதன்மூலம், அலைபாய்ந்து திரியும் மனத்தை ஒருமுகப்படுத்துவதால் மனோபலம் கூடும்; தன்னம்பிக்கை வளரும் என்பதே படைப்பாசிரியர் தரும் கருந்து என்பது பெறப்படுகிறது.

தன்னம்பிக்கைச் சிந்தனையுள் திறமையும் ஒன்று.

**திறமை:**

ஒருவனிடம் திறமை உள்ள போதே வெற்றிக்கனியைப் பறிக்கவேண்டும். இதனை, பசித்திரு. தனித்திரு, விழித்திரு என்பார் இராமலிங்க வள்ளலார். இம்மூன்று பண்புகளும் ஒவ்வொருவரிடமும் இருந்தால் மூன்றின் முதல் எழுத்தும் ஆன பதவி நமக்கு வரும். விழித்திரு என்ற சொல்லை 'உத்திஷ்ட' என்கிறது பகவத்கீதை. எழு, விழி என்பதே இந்த அறைகூவலின் அர்த்தம் என உரைப்பர்.

> "நம்மிடம் உள்ள திறமைகளை முதலில் வரிசைப்படுத்திக் கொண்டு, நம் முன்னேற்றத்துக்குத் தேவைப்படும் திறமைகளை வரிசைப்படுத்திக் கொள்ளவேண்டும். பிறகு இரண்டையும் சரிபார்த்து வளர்த்துக்கொள்ள வேண்டும். திறமைகளில் கவனம் செலுத்தினால் வெற்றி நம்மைத் தேடி வரும்; தோல்வி நம்மிடமிருந்து விடைபெறும்"[48]

என்னும் கருத்து, திறமை இருந்தால் வெற்றிபெறலாம் என்னும் தன்னம்பிக்கையைத் தருகிறது.

நமது திறமையைக் கண்டுபிடித்து அதனை வெளிக்கொணர்ந்து வளர்க்கவேண்டும். ஒவ்வொருவருக்குள்ளும் கொலம்பஸ், ஓவியன், கலைஞன், எழுத்தாளன், விஞ்ஞானி என்று மறைந்துள்ளனர். அதனை முதலில் அறிந்து வளர்க்க வேண்டும். வெற்றி என்பது உடனே கிடைத்துவிடாது. அதற்கு ஆர்வமும், விடாமுயற்சியும் தேவை. சான்றாக உலகப்புகழ்பெற்ற நாடக ஆசிரியர் பெர்னாட்ஷவைக் குறிப்பிட்டுள்ளார். மிகவும் வறுமையான குடும்பத்தில் பிறந்த பெர்னாட்ஷாவை அவரது

அம்மா கஷ்டப்பட்டு வளர்த்தார். ஓர் அலுவலகத்தில் எடுபடி வேலைக்குச் சேர்ந்த பெர்னாட்ஷாவால் அதில் நிலைக்கமுடியவில்லை. வேலையை ராஜினாமா செய்துவிட்டு, நாவல்கள் எழுதினான். அதில் தோல்வி அடைந்தான். அதன் பிறகு நாடகங்கள் எழுதிப் புகழ்பெற்றான். இலக்கியத்திற்கான நோபல் பரிசு அவனைச் சென்றடைந்த போது, தான் ஏற்கனவே எடுத்த முடிவு எவ்வளவு உன்னதமானது என்று புலப்பட்டது.[49] இவ்வாறு தனக்குள் இருக்கும் திறமையைக் கண்டுபிடித்துத் தளராது முயன்றால் வெற்றி கிட்டும் என்பதைப் படைப்பாசிரியர் இந்நிகழ்வின் மூலம் வலியுறுத்துகிறார்.

"திறமைசாலிகள் தோற்பதில்லை. உங்களுக்கும் இத்தகைய
திறமை இருந்தால் வெற்றி நிச்சயம்!"[50]

என்னும் கருத்தும் ஈண்டுச் சிந்திக்கத்தக்கது.

தன்னம்பிக்கைச் சிந்தனைகளுள் பொறுமையும் ஒன்றாக அமைகிறது.

**பொறுமை:**

மானிடப் பிறவியாகப் பிறந்த அனைவரும் வாழ்க்கை என்ற கடலியே விழுந்தவர்கள் ஆவர். அக்கடலிலிருந்து நாம் எவ்வாறு மீண்டு கரைசேர வேண்டும் என்று மனித சமுதாயத்திற்கு அறிவுறுத்தி ஒவ்வொருவரையும் வாழ்வில் வெற்றியின் முகட்டை அடைய வழிவகுத்துக் காட்டுகின்றார் படைப்பாசிரியர் சுகி.சிவம்.

"வாழ்க்கை என்பது அகன்று விரிந்து ஆழம் கொண்டிருக்கும்
பிரமாண்டமான சமுத்திரம் போன்றது"[51]

என்னும் ஆசிரியரின் கூற்று இங்குக் குறிக்கத்தக்கதாகிறது.

> "வாழ்க்கை என்பது இறைவனால் எழுதப்பட்ட கவிதை. அதற்கு நல்ல ஓர் அர்த்தத்தை ஏற்படுத்திக் கொண்டு ஆனந்தமாக வாழுங்கள். விபரீதமாக அர்த்தம் சொல்லி விரக்தியாகி ஸ்தம்பித்து விடாதீர்கள். சங்கீதம் பாடிச்செல்லும் ஓடையைப் போல உங்கள் வாழ்வும் எப்போதும் உயிர்ப்புடன் இயக்கம் உள்ளதாக இருக்கட்டும். வாழ்க்கையை ஒவ்வொரு கணமும் வாழப்பழகிக் கொள்ளுங்கள்"[52]

என்று படைப்பாசிரியர் கூறுவதற்கேற்பச் செயல்படுவார்களேயானால் அவர்களும் உயர்ந்து, சமுதாயத்தையும் உயர்த்துவார்கள் என்பதில் ஐயமில்லை. ஏனெனில் இச்சமுதாயத்தில் ஒருவரை ஒருவர் சார்ந்து வாழக்கூடிய நிலையில் உள்ளோம். இந்நிலையில் பிறரைப் பார்த்தோ, பிறர்போல் ஆகவேண்டும் என்னும் ஆசைத்துடிப்பின் காரணமாகவோ வாழ்க்கைக்குத் தனி அர்த்தம் கற்பிப்பதால் வாழ்க்கையே நரகமாகிவிடும் என்னும் அறிவூட்டலை அறியமுடிகிறது. மனிதன் வாழ்க்கையில் வெற்றிபெற வேண்டுமானால் பொறுமை மிகவும் தேவையாகிறது.

> "பொறுமை இல்லாதவர்கள் ஒருபோதும் தெய்வநிலை எய்தமுடியாது. அவசரம், பரபரப்பு, படபடப்பு உள்ளவர்கள் மூளையில் இருந்து வெளிப்படும் எண்ண அலைகள் தாறுமாறாக இருக்கும். அவர்கள் பிறரது அமைதியையும் குலைத்துவிடுவார்கள்"[53]

என்னும் கருத்து பொறுமையின் தேவையை வலியுறுத்துகிறது. திருஞானசம்பந்தர் வாழ்வில் நடந்த நிகழ்ச்சி ஒன்றைச் சான்றாகச் சுட்டிக்காட்டுகிறார் ஆசிரியர்.

தருமபுர ஆதீனமடத்தை உருவாக்கிய ஞானசம்பந்தர், தம் குரு கமலை ஞானப்பிரகாசருக்குத் தொண்டு செய்து கொண்டிருந்தார். ஒருநாள் இரவு குருநாதர் நடந்து செல்லும்போது கையில் விளக்கேந்தி வந்தார் ஞானசம்பந்தர். வீட்டருகே வந்ததும் 'இங்கேயே நில், இதோ வருகிறேன்' என்று சொல்லி வீட்டுக்குள் சென்ற குரு, ஞானசம்பந்தரை வெளியில் நிற்கச் சொன்னதை மறந்தே போய்விட்டார். மழை கொட்டிய போதும் ஞானசம்பந்தர் அந்த இடத்தை விட்டு நகரவே இல்லை. இரவு வெகுநேரம் கழித்து வெளியில் வந்து பார்த்த போது, பொறுமையே வடிவாக நின்ற சீடனைக் கண்டு கலங்கிவிட்டார். ஆனால் பெய்தமழை சீடரைச் சுற்றிப் பெய்தது. அவர் மீது விழவில்லை. விளக்கும் அணையவில்லை. அதைக்கண்டு, 'உமக்கு ஞானம் கை கூடிவிட்டது' என்று வாழ்த்திக் குருவாக விளங்க அனுமதி கொடுத்தார் கமலை ஞானப்பிரகாசர். பொறுமை தெய்வீகத்தின் ஆபரணம்.[54] இந்நிகழ்ச்சி, சாதாரண காரிய சாதனைக்கே பொறுமை வேண்டும்; ஆத்ம சாதனை செய்து தெய்வநிலை பெற எவ்வளவு பொறுமை வேண்டும் என்பதனைத் தெளிவுபடுத்துகிறது.

> "இன்றைய இளைய தலைமுறையிடம் இருக்கிற உன்னதமான 'மை' திறமை. இல்லாத 'மை' பொறுமை. காத்திருப்பது என்பதும் ஒரு கலைதான். நம்முடைய Turn

வரும் வரை பொறுமையாக இருப்பது என்பது அவசியம். அதற்கு நம்மீது நமக்கு ஆளுமை வேண்டும்”[55]

என்னும் கூற்றினை நிலைநாட்ட, பாலகங்காதர திலகர் வாழ்க்கையில் நடந்த ஒன்றைக் குறிப்பிட்டுச் செல்கிறார் படைப்பாசிரியர். இந்திய விடுதலைப்போர் உச்சகட்டமாக இருந்த காலத்தில், விடுதலை வீரர்களையும், தலைவர்களையும் ஆங்கிலேயே அரசு வேவு பார்த்தது. பாலகங்காதர திலகரிடம் ஆறுமாதமாக வேலை பார்த்த சமையல்காரர், தான் வேலையிலிருந்து நிற்க விரும்புவதாகத் தெரிவித்தார். நீங்கள் தரும் ஆறு ரூபாய் சம்பளம் போதவில்லை என்ற காரணத்தையும் சொன்னார். அது சரி, சமைப்பதற்கு நான் தரும் சம்பளம் ஆறு ரூபாய் . என் நடவடிக்கைகளை வேவு பார்ப்பதற்கு ஆங்கில அரசு தரும் சம்பளம் இருபத்து நாலு ரூபாய். ஆக மொத்தம் முப்பது ரூபாய் சம்பாதிக்கிறாய். இருந்துமா உனக்குச் சம்பளம் போதவில்லை என்று கேட்டார் திலகர். ஆறு மாத்திற்கு முன்பே அந்தச் சமையல்காரர் வேலை வரும்போதே ஆங்கில அரசு அனுப்பி ஒற்றர் என்பதை அவர் அறிந்து வைத்திருந்தார். அவர் ஒற்றர் என்பதால் திலகர் ஜாக்கிரதையாக இருந்தார்.[56] இந்தப் பொறுமை இன்றைய தலைமுறைக்கு இருந்தால் வெற்றி நிச்சயம் என்பதே படைப்பாசிரியர் தரும் கருத்தாகும். பஞ்சதந்திரக் கதைகளிலிருந்தும் ஒன்றைச் சான்று காட்டுகிறார். ஒரு குட்டிக்குரங்கு ஒரு தோட்டம் போட்டது. செடிகள் மரமாகப் பூத்துக் காய்த்துக் கனிகள் கொட்டும், ஆசையாய்ச் சாப்பிடலாம் என்று நினைத்தது. ஆனால் எதுவுமே முளைக்கவில்லை. ஒருநாள் மூத்த குரங்கிடம் சென்று யோசனை கேட்டது. நீ சரியாகத் தண்ணீர் ஊத்தியிருக்க மாட்டாய் என்றது மூத்த

குரங்கு. இல்லை ஒரு விதைக்கு எட்டு வாளி தண்ணீர் வீதம் ஊற்றினேன் என்றது. அப்படி என்றால் அழுகிப் போயிருக்கும். அதுதான் முளைக்கவில்லை என்றது மூத்த குரங்கு. குட்டிக் குரங்கோ ஒரு விதை கூட அழுகவில்லை என்றது. அதெப்படி உனக்குத் தெரியும் என்ற மூத்த குரங்கிடம், நான்தான் விதை முளைச்சிருச்சான்னு தினம் எடுத்து எடுத்துப் பார்க்கிறேனே என்றது குட்டி".[57] தினம் தினம் விதையை எடுத்துப்பார்த்தால் விதை எப்படி முளைக்கும். ஒவ்வொன்றிற்கும் ஒரு காலம் இருக்கிறது. அந்தக்காலம் வரைப் பொறுமையாகக் காத்திருக்க வேண்டியது கடமை என்பதை இக்கதையின் வாயிலாக அறியமுடிகிறது. திறமையோடு கூடப் பொறுமையும் கலந்தால் இளைய தலைமுறைக்கு வெற்றி நிச்சயம் என்பது தெளிவாகிறது.

**தொகுப்புரை:**

தன்னம்பிக்கை என்பது நம் மீது நாம் வைக்கும் நம்பிக்கை என்பதும், பிறரின் மீது ஒருவன் வைப்பது நம்பிக்கை என்பதும் ஆய்வில் தெளிவுபடுத்தப்பெற்றுள்ளது. தன்னம்பிக்கையின் தனித்துவம் சான்றுகளுடன் புலப்படுத்தப்பட்டுள்ளது.

நம்பிக்கை, முயற்சி, உழைப்பு, சுயமதிப்பீடு, கவலையற்ற மனம், தியானம், மனக்கட்டுப்பாடும் மன ஒருமைப்பாடும், திறமை, பொறுமை முதலானவை தன்னம்பிக்கைக் கூறுகளாகக் கண்டறியப்பட்டுள்ளன.

தன்னம்பிக்கைக் கூறுகள் ஆய்வின் வழி சான்றுகளுடன் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

**சான்றெண் விளக்கம்**

1. சி.செல்வ விநாயகர் (கட்.ஆ.), 'சுகி.சிவத்தின் தன்னம்பிக்கை பற்றிய சிந்தனைகள்', துரை அங்குசாமி (தொகு.ஆ.), சுகி.சிவம் வாழ்வியல் சிந்தனைகள், ப.163.
2. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.21.
3. சுகி.சிவம், அர்த்தமுள்ள வாழ்வு, ப.39.
4. சுகி.சிவம், நல்லவண்ணம் வாழலாம், ப.25.
5. மேலது., ப.27.
6. சுகி.சிவம், கனவு மெய்ப்படும், பக.88,89.
7. சுகி.சிவம், மனசே, நீ ஒரு மந்திரச் சாவி, ப.14.
8. சுகி.சிவம், ஞானமலர்கள், ப.92.
9. மேலது., ப.40.
10. சுகி.சிவம், வாழ்ந்து பார்க்கலாம் வா. ப.13.
11. சுகி.சிவம், கனவு மெய்ப்படும், ப.12.
12. சுகி.சிவம், ஞானமலர்கள், ப.43.
13. சுகி.சிவம், நல்ல வண்ணம் வாழலாம், ப.25.
14. சுகி.சிவம், வெற்றி நிச்சயம், ப.17.
15. மேலது., ப.86.
16. நா.மல்லிகா (கட்.ஆ.), 'தன்னம்பிக்கை பற்றிய சிந்தனைகள்', துரை. அங்குசாமி (தொ.கு.ஆ.), சுகி.சிவம் வாழ்வியல் சிந்தனைகள், ப. 252.
17. இல.செ. கந்தசாமி, குறிக்கோளை நோக்கி, ப.43.
18. வெ.இறையன்பு, ஏழாவது அறிவு, ப.123.

19. சுகி.சிவம், இந்தநாள் இனியநாள், ப.157.

20. மேலது., ப.157.

21. மேலது., ப.157.

22. சுகி.சிவம், வாழ்ந்து பார்க்கலாம் வா, பக்.41-42.

23. சுகி.சிவம், வெற்றி நிச்சயம், ப.53.

24. சுகி.சிவம், மனசே, நீ ஒரு மந்திரச் சாவி, ப.23.

25. மேலது., ப.18.

26. குறள். 388.

27. சுகி.சிவம், படிக்க ஜெயிக்க, ப.48.

28. சுகி.சிவம், நல்ல வண்ணம் வாழலாம், ப.71.

29. மேலது, ப.72.

30. மேலது., ப.24.

31. சுகி.சிவம், வாழ்தல் ஒரு கலை, பக்.84-85.

32. தி.பெரியசாமி (கட்.ஆ.), 'சுகி.சிவத்தின் தன்னம்பிக்கைச் சிந்தனைகளில் ஒரு சில கூறுகள்', துரை அங்குசாமி (தொகு.ஆ.), சுகி.சிவம் ஒரு பன்முகப் பார்வை, ப.68.

33. சுகி.சிவம், வெற்றி நிச்சயம், ப.19.

34. மேலது., ப.20.

35. மேலது., பக். 62-63.

36. சுகி.சிவம், மனசே, நீ ஒரு மந்திரச்சாவி, ப.71.

37. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.173.

38. சுகி.சிவம், ஞானமலர்கள், ப.58.

39. பழ.முத்துவீரப்பன், இலக்கிய விளக்கம், ப.1.

40. சுகி.சிவம், வாழ்தல் - ஒரு கலை, ப.39.

41. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.26.

42. மேலது., பக்.30-36.

43. மேலது.,ப.32.

44. சுவாமி விவேகானந்தர், மனம் ஓர் ஆற்றல் களஞ்சியம், ப.42.

45. சுகி.சிவம், கனவு மெய்ப்படும், ப.37.

46. சுகி.சிவம், படிக்க ஜெயிக்க, பக்.8-11.

47. சுகி.சிவம், கனவு மெய்ப்படும், பக்.33-36.

48. சுகி.சிவம், வெற்றி நிச்சயம், ப.161.

49. மேலது., பக். 107-108.

50. மேலது., ப.108.

51. சுகி.சிவம், வாழ்தல்- ஒரு கலை, ப.56.

52. மேலது., ப.81.

53. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.114.

54. மேலது., பக்.116-117.

55. சுகி.சிவம், வெற்றி நிச்சயம், ப.31.

56. மேலது., ப.32.

57. மேலது., ப.33.

# இயல் - 6

## சுகி.சிவம் படைப்புகளில் வெளிப்படும் நடைத்திறன்

### முன்னுரை

படைப்பாசிரியர் தன் தனித்தன்மையை வெளிப்படுத்தும் வகையில் பல உத்திகளைப் பயன்படுத்துவதன் மூலம் படைப்பு சிறப்படைகிறது. இலக்கியத்தில் இடம்பெறும் நடை, அப்படைப்பின் கருத்துக்கள் அனைத்தையும் வெளிப்படுத்தப் பயன்படுகிறது. படைப்பாளியையும் அவருடைய உள்ளத்தையும் அடையாளங்காட்டுகிற வகையில் மொழியைப் பயன்படுத்தும் ஆற்றல் நடையாகும். இலக்கியத்தை வாசகரிடம் கொண்டு செல்வதில் இன்றியமையாத இடத்தைப் பெறுவது நடை என அறியலாகிறது. சுகிசிவம் படைப்புகளில் வெளிப்படும் நடை, அதன் வகைகள், திசைச்சொற்கள், வடசொற்கள், வட்டாரச் சொற்கள் முதலான நடையியல் கூறுகள் இவ்வியலில் ஆராயப்படுகின்றன.

### நடையும் அதன் வகைகளும்

எண்ணத்தைச் சொற்களால் அழகுபடுத்தும் வல்லமை நடைக்கு உண்டு. நடை என்பது குறித்து,

> "ஒரு படைப்பாளனை இனங்கண்டுகொள்ளத் துணைநிற்கும்
>
> தனித்தன்மைக் கூறுகளின் தொகுதி"[1]

என்பார் மிடில்டன் மூரி. நடைகுறித்துப் பிரித்தானியக் கலைக்களஞ்சியம்,

> "ஆசிரியருடைய உள்ளத்தின் சொல்லோவியம்"[2]

என்று விளக்கம் தருகிறது. இவற்றின் மூலம், படைப்பாளியின் ஆளுமைத் தன்மையாக விளங்குவது நடையமைப்பே என்பதும், படைப்பாளியையும், அவருடைய நடையையும் பிரித்துக் காண முடியாது என்பதும் பெறப்படுகின்றன.

"புலவரின் உள்ளத்தில் உண்மையையும் உறுதியும் சிறந்து விளங்கினால்

அவருடைய நடை திட்பமும் நுட்பமும் அமைந்ததாகும். அவருடைய
உள்ளத்தில் தெளிவு இருந்தால் நடையில் எளிமை விளங்கும்.
அவருடைய உள்ளத்தில் ஆர்வம் மிகுதியானால் நடையில்
ஆற்றல் மிகுதியாகும். அவருடைய உள்ளத்தில் துன்ப உணர்வு
பெருகினால் நடையில் சோர்வும் குழைவும் பெருகும்.
அவருடைய உள்ளத்தில் இன்ப உணர்வு பெருகினால்
நடையில் சுவையும் கவர்ச்சியும் பெருகும். அவருடைய
உள்ளத்தில் குழப்பமும் கலக்கமும் இருந்தால் நடையில்
சிக்கலும் தடுமாற்றமும் காணப்படும்"[3]

என்னும் மு.வ.வின் கூற்றும் இங்குச் சிந்திக்கத்தக்கது.

"கருப்பொருள், கதை சொல்லும் உத்தி, கதை மாந்தர் படைப்பு ஆகிய மூன்று அம்சங்களுமே நாவலாசிரியர்களின் வைப்பு முறையையும் எழுதும் திறமையையும் உருவாக்க உதவுகின்றன. அந்தமட்டோடு நின்றுவிடாமல், நாவலாசிரியர் தமக்கென ஒரு நடை வகுத்துக்கொண்டு மேற்சொன்ன அம்சங்களைக் கையாண்டால், அவருடைய நாவல்களுக்கு ஒரு தனித்தன்மை கிடைப்பதோடு, அவரது படைப்புக்களையும் வாசகர்கள்

சிறப்பாக இனங்கண்டுகொள்ள வாய்ப்புக் கிடைக்கிறது"[4] என்னும் சிவத்தம்பியின் கூற்று புதின ஆசிரியருக்கு மட்டுமல்லாமல், அனைத்துப் படைப்பாசிரியர்களுக்கும் பொருந்துவதாக அமைகிறது. இதன்படி ஒவ்வொரு படைப்பாசிரியரும் தமக்கேற்ற நடையை வகுத்துக் கொண்டுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது. அந்நடை மாற்ற இயலாத வண்ணம் தனிப்பட்டதாக ஒவ்வொரு படைப்பாளருக்கும் அமைகிறது.

> "ஓர் எழுத்தாளனின் நடை எப்பொழுதும் தனி நீர்மையது, அவனுடைய உறுப்புச் சார்ந்தது. அவனுடைய முக வடிவமைப்பை மாற்றினாலும் எவ்வித மாற்றத்தையும் நடையில் செய்ய இயலாது"[5]

என்னும் கருத்தும் ஈண்டுக் குறிப்பிடத்தக்கதாகிறது. இவ்வாறு அமையும் நடையினை வகைப்படுத்திக் காணும் போக்கும் காணலாகிறது. "இந்நடையினைக் கதைத்தொடர் நடை, வருணனை நடை, எடுத்துரைக்கும் நடை, உரையாடல் நடை என நான்கு வகையாகக் கொள்ளலாம்".[6] இத்தகைய நடை வகைகள், சொற்பொருள் விளக்க நடை, வினா நடை, உணர்ச்சி வெளிப்பாட்டு நடை, இலக்கிய நடை, அங்கத நடை, தனித்தமிழ் நடை, பிறமொழிக் கலப்பு நடை, தத்துவ விளக்க நடை எனப் பல வகைகளாக வளர்ச்சியடைந்துள்ளன. ஆய்விற்கு எடுத்துக் கொண்டுள்ள சுகி. சிவம் படைப்புகளில் அமையும் நடை குறித்துப் பகுத்தாயப்படுகிறது.

**வருணனை நடை :**

கதை மாந்தர் தோற்றம், சூழ்நிலை, காட்சி ஆகியவற்றை வருணிக்கும் நடை, வருணனை நடையாகிறது. "புலன் உணர்வு மூலம்

ஏற்படும் அனுபவங்களை வருணித்துக் காட்டும் உரைநடையை வருணனை உரைநடை என்பர். மனிதர்களையும், பொருள்களையும் இவை வருணிக்கும். படிப்போரின் உணர்வுகளைத் தட்டி எழுப்பும் ஆற்றல் இதற்கு உண்டு"[7] என்னும் மா.இராமலிங்கத்தின் கூற்றும் இங்கு எண்ணத்தக்கது.

"திரும்பிய பக்கமல்லாம் கண்ணுக்கெட்டிய தூரம் வரையிலும்

காட்சியளித்த நெல்வயல்கள் அவர்களுக்கு நல்வரவு கூறுவதேபோல்

விரித்திருந்தன. இடையிடையே பச்சைக் கம்பளங்கள்
விரித்திருந்தன. இடையிடையே தென்னந்தோப்புக்கள்,
வாழைக்கொல்லைகள், கரும்புத் தோட்டங்கள், மூங்கில் புதர்கள்
வேறு அவர்களுடைய கலைக்கண்களுக்குத் தெவிட்டாத
விருந்தளித்தன. சிற்றாறுகளும் ஓடைகளும், கால்வாய்களும்
ஆங்காங்கே சலசலத்தோடியதல்லாமல், நீர் தேங்கிக் கிடந்த
குளம் குட்டைகளெல்லாம் ஒரே தாமரைக் காடாகவும்
அல்லிக் காடாகவும் மண்டிக் கிடந்தன. சென்னை நகரத்திலேயே
பிறந்து வளர்ந்த பலர் காணாத காட்சிகள் இவை"[8]

என்னும் பகுதி, காட்சியை வருணித்துச் செல்வதற்குச் சான்றாகும்.

"வீடு அமைதியாயிருந்தது, கீழே ஹாலில் நீல விடிவிளக்கு
வெளிச்சம் வென்டிலேட்டர் வழியே தெரிந்தது. மாடியில்
அதுவுமில்லை; ஜன்னல் இருண்டு கிடந்தது, மனைவி
தூங்கியிருப்பாள். அவன் கதவைத் தட்டினான்"[9]

என்று பொன்னீலன், வீட்டுச் சூழ்நிலையைப் பற்றிக் கூறிச்செல்வதில் வருணனை நடை இயல்பாக உள்ளது. இவைபோன்ற வருணனை நடை படைப்பாசிரியரின் சுகி சிவம் படைப்புகளிலும் பரவலாகக் காணப்படுகிறது. சான்றாகச் சில பகுதிகளைச் சுட்டமுடிகிறது.

கந்தர் அநுபூதியில்,

"முருகன் அழகாக இருப்பதற்குப் பல காரணம். அவன்

குடியிருக்கும் மலை இயற்கை அழகு மிக்கது. அவனது மயில்

பறவைகளிலேயே அழகானது. அவனும் பேரழகன்.

அருணகிரியார் தமிழில் சொன்னால் 'முழுதும் அழகிய

குமரன்' அவன். சிலபேர் சில்லறை சில்லறையாக

அழகாக இருப்பார்கள். அவனோ அடிமுதல் முடிவரை

எல்லா அழகும் மிக்கவன்"[10]

என்று முருகனது தோற்றம் புலப்படுமாறு வருணித்துள்ளார்.

கம்பன் : நேற்று - இன்று – நாளையில் இராமனது மோதிரத்தைப் பெற்ற சீதையின் நிலையைப் பற்றிக் கூறுமிடத்து வரும்,

"முகர்ந்து பார்த்தாள், ஸ்ரீ ராமன் வாசம் உணர்ந்தாள்.

மார்போடு அணைத்தாள். தழுவியே மகிழ்வுற்றாள். ஆனந்தக்

கண்ணீர் பெருக்கித் துடைத்தாள். ரொம்ப நேரம் ரொம்ப நேரம்

டி.கே.சி. பாஷையில் சொன்னால் ரொம்ப நேரம்

மோதிரத்தையே பார்த்துக் கொண்டிருக்கிறாள். ஏதோ பேச நினைத்தாள்..

ம்ஹூம்.. பேச முடியவில்லை... பேசவில்லை"[11]

என்னும் பகுதியில் சீதையின் நிலையை வருணித்துச் செல்வது தெற்றெனப் புலப்படுகிறது.

மனசே நீ ஒரு மந்திரச்சாவியில்,

"பெரியாழ்வா் போட்ட தொட்டில் எப்படி இருக்கிறது?

தங்கத் தொட்டில்.. இடையிடையே ஜிகுஜிகுவென்று

வைரம் ஜொலிக்கிறது. மாணிக்கம் ஒளி வீசுகிறது!

உலக ஆசாரி பிரம்மா தயாரித்த ஸ்பெஷல் தொட்டில் அது"[12]

எனவரும் பகுதியில், தொட்டில் என்னும் பொருளை வருணித்துச் செல்வதைக் காணவியலுகிறது.

"இராமனைப் போலவே நீலமேனி... தாமரைத் தடக்கை

வில்லேந்திய வீரத்தோள்கள்.. மரவுரி.. ஜடாமுடி யாவும் பெற்றேன்"[13]

என்னும் பகுதியில் இராமனது தோற்றம் புலப்படுமாறு வருணித்துள்ளார்.

**எடுத்துரை நடை**

படைப்பாளிகள் கையாளும் நடைகளுள் எடுத்துரை நடையும் ஒன்று.

"காட்சிகளையும் நிகழ்ச்சிகளையும் நயங்களுடன் விளக்குவதற்கு

மேற்கொள்ளப்படும் நடை எடுத்துரைக்கும் நடையாகும்"[14]

என்பர் சா. வளவன்.

"பிறப்பினில் வருவது யாதெனக் கேட்டேன்,

பிறந்துபார் என இறைவன் பணித்தான்.

இறப்பினில் வருவது யாதெனக் கேட்டேன்,

மணந்து பார் என இறைவன் பணித்தான்

அனுபவித்தே தான் அறிவது வாழ்வெனில்

ஆண்டவனே நீ ஏனெனக் கேட்டேன்

ஆண்டவன் சற்றே அருகி நெருங்கி

அனுபவம் என்பதே நான்தான் என்றான்"[15]

என்று கண்ணதாசன் கூறுவதாக தமிழருவி மணியன் குறிப்பிடுவது சமுதாயத்திற்குச் செய்தியை அறிவிக்கும் நடையாக அமைகிறது. மேலும்,

"மனிதனின் மேம்பட்ட உயர்நிலையே தெய்வநிலை. மனிதன் நல்லொழுக்க, நல்லவழி, நல்லநெறி வாழ்வால் - தேவர் (கடவுளின்) களுக்கு நிகராக முடியும்"[16]

என்னும் பகுதியும் எடுத்துரை நடைக்குச் சான்றாக விளங்குகிறது.

"ஓர் ஏழை சாலையோரத்தில் ஒரு கோணிப்பையின் மேல் நெல்லிக்காய்களைக் கூறுகட்டி விற்றுக் கொண்டிருந்தாள். காலணாவுக்கு எட்டுக்காய்கள் என்று விற்றுக்கொண்டிருந்தாள். நெல்லிக்காய் வாங்கலாம் என்றேன். சரி என்று சந்திரனும் வந்தான். என்

சட்டைப் பையிலிருந்து ஒரு காலணா எடுத்தேன். சந்திரனும் எடுத்து நீட்டினான். கூடைக்காரி என்னிடம் எட்டுக்காய்களை எடுத்துத் தந்தாள். சந்திரனிடமும் அவ்வாறே கொடுத்தாள். பிறகு 'கொசுறு' என்றேன். என் கையில் ஒரு சின்னக்காயைக் கொடுத்தாள். சந்திரன் கேட்கவில்லை"[17]

என்று மு.வ. எழுதுவதில் இயல்பை எதிரொலிக்கும் எளிமையான எடுத்துரை நடையைக் காணமுடிகிறது. ஆய்விற்கு எடுத்துக்கொண்டுள்ள படைப்புகளில் இத்தகைய எடுத்துரைக்கும் நடையைப் பலவிடங்களில் கையாண்டுள்ளார் படைப்பாசிரியர் சுகி. சிவம்.

"சென்னை நகரின் பழமைச் சிறப்புக்களில் ஒன்று ஒண்டுக் குடித்தனம். ஒரே வீட்டைத் தடுத்து நீளமான நடைபாதையுடன் மத்தியதர வர்க்கத்தின் ஏழைப் பிரிவு, வறுமையோடும், நோயோடும், தங்களோடும், வெளி உலகத்தோடும் ஓயாமல் போராடும் ஸ்யமந்த பஞ்சகம் அவை. இருட்டு, துர்நாற்றம், நறுமணம், மசாலா வாசைன, தாளித நெடி, அடிகுழாய்ச் சத்தம், அழுகை, சிரிப்பு, பகை, பாசம் என்ற புலன் நுகர்ச்சிக்கான விஷயங்கள் தாறுமாறாகப் பிணைந்து போய்விட்ட அதிசயபூமி"[18]

என்று சுகி.சிவம் எழுதிச் செல்வதில், சமுதாயத்திற்குச் சென்னை நகரைப் பற்றிய செய்தியை அறிவிக்கும் எடுத்துரைக்கும் நடையைக் கையாள்கின்றார்.

நல்ல வண்ணம் வாழலாம் என்னும் நூலில் வரும்,

"குடியிருக்கும் வீட்டுக்குப் படி, நடை, கூடம், முற்றம், வெளி என்று ஐந்து உறுப்புகள் இருக்கின்றன. வீடு என்றால் மோட்சம் என்ற பொருளும் உண்டு. அதற்கும் இதே ஐந்து பிரிவுகள்தாம். முதலில் படி. அதாவது நல்ல நூல்களைப் படி. அது முதல்நிலை. படித்தால் போதாது படித்த வழியில் நட. அதுதான் நடை. இது இரண்டாவது நிலை. நடப்பது கஷ்டம் என்றால் அப்படி நடப்பவர்கள் உடன் கூடி இரு. சத் சங்கம் செய்.. அது தான் கூடம். இப்படி வாழ்வு முற்றம் என்றால் (நான்காவது முற்றம்) வெளி – வெளியாகிய இறைவன் உடன் கலக்கலாம். இந்த வீடு, அந்த வீடு பெற விளக்கம்!"[19]

என்னும் பகுதியில் எடுத்துரைக்கும் நடை பளிச்சிடுவதைக் காணமுடிகிறது.

"ஒருவிபத்து நடந்து விட்டது. விபத்தில் சிக்கிக் கொண்டவர்களால் அது, எப்படி நடந்தது என்பதை உணர்ந்து கொள்ள முடியாது, அவர்கள் பாதிக்கப்பட்டவர்கள். அவர்கள் விபத்தின் ஓர் அங்கம், எனவே விபத்து பற்றிய முழுமையான பார்வை அவர்களுக்கு

வாய்க்காது.

ஆனால் பாதுகாப்பான தூரத்தில் நின்று, பதற்றம் இல்லாமல்

பார்த்துக் கொண்டிருந்தவனுக்கு எவ்வாறு இந்த விபத்து

நடந்தது என்பது நன்கு தெரியும்”[20]

என்று சுகி.சிவம் எழுதுவதில் எளிமையான எடுத்துரைக்கும் நடை புலப்படுகிறது.

“அமாவாசை இரவு. எங்கும் கும்மிருட்டு. நம் வாய்ச்சொல்

வீரனுக்கு எப்படியோ ஓர் அசட்டுத் துணிச்சல்

பிறந்து விட்டது. நீண்ட அங்கி ஒன்றை அணிந்து கொண்டு

கழுத்தைச் சுற்றி ஒரு துண்டைப் போட்டுக் கொண்டு

கம்பீரமாகக் கையில் சுத்தியலுடனும் ஆணியுடனும்

புறப்பட்டு விட்டான்”[21]

என்று காட்சிப்படுத்துவதில் எடுத்துரைக்கும் நடை மிளிருவதைக் காணமுடிகிறது.

**சொற்பொருள் விளக்கநடை**

இலக்கிய வழக்குச் சொற்கள் ஆகியவற்றிற்கு அரிய விளக்கம் தரும் வகையில் அமைவது சொற்பொருள் விளக்க நடையாகும்.

“மரத்தைத் ‘தரு’ என்பது பழைய தமிழ்ப் பழக்கம்.

நிழல் தரும். மழை தரும். காய் தரும். கனி தரும். காற்றும்

தரும். காய்ந்து விழுந்தாலும் விறகாகத் தன்னையே தரும்.

இப்படித் தருவதால் அதன் பெயர் தரு. கேட்டதை எல்லாம் தருவது தேவலோகத்தில் கற்பகத்தரு என்ற கற்பனையின் காரணம் இதுதான்"[22]

என்று எழுதிச் செல்வதில், 'தரு' என்னும் சொல்லுக்குப் பொருள் விளக்கம் தரும் நடையைக் காணவியலுகிறது. கற்பனை, பாவனை இரண்டும் வேறு வேறல்ல. ஒன்றுதான் எனக்கூறி ஒருபொருள் பல சொல் என்னும் உரிச்சொல் வகையுள் அடக்குவர் இலக்கணவியலார். ஆனால் படைப்பாசிரியர் இரண்டும் தனித்தனி பொருளுடையது என விளக்குவதை,

"கற்பனை வேறு, பாவனை வேறு, கற்பனையில் பொய்மை உண்டு. பாவனையில் பொய்மை இல்லை, கற்பனையின் முடிவில் தோல்வியின் விரக்தி மிஞ்சும். பாவனையின் நிறைவில் அனுபவத்தின் ஆனந்தம் நிலவும்"[23]

என்னும் பகுதிமூலம் அறியவியலுகிறது.

" 'மர்' என்கிற சமஸ்கிருதம் சொல்லுக்கு இறத்தல் என்று பொருள். அ+மர் என்றால் மரணமில்லாதவர் என்று பொருள். எனவே அமரர் என்றால் தேவர்கள் என்பதைவிட மரணமற்றவர்கள் என்பதே பொருள்"[24]

என்னும் பகுதியும்,

"நரகம், சொர்க்கம் என்ற சொல்லுக்கு இப்போது அர்த்தம் சொல்லட்டுமா? ரகம் என்ற வடமொழிச் சொல் தவமான என்று பொருள் தரும்.

நகரம் என்றால் தரமற்ற, தகுதியற்ற என்று பொருள். ‘முதல் ரகம், கடைசி ரகம்’ என்று ரக வாரியாகப் பிரித்துவை என்று பேச்சு வழக்கு உண்டு. எனவே தரமற்றவர் கூட்டமே நரகம். கொலை, கொள்ளை, நோய், பழி என்கிற பாவத்திரட்சியே நரகம்”[25]

என்னும் பகுதியும் பகுபத இலக்கணத்தை அடிப்படையாக் கொண்டு பிரித்துப் பொருள் விளக்கம் தரும் நடைக்குச் சான்றுகளாகும். மேலும்,

“குரங்குகளின் வானரம் என்ற பெயரைக் கூட நம் சவுகரியத்திற்கு ஆராயலாம். வால் + நரம் = வால் உள்ள மனிதன் என்று அர்த்தம் கூறலாம். இதை மாற்றி வான் + நரம் = வான்வழி வந்த வேற்று உலகத்தேவர் வழிவந்த நரர் என்றும் பிரித்துக் காட்டலாம்”[26]

என்னும் பகுதியையும் சான்றாகச் சுட்டலாம்.

“அனுமனது தாய் அஞ்சனை. அதனாலேயெ அவர் ஆஞ்சனேயர் எனப்பட்டார். தந்தையோ வாயு பகவான் என்கிறது வால்மீகி இராமாயணம். அவர் வேற்றுக் கிரக மனிதராக இருக்கக் கூடும் என்பது என் அபிப்ராயம்”[27]

என்றும்,

“தாவரங்களில் உயர் இன வித்துக்கள் மூலம் தாவர உயர்வு நிகழ்த்தப் பெறுகிறது. விலங்குகளில் உயர் இனக்கலப்பு மூலம்

உயர் இன விலங்கு உருவாக்கப்படுகிறது. இதுபோலக் காட்டில்

திரிந்த காட்டுமிராண்டி மனித விலங்குடன் தேவர்கள்

எனப்படும் வேற்றுகிரக மனிதர் இணைந்து வளர்ந்த

மனித இனம் உருவாகி இருக்கலாம்"[28]

என்றும் விளக்கிச் செல்வதில் படைப்பாசிரியரின் அறிவியல் மதிநுட்பம் தெற்றெனப் பளிச்சிடுகிறது. நினைப்பதும்….. நடப்பதும் …. என்ற நூலில்

"எனது தீபாவளி வித்தியாசமானது. என்னைப் பொறுத்தவரை

இருட்டை விரட்டும் எந்த முயற்சியுமே தீபாவளிதான்.

நினைவில் வையுங்கள். ஒவ்வொரு தீபமும் இருட்டுக்கு

எதிரான புரட்சிக் கொடி. தீப ஆவளி என்றால் தீபத்தின்

வரிசை என்று பொருள். அதாவது தீபாவளி

இருட்டுப் படைஎடுப்புக்கு எதிரான ஒளியின் அணிவகுப்பு"[29]

என்று எழுதுவதில் சொற்பொருள் விளக்கநடை அமைந்துள்ளதைக் காணமுடிகிறது. சுந்தர காண்டத்தில்,

" 'ராமா' என்னும் நாமம் ஆச்சரியமானது, சைவ-வைணவ

இணைப்புக்கான மூலமந்த்ரம் அது. ஓம் நமோ

நாராயணாய என்கிற வைணவ மகாமந்திரத்தில் 'ரா'

முக்கியமான எழுத்து. அதை எடுத்துவிட்டால்

நாமத்தின் மேன்மை குறைந்து அகௌரவம் சேருகிறது. நமசிவாய என்பது சைவர்களின் மகா மந்த்ரமாகிய பஞ்சாட்சரம். அதில் 'ம' என்ற எழுத்து மிக முக்கியம். அதை நீக்கி விட்டால் ந-சிவாய என்று ஆகிவிடும். சிவன் இல்லை என்று பொருள் வரும். நாராயணனைக் கௌரவப்படுத்தும் 'ரா', நமசிவாயனை இருக்க வைக்கும் 'ம' இரண்டும் இணைந்தால் 'ராம' நாமம் உண்டாகும். சிவனையும் நாராயணனையும் வாழ்விக்கும் மகாமந்த்ரம் 'ராம' என்பதாகும்"[30]

என்று சுகி.சிவம் எழுதுவதில், சொற்பொருள் விளக்க நடையைக் காணமுடிகிறது.

**ஆங்கிலக் கலப்புநடை**

படித்தவர்கள் ஆங்கிலம் கலந்து பேசும் நடையை அப்படியே சிலர் எழுத்திலும் பயன்படுத்துகின்றனர். இது அளவுக்கு மீறியும், தேவையன்றியும் இடம்பெறுவதைப் பார்க்குமிடத்து,

"இன்றைய படித்த இளைஞர்கள் ஆங்கிலக் கலப்பில் தனி ஆர்வங்காட்டிப் புதிய கலப்பு மொழியாகத் 'தேம்சு-காவிரி' நடையாகக் கையாள்கின்றனர்"[31]

என்னும் கூற்று, பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது.

"ஆலையில் தொழிலாளி செய்யும் படைப்புக்கும் (Production) கலைஞனின் படைப்புக்கும் (Creation) வித்தியாசம் இருக்கிறது"[32]

என்று சுகி.சிவம் எழுதுவதில் ஆங்கிலக் கலப்புநடை புலப்படுகிறது. மேலும் ஆங்காங்கே ஆங்கிலச் சொல் கலந்த கலப்பு நடையையும், ஆங்கிலத் தொடர்களையும் பயன்படுத்தியுள்ளார்.

"அதைவிட இந்த மக்கள் கூட்டம் அடிக்கிற லூட்டி…

அடேயப்பா Four, Sixer என்று ரன் எடுத்தாலும்

கைதட்டும்"[33]

எனவும்,

"ஆங்கிலத்தில் Sex என்பது Fealling என்னப்படாது,

(Instinct – அடிப்படை உணர்ச்சி) என்று சொல்லப்பட்டது"[34]

என்றும்,

"அப்படி ஒரு அர்ப்பணிப்பு உணர்வு எங்களைப்

போன்ற பேச்சாளர்களுக்கு இல்லாமல் போனதும்

பெரும் தவறு என்றே தோன்றுகிறது! இது ஒரு

Open Confession"[35]

என்றும்,

"முதலில் அவர்களுக்கு ஒரு Workshop வைத்து

ஐநூறு பாடல்களையாவது பயில, பேச

வழிவகுக்க வேண்டும்"[36]

எனவும் அமையும் பகுதிகளை, சுகி.சிவத்தின் ஆங்கிலக் கலப்பு நடைக்குச் சான்றுகளாகக் கூறலாம். மேலும், "WEBSITE, DIMENSION, CONCEPT, SECULAR, SECULARISM, STABLE, PLUS POINT"[37] முதலான ஆங்கிலச் சொற்களைப் படைப்பாசிரியர் சுகி.சிவம் கையாண்டுள்ளார்.

"ஆங்கிலத்தில் 'I am not well' என்பார்கள்"[38]

என்னும் பகுதியிலும், "உடம்பில் உள்ள Sexual Potency காரணமாகப் பிறர் ஈர்க்கப்படுவது கவர்ச்சி"[39] எனவரும் பகுதியிலும், 'Smile is a mild form of recognition'[40] எனவரும் பகுதியிலும் ஆங்கிலத் தொடர்களைக் கையாளும் கலப்பு நடையைப் பயன்படுத்தியுள்ளார்.

"தொழிற்புரட்சி நேர்ந்த பின்னர் தோன்றிய நைலான்,
நைலக்ஸ், பாலியஸ்டர், ஜப்பான் சில்க் போன்ற துணிகள்
சந்தைகளை ஆக்ரமித்தாலும், பலரால் வாங்கப்பட்டாலும்
எல்லாரது லட்சியக் கனவும் பாரம்பரியம் மிக்க
காஞ்சிபுரம் பட்டு"[41]

என்றும்,

"உயிருள்ள மனிதர்களை உறவாகக் கருதிய காலம்
மலையேறிப்போய் உயிரற்ற சோ∴பாவாகவும், ∴பிரிஜும்
பெருமைக்குரிய உறவுகளாகிப் போனதே"[42]

என்றும் ஆங்கிலச் சொற்களை ஒலியாக்கம் செய்தும் ஆங்கிலக் கலப்பு நடையில் எடுத்தாண்டுள்ளார்.

**வடசொற்கலப்பு நடை**

சமயக்கருத்துக்களை எடுத்துரைக்கும் போது, வடசொற்கலப்பு மிகுந்துவிடுகிறது. ஆன்மிகத்தில் ஒரு கருத்தை எப்படிப் புரியவைக்க வேண்டுமோ அப்படிச் சொல்லிப் புரியவைக்க வடசொற்கலப்பு பயன்படுகிறது. சம்பிரதாயம்,[43], பௌராணிக உலகம்[44], பூரணத்வம்[45], கர்ப்ப உத்சவம் - ஜனன உத்சவம்[46], தெய்வ சம்பத்து[47], பூஜிக்கப்படுவது[48], சந்யாஸி[49], ராஜ்ஜியம்[50], கௌபீனதாரி[51], சேவிக்க[52], மந்திரபீஜங்கள்[53], ஸ்வதர்மம்[54] முதலான வடசொற்களைப் பயன்படுத்தியுள்ள வடசொற்கலப்பு நடையைக் காணமுடிகிறது.

**வினாநடை**

தாமாகவே வினாக்களை எழுப்பிச் சிந்திக்கச் செய்து அதற்குரிய விடையையும் கூறிச் செல்லும் முறை வினாநடையாகும். தாம் கூற வந்த கழுத்தை எளிமையாகவும், தெளிவாகவும் புரிய வைப்பதற்கு வினாநடை பெரிதும் துணைபுரியும். வாசகர்களைத் தன்பால் ஈர்த்துக் கருத்துக்களை எளிதில் உளங்கொளச் செய்ய இந்நடை உதவுகிறது.

"அவன் அழகுக்கு மிக முக்கிய காரணம் என்ன?

இளமையா? செயற்கை அலங்காரமா? நறுமனப்

பொருள்களின் சேர்க்கையா? உடற்பயிற்சியா? தெய்வத்

தன்மையா? இப்படி கேள்விகளைத் தொடுத்தால்

முடிவே கிடையாது. ஒருவருக்கு எண்ணங்கள் தான் நல்ல அழகைத் தரும். உயர்ந்த எண்ணங்கள் உள்ளவர்கள்

ஊரையே கவருவார்கள். முருகன் கருணைக்கடல்.

அவனது அழகின் ரகசியம் அதுதான்”[55]

என சுகி.சிவம் எழுதிச் செல்வதில், வினாநடை புலப்படுகிறது.

“ஏழை இந்தியன் திரைப்படத்தில் நடிக்கும் பணக்காரக் கதாநாயகனிடம் மனத்தைப் பறிகொடுப்பது ஏன்? பெரும் பணம் வைத்திருக்கும் நடிகர்களைத் தம்மவராகக் கருதுவது ஏன்? திரையில் ஏழையாக நடித்தாலும் வாழ்வில் அவர்கள் பணக்காரர்கள் என்று தெரிந்தும் தனக்கு மிக வேண்டியவராகப் பணக்கார நடிகர்களைக் கருதுவது ஏன், ஏழை ரிக்ஷாக்காரராக நடித்த உயர்திரு.எம்.ஜி.ஆர். பெரும்பணக்காரர் என்பது ரசிகனுக்குத் தெரியாதா? தெரியும். வாழ்வில் எத்தனை வறுமை இருப்பினும் வாழ்வில் வளமையையும் கலையில் ஏழ்மையையும் அனுமதித்த தமிழ்ச் சமூகம் கலையில் வளமையையும் வாழ்வில் ஏழ்மையையும் வரவேற்கவே செய்யும்”[56]

என்பதில் சுகி.சிவத்தின் வினாநடையைக் காணமுடிகிறது. வழிபாடு என்ற பெயரில் மக்கள் பின்பற்றும் மூடநம்பிக்கைகளில் விழிப்புணர்வு ஏற்படுத்தும் நோக்கில் அறிவுப்பூர்வமான வினாநடைக்குச் சான்றாக,

> "இத்தகைய வழிபாடுகளின் நோக்கம் என்ன? கடவுளைப் பற்றி
> நம் கருத்து என்ன? இப்படிச் செய்வதற்கு சமயரீதியாக
> என்ன ஆதாரங்கள்? இப்படித்தான் வழிபாடு நிகழ்த்த
> வேண்டும் என்று எந்த சரித்திரம் கூறுகிறது? இப்படிப்பட்ட
> கொடூரமான வழிபாடு நிகழ்த்தாவிடின் கடவுள் நம்மைத்
> தண்டிப்பாரா? அவர் இதை எதிர்பார்க்கிறார் என்று
> நம்புகிறீர்களா? இதைவிட எளிமையான, தூய்மையான
> வழிபாடுகள் செய்வது எல்லோருக்கும் நன்மை
> ஆயிற்றே! அதைப் புரிந்து கொள்ளக் கூடாதா?"[57]

என்னும் பகுதியைச் சுட்டலாம். ஆத்திரப்படுவது குறித்துச் சமூகத்தை நோக்கி வினவி, அதனைத் தவிர்க்க முயற்சி செய்யத் தூண்டும் வகையில்,

> "ஏன்? ஏன்? ஏன்? ஏனிந்த எரிச்சல்… எல்லாவற்றையும் எடுத்தெறியும்
> மெகா கோலத்தின் மூலம் எது? யோசித்தது உண்டா? உடலுக்குள்
> சிறைப்பட்ட கழிவுகள் காரணமா? உடலே பள்ளி அறைக்குள்
> சிறைப்பட்ட கொடுமைகள் காரணமா? சின்ன மனத்தின்
> சிறகுகளை முறித்தெறியும் ஆசிரிய அசுரர்களின் அராஜகமும்

அடக்குமுறையும் ஏற்படுத்திய எதிர்மறை விளைவா?

எதுவானால் என்ன? அ∴றிணைப் பொருள் மேல்

ஆத்திரத்தைக் காட்டும் அசட்டுத் தனம் பற்றி நாம்

எப்போதாவது யோசித்தது உண்டா? கொஞ்சம்

யோசியுங்கள்”[58]

என்று வினா நடை அமைகிறது. மேலும் ஒரு தலம், ஒரு பாடல், ஒரு நயம் என்ற நூலில் வரும்,

“ஒரு பிள்ளை என்ன செய்ய வேண்டும் என்பதைக் கற்றுக் கொடுக்க

வேண்டியவள் தாய்தானே? எலி பிடிப்பது எப்படி என்று

குட்டிப் பூனைக்குத் தாய்ப்பூனைதானே கற்றுக் கொடுக்கிறது. பால்

குடிக்கத் தெரியாத பச்சைக் குழந்தையைத் தாய் பட்டினி போடுவாளா?

மார்பருகே அணைத்து எப்படி அருந்துவது என்று அறியாத

சிசுவுக்கு எடுத்து ஊட்டும் கருணை தாயின் கடமை அல்லவா?

அதுமாதிரி பக்தி பண்ணத் தெரியாது திரிந்து

எமனிடம் சிக்க இருக்கும் ஜீவனைப் பால் குடிக்கப்

பழக்கும் தாய் மாதிரி, திருவடி நிழலுக்குப் பழகும்

பக்தனாக்குவது உன் கடமை அல்லவா?”[59]

என்னும் வினா நடையும், இங்குச் சிறப்பாகச் சுட்டுதற்குரியது. மனிதனும் தெய்வமாகலாம் என்ற நூலில் வரும்,

"உடம்பை வளர்ப்பது தவமா? சாமி இப்படிக் கத்தரிக்காய்
தின்று உடம்பை வளர்ப்பதா? என்று ஒருவர்
கேட்டதும், 'கத்தரிக்காய் எனக்கு உடம்பு அல்ல. எனக்கு உயிர்.
நான் உடம்புக்கா சாப்பிட்டேன்? உயிருக்கல்லவா
சாப்பிட்டேன்' என்று சமாளித்தார்"[60]

என்னும் பகுதியில் அமையும் வினாநடை சிந்திக்கத் தூண்டுவதாக அமைகிறது. மேலும் எம்.எஸ். உதயமூர்த்தி,

"நான் நிறையப் படித்தவனாக வரவேண்டும் என்பதுதான்
என் ஆசை. இந்த எண்ணம் எங்கிருந்து வந்தது?
ஏன் வந்தது? காரணம் எனது ஆசிரியர் ரமணி
அய்யர் அவர்களா? கல்கி அவர்களா? அல்லது
மயிலாடுதுறை பள்ளிச் சூழ்நிலை தந்ததா? என்னைச்
செதுக்கிய எண்ணம்!"[61]

என அமைத்துச் செல்லும் வினா நடையும்,

"ஒரு காரியம் நடக்கக் காரணம் ஒன்றுதான்
இருக்கவேண்டும் என்று ஏன் நினைக்க வேண்டும்? ஏன்
நிறைய காரணங்கள் இருக்கக் கூடாது? காரியம்
நடக்கும் சற்றுமுன் நடந்த ஒன்றுதான் இந்த
செயலுக்குக் காரணமா?"[62]

என்று ம.கோபாலன் எழுதிச் செல்லும் வினாநடையும் ஈண்டு இணைத்து நோக்குதற்குரியன.

படைப்புகளுக்குச் சிறப்புச் சேர்க்கும் நடைகளுள் உணர்ச்சி வெளிப்பாட்டு நடையும் ஒன்று.

**உணர்ச்சி வெளிப்பாட்டு நடை**

விடைதர வேண்டிய இன்றியமையாமை இன்றிக் கேட்கப்படும் வினாவே விடையாக அமைதலும் உணர்ச்சி வெளிப்பாட்டிற்கு நன்கு உதவும். கதாபாத்திரங்களின் உணர்வுகளை வெளிப்படுத்தும் வகையில் எழுதிச் செல்வது இவ்வகை நடையாகும்.[63] தாம் படைக்கும் இலக்கியங்களுக்குச் செம்மாந்த இயல்பைத் தர இத்தகைய நடையைப் படைப்பாளிகள் பயன்படுத்துவண்டு. கதைமாந்தர்களின் உணர்வுப் போராட்டங்களை விளக்கும் வகையில் குறிப்பாக உணர்த்தும் நெறி கு.ப. இராசகோபாலனின் நடையமைப்பில் புலப்பட்டதனை,

"சாவித்திரியின் பக்கத்திலிருந்த காபியில் சூடு ஆறிவிட்டது.

சாவித்திரியின் உள்ளத்திலிருந்த சூடு ஆறவில்லை"[64]

என்னும் உரைநடை விளக்குகிறது. இலக்கியங்களுக்கு மட்டுமின்றி, கட்டுரையாளர்களுக்கும் சொற்பொழிவாளர்களுக்கும் இந்நடை சிறப்புச் சேர்ப்பதாக அமைகிறது.

"முதிர்ச்சி என்பதன் முக்கிய இலக்கணம் என்ன தெரியுமா?

தயக்கமில்லாத அடக்கம்! முதிர்ச்சி என்பது பிறரை

எதிர்பார்க்காத – நம்மையே நாம் சார்ந்த அன்றாட

வாழ்க்கைக் கடமைகள் நம்முடைய வாழ்வின்

ஒவ்வொரு செயலும் நாணயம் இழையோடும் அடிப்படை”[65]

என வரும் பகுதியும்,

“மனிதர்களைப் பற்றிக் கவலைப்படாதவர்கள் நாம்! நமது சமயத்

தலைவர்கள் கடவுளைப் பற்றியே அதிகம் எண்ணிக்

கவலைப்படுகிறார்கள்! ஐயோ பாவம்! வரலாறு தெரியாதவர்கள்,

வாழும் முறைமை தெரியாதவர்கள்”[66]

என்னும் பகுதியும் உணர்ச்சி வெளிப்பாட்டு நடைக்குரிய சான்றுகளாகச் சுட்டத்தக்கவை.

ஆய்வு மேற்கொண்டுள்ள படைப்பாசிரியர் சுகி.சிவம் தம் படைப்புகளில் உணர்ச்சி வெளிப்பாட்டு நடையைப் பலவிடங்களில் கையாண்டுள்ளார். மனிதனும் தெய்வமாகலாம் என்னும் நூலில்,

“ஒருநாய்கூடக் குட்டிபோட்டால் குட்டியை நக்கிக் கொடுத்து

பால் கொடுத்து, பகையிடம் இருந்து பாதுகாத்து, இரை எடுக்கப்பழக்கி,

குட்டியைப் பொறுப்புடன் வளர்க்கும் போது இந்த இரண்டு கால்

நாய்கள் குப்பைத் தொட்டியிலும், கழிவறையிலும், குழந்தையை

வீசிவிட்டுப் போகிறார்களே, இது கொடுமை அல்லவா... அயோக்கிய

அப்பாக்கள் எப்போதோ விலங்கு... அயோக்கிய அம்மாக்கள்

எப்போதும் விலங்கு!”[67]

எனவரும் பகுதியில் அமையும் உணர்ச்சி வெளிப்பாட்டு நடை, படைப்பாசிரியரின் சமூகப் பார்வையைப் புலப்படுத்துவதாக அமைகிறது. வாழ்க்கையில் தடம்புரண்டதால் ஏற்படும் இத்தகைய சமூக அவலத்தின் மீது தன்னுடைய உணர்ச்சி வேகத்தை வெளிக்காட்டும் இந்நடை சிறப்பாகப் போற்றுதற்குரியது.

> "தன் ஆத்திசூடியின் முதல் வாசகத்தையெ 'அச்சம் தவிர்' என வைத்த அந்த அமரகவி, அச்சமின்மையின் அடையாளம்! அவனது பாடல்களெல்லாம் வீரத்தின் விளைநிலம்! தீரன் அவன்"[68]

என்னும் பகுதியில் வெளிப்படும் உணர்ச்சி நடை, பாரதியை அச்சமின்மைக்கு அடையாளப்படுத்துவதாக அமைகிறது.

> "எதையும் அனுபவித்துச் செய்யும் போது அதில் அழகுணர்ச்சி மிளிருகிறது. அழகுணர்ச்சியே கலை. நீங்கள் செய்யும் எல்லாச் செயல்களும் முருகியல் உணர்ச்சியுடன், அழகியல் உணர்ச்சியுடன் செய்யப்பட்டால் வாழ்க்கை முழுவதும் கலையாகி விடுகிறது. அதுதான் வாழும் கலை!"[69]

என்று படைப்பாசிரியர் எழுதிச் செல்வதில், வாழும் கலை எதுவென்பது உணர்ச்சியோடு வெளிப்படுகிறது.

> "அவிழ்த்து விடப்பட்ட வெறிநாய்களைப் போலப் பொறிபுலன்களை அலையவிட்ட, கண்ணால் இன்பம் காதால் இன்பம், வாய்க்குச் சுவையான வகை வகையான உணவு, உடல்

உணர்ச்சியை அனுபவிக்க விதம் விதமான உடம்புகள்
என்று அலைகிறவர்கள் - இன்பத்தைத் தேடித்தேடி
அலைகிறவர்கள் என்றைக்கு நிறைவடையப் போகிறார்கள்?
சலிப்படைவது வேண்டுமானால் சாத்தியம், நிறைவடைவது
என்பது சாத்தியம் இல்லை! இது சத்தியம்!"[70]

என்று மனம்போனபடி வாழும் கட்டுப்பாடற்ற வாழ்க்கையைச் சாடுவதில் படைப்பாசிரியரின் உணர்ச்சி தெற்றெனப் பளிச்சிடுவதைக் காணமுடிகிறது.

"வாழ்க்கையில் எப்போதோ ஒருமுறை மரணத்தைச் சந்திக்கிறவன் வீரன்.
மரணத்திற்கு மத்தியில் எப்போதோ ஒருமுறை வாழ்க்கையைச்
சந்திக்கிறவன் கோழை. இந்தியா வீரர்களின் பூமியாக இருந்தது.
இன்று கோழைகளின் சிறைக்கூடமாக இருந்து தொலைக்கிறது.
இது அவமானப்பட வேண்டிய அசிங்கம்"[71]

என்று இந்திய மண்ணின் அச்சத்திற்கு எதிராகக் குரல் கொடுப்பதில் ஆசிரியருடைய உணர்ச்சி கொப்பளிப்பதைக் காணவியலுகிறது. அச்சமில்லை என்று பாடிய பாரதி குறித்து,

"பாரதி காலனைத் தன்னைவிடப் பலம் வாய்ந்தவனாகக்
கருதவில்லை. தன் பலத்தில் பாதியளவுகூட அவன் பெற்றிருக்க
மாட்டான் என்பதே பாரதியின் வலிமையான எண்ணம்.
எனவே, காலன் தன்னெதிரே வந்தால் அவனை வேகமாக
உதைக்க வேண்டியதில்லை. இலேசாக மிதித்தாலே போதும் எனத்

தீர்மானிக்கிறான். அந்தத் தீர்க்கமான தீர்மானத்தின் வெளிப்படையாகத்தான் 'சற்றே மிதிக்கிறேன்' என்னும் வார்த்தைகள் அவனிடமிருந்து புறப்படுகின்றன"[72]

என்று குறிப்பிட்டுச் செல்லும்போது, பாரதியின் அஞ்சாமை உணர்ச்சி வேகத்தோடு வெளிப்படுகிறது.

"சம்பாதிப்பது.. சம்பாதிப்பது.. என்று அந்த ஒன்றிலேயே குறியாக இருப்பார்கள். சமூகத்தை நாசமாக்கும் சாராய வியாபாரிகளும், அவர்களிடம் காசு வாங்கி வீடு கட்டும் போலீஸ் அதிகாரிகளும் தாங்கள் எவ்வளவு பாவம் செய்கிறோம் என்று உணருவதே இல்லை"[73]

என்று சமூகச் சீரழிவை எடுத்துரைக்கும் போது ஆசிரியரின் வேதனையுணர்ச்சி வெளிப்படுகிறது. படைப்பாசிரியர் சுகி.சிவம் படைப்புகளில் பலவிடங்களில் இந்நடையமைப்பைக் காணமுடிகிறது.

**இலக்கிய நடை**

இலக்கியச் சொற்களையும், சொற்றொடர்களையும், பழமொழிகளையும் பயன்படுத்தி இலக்கியச் சுவையோடு எழுதுவது இவ்வகை நடையாகும். ஆய்வு மேற்கொண்டுள்ள படைப்பாசிரியர் சுகி.சிவம் நூல்களில் ஆங்காங்கே இத்தகைய நடையமைப்பைக் காணமுடிகிறது. சான்றாகச் சில பகுதிகளைச் சுட்டலாம்.

"திருவதிகை வீரட்டானம், திருக்கோயில் தெருப்பகுதியில்

புற்களைச் செதுக்குகிறார் ஒரு பெரியவர். புதிய கோயில் கட்டுவதை விட, பழைய கோயிலை இடியவிடாமல் பாதுகாப்பது பெரிய பணி என்பது அவர் கொள்கை போலும். யார் அவர்? 'என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்ற தாரக மந்திரத்தின் தந்தை அவர். அவர்தான் அப்பர்"[74]

என்னும் பகுதியில், தேவாரச் சொற்றொடரைப் பயன்படுத்தியுள்ள இலக்கிய நடை மிளிருவதைக் காணமுடிகிறது.

"உள்ளே அரிசி இல்லாத நெல், நெல் அல்ல, பதர். உள்ளே அனுபவம் இல்லாத சாமியார்கள் சொற்பொழிவாளர்களின் சொல், சொல் அல்ல, அவை ஞானப் பதர்கள்"[75]

என்னும் பகுதியும்,

"ஆணாய்ப் பிறந்த மணிவாசகர் தம்மைப் பெண்ணாகப் பாவித்து திருவெம்பாவை பாடி சிவனை அடைய நேருகிறது. ஆண்டாள் அப்படி அல்லவே. அவளது பெண்மை அல்லவா கோதைத் தமிழைக் கொழுந்தமிழ் ஆக்கியது! கோவிந்தனை அவளை நாடி இழுத்து வந்தது! பதினோரு ஆண் ஆழ்வார்களையும் ஆண்டாள் என்கிற பெண் ஆழ்வாரின் 'காதல் தமிழ்' வென்று வாகை சூடவில்லையா?"[76]

என்னும் பகுதியும் படைப்பாசிரியரின் இலக்கிய நடைக்குச் சான்றுகளாக அமைகின்றன.

> “கம்பன் பாடிய இராமகாதை ஒரு புனித நூலாக
> வைணவர்களால் இப்போது போற்றப்படுகிற அளவு ஒரு
> நூற்றாண்டுக்கு முன் போற்றப்படவில்லை. சமயவாதிகள்
> சிறை வைத்த கம்பனைப் பொதுமைப் புலவனாக
> யாரும் மீட்கும் அவசியம் ஏற்படவில்லை. அதனால் இயல்பாக,
> சுலபமாக, தயக்கம் இன்றி கம்பன் கவிச்சக்கரவர்த்தியாக
> இலக்கிய அரியணை ஏற முடிந்தது”[77]

என்னும் பகுதியும்,

> “கொய்தல் என்ற சொல் கொடி மலர்களைக் குறிக்கும். தரையில்
> படரும் தாவர மலர்களைக் கிள்ளுதல் என்ற சொல் சுட்டும்,
> பறித்தல் என்பதோ செடி மலர்களையும் மர மலர்களையும்
> புலப்படுத்தும்”[78]

என்ற பகுதியும் படைப்பாசிரியரின் இலக்கிய நடைக்கு மேலும் சான்று பகர்வன.

> “பாறாங்கல் மாதிரி இடைபருத்துக் கிடக்கும் அரக்கியர்
> என்ற கருங்கல் மலை இடையே, உயிர் காக்கும்
> சஞ்சீவிச் செடி தோன்றி, கார்மேகத்தின் மழை வந்தால்தான்

பிழைக்க முடியும் என்று காத்திருப்பது போல் இராமன் வருகைக்குச் சீதை காத்திருந்தார்”[79]

என்று எழுதுவதில் இலக்கிய நடை தென்படுகிறது.

“ ‘சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை’யாக இருக்கிறான் இராமன்”[80]

என்னும் பகுதியிலும்,

“கல்வியின் பெருமையே அறியாமையை அறிவது தான். அடக்கமும் பணிவுமே கல்வியின் அடையாளங்கள். ‘நுணங்கிய கேள்வியர்... வணங்கிய வாயினர்’ என்பது திருவள்ளுவரின் தீர்மானம்”[81]

என்று அமையும் பகுதியிலும், இலக்கியச் சொற்றொடர்களைக் கையாளும் இலக்கிய நடையைக் காணமுடிகிறது. படைப்பாசிரியரின் நூல்களில், பல்வேறு இலக்கியச் சொற்கள், சொற்றொடர்கள் கலந்த இலக்கிய நடையமைப்பு ஆங்காங்கே தென்படுகிறது.

**அங்கத நடை**

நகைச்சுவை எள்ளல் வாழ்க்கை பல சுவைகளைக் கொண்டது. இன்பமும் துன்பமும் கூட இருவகைச் சுவைதான். மனித வாழ்க்கையே கலைவடிவம் பெறுகின்ற பொழுது அவற்றுள் எட்டு வகையான சுவைகளைச் சேர்த்து வாழ்க்கையை முழுமை பெறச் செய்கின்றனர். அச்சுவைகளின் வெளிப்பாடுகளை மெய்ப்பாடுகள் என்று தொல்காப்பியர்,

“நகையே, அழுகை, இளிவரல், மருட்கை,
அச்சம், பெருமிதம், வெகுளி, உவகையென

அப்பால் எட்டே மெய்ப்பாடென்ப"[82]

என வகைப்படுத்துவர்.

தொல்காப்பியம் காலம்தொட்டே தோற்றம் பெற்ற நகைச்சுவையானது படிப்படியாகக் காலந்தோறும் பல்வேறு இலக்கியங்களில் இடம் பெற்றுப் பெருகி வருவதை அறிய முடிகிறது. சங்க இலக்கியங்களிலும், சிற்றிலங்கியங்களிலும், உரைநடைகளிலும், கவிதைகளிலும் நகைச்சுவையுணர்வைக் காணமுடிகிறது.

தொல்காப்பியர் காலத்திலிருந்தே அங்கதம் குறித்த சிந்தனை உண்டு. செம்பொருள் அங்கதம், பழிகரப்பு அங்கதம் என்று அங்கதத்தை வகைப்படுத்திக் கூறியுள்ளார் தொல்காப்பியர். 'கயமைத் தனத்தை வெளிக்கொணர்வது, போலியான பாவனைகளைத் தோலுரித்துக் காட்டுவது, முட்டாள்தனத்தை வெளிப்படுத்துவது, ஒரு நபரையோ சமுதாயத்தையோ கேலிக்கும் கிண்டலுக்கும் உட்படுத்துவது[83] என்று ஆங்கில அகராதி அங்கதத்திற்குப் பொருள் விளக்கம் தருகிறது. குற்றங்களைத் திருத்துவதும் அங்கதத்தின் நோக்கமாக அமைகிறது. இத்தகைய அங்கதநடை தற்காலப் படைப்பாளர்களிடம் பரவலாகக் காணப்படுகிறது. ஆய்வு மேற்கொண்டுள்ள படைப்பாசிரியர் சுகி.சிவம் படைப்புகளிலும் ஆங்காங்கே அங்கதநடை கையாளப்பெற்றுள்ளது.

"வெட்டுவதையே தொழிலாகக் கொண்ட வேடுவர்களே

மரங்களை வெட்டாத போது, மற்றவர்கள் வெட்டலாமா?"[84]

என்னும் பகுதியில், கடத்தலுக்கும், போராட்டம் செய்வதற்கும் இன்னும் மரம் வெட்டிக் கொண்டிருப்பவர்களை நையாண்டி செய்கிறார்.

"காவல்நிலையங்களே ஒரு காலகட்டத்தில் தமது கவுரவத்தை
இழக்கத் தொடங்கின மாதிரி கம்பராமாயணக் காவல்
நிலையங்களும் மாறிவிட்டனவா?"[85]

என்ற பகுதி, உயர்மதிப்புற்றிருந்த காவல்துறை இன்று தன் மதிப்பை இழந்து நிற்கும் நிலையை மென்மையாகச் சாடுகிறது. இதன்மூலம் காவல்துறையும், கம்பன் புகழ்பாடும் நிலை மறந்த கம்பன் கழகங்களும் திருந்த வேண்டும் என்ற தனது நோக்கத்தைப் படைப்பாசிரியர் பதிவு செய்துள்ளார் என்று கூறுவது பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது.

இன்று மதத்தின் பெயரால் மக்களைச் சுரண்டிக் காசு சேர்க்கும் போலிச் சமயவாதிகள் நடமாடி வருவதை அறிய முடிகிறது. அத்தகையோர் இறைவன் திருவடி சேரமாட்டார்கள் என்னும் கருத்தை விளக்கும் வகையில், போலிச் சமயவாதிகளை நையாண்டி செய்யும் பாங்கிற்குச் சான்றாக,

"வள்ளலாரையும் தாயுமானவரையும் ஒப்பித்தால்,
இராமகிருஷ்ணரை மேற்கோள் காட்டிப் பேசினால்
ஒருவர் சமயச் சொற்பொழிவாளர் ஆகலாம்.
சமயஞானி ஆக முடியாது. சமய வியாபாரம் செய்யும்
சாமார்த்தியசாலிகள் எல்லாம் காசும் பணமும்
சேர்க்க முடியும். ஆனால் கடவுளின் காலடி
சேருவார்களா?"[86]

என்னும் பகுதியைச் சுட்டலாம். சாமியார்களின் போலித்தனத்தை அம்பலப்படுத்தும் படைப்பாசிரியர், இறைவனையும் எள்ளி நகையாடத் தவறவில்லை.

"ஒவ்வொரு கோயில் வாசலிலும் கூட்டம் கூட்டமாக
உட்கார்ந்திருக்கும் பிச்சைக்காரர்களைப் பார்க்கிற
போதெல்லாம் எனக்கு ஆச்சரியமாக இருக்கும்.
உள்ளே இருக்கிற சாமி சர்வசக்தி படைத்தவர்.
அவரைக் கும்பிட்டால் அது கிடைக்கும், இது கிடைக்கும்
என்று எங்கிருந்தோ நாம் ஓடிவருகிறோம்.
ஆனால் அந்த சாமி கையாலாகாதவர் என்று
அறிவிக்கிற மாதிரி அவர் வீட்டுவாசலிலேயே
பிச்சைக்காரர்கள்?![87]

எனவரும் பகுதி, பிச்சையெடுத்து உண்ணும் நிலையில் மக்களை வைத்திருக்கும் இறைவனை நகையாடுகிறது. இக்கருத்து,

"இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்துகெடுக
உலகு இயற்றி யான்"[88]

என்னும் திருவள்ளுவரின் தார்மீகக் கோபத்தோடு இணைத்து நோக்குதற்குரியது.

சமூக யதார்த்தத்தை நையாண்டி செய்யும் வகையில்,

" 'நான் யார்?' - இக்கேள்வியே ஞானம் பிறக்கும் வழி.

ஆனால் ஒரு வேடிக்கை.. இந்தக் கேள்வி நமக்குப்
பிறக்கும் முன்பாகவே நமக்கு இரண்டு பிள்ளைகள்
பிறந்து விடுகிறார்கள்! பிறகு பிள்ளைகள் கேட்கும்
கேள்விக்குப் பதில் சொல்லவே நமக்கு நேரம்
போதவில்லை"[89]

என்னும் பகுதி அமைந்துள்ளது. இன்றைய ஆசிரியர் சமூகத்தை எள்ளி நகையாடும் விதமாக,

" 'எழுத்தறிவித்தவன் இறைவன்' என்று சொல்லி வைத்தார்கள்.
'குரு சாட்சாத் பரபிரம்மம்' என்றார்கள்.
கல்வியே வியாபாரமாகிவிட்ட இந்தக் காலகட்டத்தில்
இறைவனுக்கு இணையான ஆசானைப் பார்ப்பது சற்று
அரிதாகத்தான் உள்ளது"[90]

என்ற பகுதி விளங்குவதைக் காணமுடிகிறது.

"இன்று, விபூதி கொடுக்கும்போதே பெண்கள் உள்ளங்கைகளைக்
கிள்ளுகிற கில்லாடிகள் சிலரும் சாமியாராக இருக்கிறார்கள்"[91]

என்று குறிப்பிட்டுச் செல்வதில், இன்றைய உலகில் நடமாடிக்கொண்டிருக்கும் போலிச் சாமியார்களை நையாண்டி செய்யும் போக்குக் காணப்படுகிறது. மேலும்,

"ஐயா… வாங்குவாரு.. நூறு இருநூறு இல்ல… அஞ்சு

பத்துன்னாலும் டபக்குன்னு வாங்குவாரு"[92]

என்றும்,

"கோழி பிரியாணியும் விஸ்கியும் கோவில் செலவில்

சாப்பிட்டால்தான் ஒரு துணை ஆணையருக்குத்

தூக்கமே வரும்"[93]

என்றும் எழுதிச் செல்வதன் மூலம், வக்கிர குணம் படைத்தவர்களை எள்ளி நகையாடும் போக்கை அறியவியலுகிறது. இத்தகைய நடையமைப்பின் மூலம், படைப்பாசிரியர் சமூகத்தை எந்த அளவிற்கு ஊன்றிக் கவனித்துள்ளார் என்பது தெளிவாகப் புலனாகிறது.

படைப்பிலக்கியத்திற்குச் சிறப்புச் சேர்க்கும் நடைகளில் தருக்க நடையும் ஒன்று.

**தருக்க நடை**

அறிவுத்துறைகள் அனைத்திற்கும் அடிப்படையாய் அமைவது தருக்கவியல் என்னும் அளவையியல் ஆகும். 'Logic' என்னும் ஆங்கிலச் சொல்லுக்கு நிகரான தமிழ்ச்சொல் அளவையியல் அல்லது தருக்கம் என்பதாகும். தருக்கம் இல்லாத சமயக் கல்வியே இல்லை என்று சொல்லத்தக்க அளவிற்கு தருக்கவியல், சமயக்கல்வியில் சிறப்பிடத்தைப் பெற்றுள்ளது.

"என்னால் பல காரியங்களைச் செய்ய முடிவது, தன்னம்பிக்கை.

என்னால் என்னைச் செய்ய முடியாது. அது பெற்றோரால் நிகழ்கிறது என்பதைப் புரிந்து கொள்ளும் அறிவு காரணமாக உண்டாவது கடவுள் நம்பிக்கை”[91]

என்னும் பகுதியை, தருக்கநெறி சார்ந்ததாக அமையும் நடைக்குச் சான்றாகச் சுட்டலாம்.

“மண்ணாசை பெண்ணாசை பொன்னாசையில் விலங்குகளுக்கு ஓராசை மட்டும்தான். பெண்ணாசை மட்டும்தான் விலங்குகளுக்கும் மனிதனுக்கும் பொது. அதிலும் செக்ஸ் என்பது விலங்குகளுக்கு வெறும் biological problem. மனிதனுக்கு மட்டும் தான்அது மனசையும் அறிவையும் சேர்த்துக் கெடுக்கிற பிரச்சினையாக இருக்கிறது”[92]

என்னும் நடைப்பகுதியும் தருக்கநெறியில் அமைந்திருப்பது ஈண்டு நினையத் தகும். சபரிமலைக்கு மாலைபோட்டு விரதம் இருக்கும் போது சகல தவறுகளையும் நிறுத்துபவர்கள், மாலையைக் கழற்றியவுடன் அனைத்தையும் செய்யத் தொடங்கி விடுகிறார்கள். இதனைக் கண்ணுற்ற படைப்பாசிரியர், இத்தகைய செயல் தருக்கநெறி உடையதாக இல்லை; ஒவ்வொரு செயலும் தருக்க நெறி சார்ந்ததாக இருத்தல் வேண்டும் என்று அறிவூட்டும் நோக்கில்,

“மனிதன் தற்காலிகமாகச் ‘சாமி’ என்று தெய்வமானால் போதாது, எப்போதும் தெய்வமாக வாழ்வதுதான் மிகமிக முக்கியம்”[93]

என்று குறிப்பிட்டுச் செல்வது சிந்திக்கத்தக்கது. ஒன்றினால் ஒன்று நிகழும் காரண காரியத் தொடர்புத் தன்மை தருக்க நெறியின் பாற்படும். இத்தன்மைக்குச் சான்றாக,

"சூரியனில் பயிர் விளைவதில்லை. ஆனால் சூரியனால்

பயிர் விளைகிறது. அதே போல துறவியிடம் செயல் இல்லை.

ஆனால் துறவியால் செயல் நிகழ்கிறது"[94]

எனவரும் பகுதியைச் சுட்டமுடிகிறது. இன்றைய உலகில் பல குடும்பங்கள் கருத்துவேறுபாடுகளால் சலசலத்துக் கிடக்கின்றன.

இந்நிலைக்கு மருந்தாகப் படைப்பாசிரியரின்,

"மனைவி சொல்வதைக் கவனிக்காதீர்கள். ஆனால் மனைவி

சொல்ல வந்ததைக் கவனியுங்கள். குடும்பம் உருப்படும்"[95]

என்னும் தருக்கவியல் நடை அமைகிறது. வீட்டில் வளர்க்கப்படும் செல்லப்பிராணிகள் நோயிருக்கும் போது உணவைத் தொடுவதில்லை. ஆனால் மனிதன் மட்டுமே நோயிருந்தாலும் உணவு உண்டு மேலும் நோயைப் பெருக்குகிறான். இன்றைய இந்நிலை காரணகாரியத் தொடர்பற்றதாகும். இதனையே,

"உங்கள் வீட்டில், நீங்கள் வளர்க்கும் நாய், பூனை

போன்ற செல்லப் பிராணிகளைக் கவனித்து இருக்கிறீர்களா?

அவற்றுக்கு நோய் ஏற்பட்டால், அவை உணவைத்

தொடவே தொடாது. நோய் இருக்கிற போதும்,

உணவைத் தின்று, மேலும் மேலும் நோயை வளர்த்துக்

கொள்கிற மோசமான மிருகம் மனிதன் மட்டுமே"[96]

என்று படைப்பாசிரியர் குறிப்பிட்டுச் செல்கிறார். காலம் பொன்போன்றது என மதிக்கப்பெறும் இந்நாட்டில் அமைந்துள்ள அரசு அலுவலகங்களில் எதுவும் உரிய காலத்தில் நடைபெறுவதில்லை என்ற நிலையே நீடிக்கிறது. காரணகாரியத் தொடர்பற்ற இத்தகைய போக்குக் குறித்து.

"காலா காலத்தில் கலியாணம் செய் என்று தனிவாழ்வில் காலம்

மதிக்கப்படுகிறது. காலத்தில் பயிர்செய் என்று வேளாண்மை

காலத்தைக் கொண்டாடப்படுகிறது. ஆனால் அரசு அதிகாரிகள்

பயிர் காலா காலத்தில் எதையும் முடிவு செய்வதில்லை,

காலம் கடத்துகிறார்கள்"[97]

என்ற தனது கருத்தாக்கத்தைப் பதிவு செய்திருப்பது சிறப்பாகச் சுட்டத்தக்கது, மேலும்,

"அழகாய் இருக்க ஆசைப்படு. அழகை இழந்தாவது

அடுத்தவர்க்குப் பயன்படு"[98]

என்று எழுதிச் செல்வதில், ஒவ்வொரு தனிமனிதனும் சமூகமும் எவ்வாறு பயன்படும் வகையில் செயலாற்ற வேண்டும் என்பதைத் தருக்க நெறியோடு எடுத்துரைப்பதைக் காணமுடிகிறது.

இவ்வாறு மனித மனத்தின் எண்ணங்களையும், செயல்களையும், செயல்களின் விளைவுகளையும் தருக்க ரீதியில் தருவது,

படைப்பாசிரியரின் நடையமைப்பைப் பொலிவு பெறச் செய்கிறது. படைப்பிலக்கியங்களில் தற்போது ஆங்காங்கே பேச்சுமொழி நடையும் இடம்பெற்று வருகிறது.

**பேச்சுமொழிநடை**

இலக்கியங்கள் சிலவற்றில் தற்போது பேச்சுமொழி நடையும் இடம் பெறுகிறது. எழுத்து மொழிக்கு நேர்மாறாக விளங்கும் பேச்சு மொழி நடை, வாசகரை எளிமையாக ஈர்க்கும் என்பது இந்நடைக்குரிய சிறப்பாகிறது.

"உலகம் முழுவதிலுமுள்ள பேச்சுமொழி இலக்கியம் மூன்று கூறுகளைக் கொண்டிருக்கிறது,

1. தான் சார்ந்த நிலப்பகுதியை எதிரொலிப்பது.
2. புவியியல் தகவல்களை வழங்குவது.
3. மொழியின் தர்க்கக் கூறுகளைப் பிடித்து வைப்பது."[99]

இக்கூற்றின் மூலம் பேச்சு மொழி நடையின் தனித்தன்மையை அறிய முடிகிறது.

ஆய்வுக்குள்ளாகும் படைப்புகளுள் இரண்டில் மட்டுமே படைப்பாசிரியர் பேச்சு மொழி நடையைப் பயன்படுத்தியுள்ளார்.

"சில நண்பர்களிடம் நலம் விசாரிக்கும் போது,

'எப்படியோ பொழைப்புப் போய்க்கிட்டிருக்கு" என்பார்கள்.

சில இல்லத்தரசிகளிடம் அவர்களின் வாழ்க்கையைப் பற்றிக்

கேட்டால், 'ஏதோ இந்த மனுஷனோட பொழப்பு

நடந்துகிட்டிருக்கு!' என்பார்கள்.

இன்னும் சிலர், 'குப்பை கொட்டிக் கிட்டிருக்கேன்', 'ஏதோ வண்டி ஓடிக்கிட்டிருக்கு', 'எப்படியோ காலத்தத் தள்ளிக்கிட்டிருக்கேன்' என்று சொல்வதெல்லாம் கூடப் பிழைப்பு என்ற சொல்லின் வேறு வடிவங்களே"[100]

என்னும் பகுதியை, படைப்பாசிரியரின் பேச்சு மொழி நடைக்குச் சான்றாகக் கொள்ள முடிகிறது. மேலும், சென்னை வட்டாரத்தை அடையாளப்படுத்தும் வகையில், " 'ஐயோ..! இன்னா... பூட்சா... இஸ்துகினு கீதா', 'கம்னு கிட' "[101]

என்ற பகுதி அமைகிறது.

இவ்விரு பகுதிகளிலும் பேச்சுமொழியின் கூறுகள் சிறப்பாக அமைந்துள்ளன என்றே கூறமுடிகிறது.

இத்தகைய வகைப்பாடுடைய நடையில், திசைச்சொற்கள், கலைத்துறைச் சொற்கள், எதிரொலிச் சொற்கள், அடுக்குத்தொடர், சிலேடை அணி முதலான கூறுகள் காணப்படுகின்றன. ஆய்விற்கு எடுத்துக்கொண்டுள்ள படைப்புகளில் இடம்பெற்றுள்ள நடையியல் கூறுகள் இங்குக் குறிக்கத்தக்கன.

**திசைச்சொற்கள்**

தற்காலப் படைப்பிலக்கியங்களில் ஆங்காங்கே இடம்பெறும் பேச்சுமொழி நடையில் வேற்றுமொழிச் சொற்கள், தற்போது விரவி வருகின்றன.

"அயலகத்தே இருந்து வந்து மொழியிற் கலந்து வழங்கும் சொற்கள் திசைச் சொற்கள்"[102]

என்னும் விளக்கம் இங்குக் கோடிட்டுக் காட்டத்தக்கது.

" 'புனரபி ஜெனனம் புனரபி மரணம்' என்கிறார் ஆதிசங்கரர். மீண்டும் மீண்டும் பிறப்பும் இறப்பும் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன"[103]

என்னும் பகுதியில் தெலுங்கு மொழிச் சொற்களும், அதற்குரிய தமிழ் மொழிபெயர்ப்பும் இடம்பெற்றுள்ளன. மேலும், "சாந்தமுலேது.. சவுக்கியமுலேது"[104] என்னும் தொடர் இடம் பெற்றுள்ளது. இவ்விரு நூல்களிலும் திசைச்சொற்களாக, தெலுங்கு மொழிச்சொற்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. தெலுங்கு மொழித் தொடரைப் பயன்படுத்தும் ஆசிரியர், அதன் தமழ் மொழிபெயர்ப்பையும் தருவது சிறப்புக்குரியது. இவ்வாறு படைப்பாசிரியர் தான் கையாளும் திசைச்சொற்களின் மொழிபெயர்ப்பைத் தந்துவிடுவதால் பொருள் மயக்கமின்றி வாசகனால் புரிந்துகொள்ள இயலுகிறது. இவைபோன்ற திசைச்சொற்கள் எஞ்சிய படைப்புகளில் இடம்பெறவில்லை.

திசைச்சொற்களைத் தொடர்ந்து சில கலைத்துறைச் சொற்களும் காணப்படுகின்றன.

**கலைத்துறைச் சொற்கள்**

இலக்கியத்தில் இடம்பெறும் ஏதேனும் ஒரு துறை சார்ந்த சொற்கள் அல்லது ஒரு கலையைக் குறித்து வரும் சொற்கள் கலைச்சொற்களாகக் கருதப்படுகின்றன. "தனிப்பட்ட துறை சம்பந்தப்பட்ட செய்திகளை

விளக்குவதற்கும் விவாதிப்பதற்கும் பயன்படும் சொற்களைக் கலைத்துறைச் சொற்கள் அல்லது பரியாயச் சொற்கள் என்பர்”[105] என்னும் கருத்து இங்குச் சிந்திக்கத்தக்கது. ஆய்விற்கு எடுத்துக்கொண்ட படைப்புகளில் இடம்பெறும் கலைத்துறைச் சொற்கள் இங்குச் சிறப்பாகக் குறிக்கத்தக்கன.

வாழ்ந்து பார்க்கலாம் வா என்னும் நூலில், “வேஷம், வசனம், ஷூட்டிங்”[106] முதலான நாடகம் மற்றும் திரைப்படத்துறைக் கலைச்சொற்களைக் காணமுடிகிறது. மேலும் இதே நூலில், “ஸ்குரு, ஆணி, சுத்தியல், கட்டிங் பிளேயர், ஸ்பேனர்”[107] முதலிய மின்னியல் துறை சார்ந்த கலைத்துறைச் சொற்களும் காணப்படுகின்றன.

இந்த நாள் இனிய நாள் என்ற நூலில், “காய்கறிகள் பரிமாறும் பாத்திரத்திற்கு ஹோட்டல் பரிபாஷையில் தூக்கு என்று பெயர்”[108] எனவரும் பகுதியில் உணவு விடுதித் தொழில் சார்ந்த கலைத்துறைச் சொல் இடம்பெற்றுள்ளது.

வெற்றி நிச்சயம் என்னும் நூலில், “தோடிராகம், மிருகா, பல்லவி”[109] முதலான இசைக்கலைத் துறைச் சொற்களைப் படைப்பாசிரியர் கையாண்டிருப்பதைக் காணமுடிகிறது. மேலும், மனசே, நீ ஒரு மந்திரச்சாவி என்ற நூலிலும், “ஓசை, ஒலி, நாதம், சப்தஸ்வரங்கள், பல்லவி, அனுபல்லவி, சரணம்”[110] முதலான இசைக்கலைத்துறைச் சொற்களைக் கையாண்டிருப்பதன் மூலம் படைப்பாசிரியரின் இசை ஞானம் பளிச்சிடுகிறது. இதே படைப்பில், ‘சிண்டுத்திரை’[111] என்ற நாட்டியக் கலைத்துறைச் சொல்லும் இடம்பெற்றிருப்பது ஈண்டுக் குறிக்கத்தக்கது.

ஆய்விற்கு எடுத்துக்கொண்ட எஞ்சிய நூல்களில் இத்தகைய கலைத்துறைச் சொற்கள் இடம்பெறவில்லை. சில படைப்புகளில் ஆங்காங்கே எதிரொலிச் சொற்களும் பயின்று வருகின்றன. அத்தகைய எதிரொலிச் சொற்கள் இங்குக் குறிக்கத்தக்கன.

**எதிரொலிச் சொற்கள்**

இலக்கியத்தில் ஆங்காங்கே சில எதிரொலிச் சொற்கள் பயின்று வருதலும் உண்டு. "மக்களின் நாப்பழக்கம் காரணமாகப் பல்வேறு சொற்கள் விரைவாகப் பேசப்படும் பொழுது சில நிலைகளில் அவைகள் எதிரொலிகள் வேறு சொற்களாக இருந்து இனமான பொருளுணர்த்துதலை நாம் பேச்சு வழக்கிடையே மிகுதியாகக் காண்கிறோம். இத்தகைய சொற்களை எதிரொலிச் சொற்கள் (Echoing words) என்று குறிப்பிடலாம்"[112] என்னும் கூற்று எதிரொலிச் சொற்களைத் தெளிவுபடுத்துகிறது.

நினைப்பதும் நடப்பதும் என்னும் நூலில், "கடமுடா கராபுரா"[113] எனவரும் பகுதியில் எதிரொலிச் சொற்கள் இடம்பெற்றுள்ளன. நல்ல குடும்பம் நமது இலட்சியம் என்ற நூலில், 'ஏடாகூடமான'[114] என்னும் சொல்லும், வாழ்ந்து பார்க்கலாம் வா என்னும் நூலில், 'ஏடாகூடமாக'[115]. 'அங்கொன்றும் இங்கொன்றும்'[116] ஆகிய சொற்களும் அர்த்தமுள்ள வாழ்வில் 'கரபுர'[117] என்ற சொல்லும் எதிரொலிச் சொற்களாக அமைந்துள்ளன.

வாழ்தல் ஒரு கலையில், 'ஏனோதானோ' [118] என்றும் வெற்றி நிச்சயம் என்னும் நூலில், 'ஏடாகூடமாக'[119] என்றும் எதிரொலிச் சொற்கள் பயின்று வந்துள்ளன.

**அடுக்குத் தொடர்**

பொருள் நிலைக்கும் இசை நிறைக்கும் ஒரு சொல் இரண்டு, மூன்று, நான்கு முறை அடுக்கி வருவது அடுக்குத்தொடர் என்பது இலக்கண வழக்கு. ஆய்வுக்குள்ளாகும் நூல்கள் சிவற்றுள் ஆங்காங்கே சில அடுக்குத் தொடர்களைக் காணமுடிகின்றது.

கந்தர் அநுபூதியில், "'பாடல் பாடலாக', 'ஆனந்தம் ஆனந்தம்'[120] என்பன போன்ற அடுக்குத்தொடர்கள் பயின்று வந்துள்ளன. கம்பன், நேற்று - இன்று – நாளையில், 'எத்தனை எத்தனை', 'திரும்பத்திரும்ப'"[121] முதலான அடுக்குத்தொடர்கள் இடம்பெற்றுள்ளன. வெற்றி நிச்சயத்தில், "சின்னச் சின்ன, பெரிய பெரிய, எழுதி எழுதி, அள்ளிக்கொடுத்து, அள்ளிக்கொடுத்து, போராடு! போராடு!"[122] ஆகிய அடுக்குத்தொடர்கள் காணப்பெறுகின்றன.

நினைப்பதும் நடப்பதும் எனும் நூலில், "யோசியுங்கள் யோசியுங்கள், நாராயண நாராயண, வாங்கு வாங்கு"[123] என்பன போன்ற அடுக்குத் தொடர்கள் இடம்பெற்றுள்ளன. நல்ல குடும்பம் நமது இலட்சியத்தில, "வம்பு வம்பு, என்ன என்ன, வேணும், வேணும், வரட்டும் வரட்டும், தொண தொண"[124] முதலான அடுக்குத் தொடர்கள் பயின்று வந்துள்ளன. வாழ்தல் - ஒரு கலையில், 'புதிய புதிய'[125] என்னும் அடுக்குத் தொடர் பயின்று வந்துள்ளது.

கனவு மெய்ப்படும் என்னும் நூலில், " 'மெல்ல மெல்ல', இழுபட்டு இழுபட்டு, கலகல"[126] என்பன போன்ற அடுக்குத்தொடர்கள் அமைந்து காணப்படுகின்றன. நல்லவண்ணம் வாழலாம் என்ற நூலில், "வேகம் வேகம், நாராயணா நாராயணா"[127] ஆகிய அடுக்குத்தொடர்களும், மனிதனும் தெய்வமாகலாம் என்னும் நூலில், "பாட்டில் பாட்டிலாக, வராது வராது"[128] முதலான அடுக்குத் தொடர்களும் இடம் பெற்றுள்ளன. அர்த்தமுள்ள வாழ்வில், "போச்சே போச்சே, ராமாராமா, கிருஷ்ணா கிருஷ்ணா"[129] ஆகிய அடுக்குத் தொடர்கள் காணக்கிடக்கின்றன. சுந்தர காண்டத்தில், 'போச்சு போச்சு'[130] என்னும் அடுக்குத் தொடர் பயின்று வந்துள்ளது.

**சிலேடை அணி**

இருபொருள்படக் கூறுதல் சிலேடை ஆகும். பண்டைக் காலத்தில் இத்தகைய அணியைக் கையாளுவது புலமைச் சிறப்பனைக் காட்டுவதாக அமைந்திருந்தது. தற்கால உரைநடையிலும் சில படைப்பாளிகள் இதனை ஆங்காங்கே கையாண்டுள்ளனர். ஆய்விற்கு எடுத்துக்கொண்ட படைப்பாசிரியர் சுகி.சிவம் நூல்களுள் இரண்டில் மட்டும் சிலேடை அணி இடம்பெற்றுள்ளது. இந்த நாள் இனிய நாளில், சட்டசபையில் அன்றைய முதல்வர் கருணாநிதி, மதுவிலக்கை இப்போதைக்கு முடிவுக்குக் கொண்டு வருகிறோம் என்று கூறியதுடன், அதற்கு இப்போதைக்கு என்று ஒரு பொருள். இப் போதைக்கு என்று சிலேடை நயத்துடன் மற்றொரு பொருள் விளக்கம் தந்ததை எடுத்தாண்டிருப்பது இங்குக் குறிக்கத்தக்கது.[131]

வேம்பையர் என்றொரு புலவர், அரசவைக்குச் சென்றபோது எல்லோரும் அமர்ந்துவிட்டதால் அவருக்கு நாற்காலி இல்லை. அதனால் வேம்பு கசக்கும் என்பதால் இனி வேம்புக்கு இடமில்லை என்றார் அரசர். புலவர் சாமர்த்தியமாக, எப்போதும் வேம்பு அரசுக்குப் பக்கத்திலேயே இருக்கும் என்று சொல்லி அரசரோடு போய் அமர்ந்து கொண்டார்[132] என்னும் பகுதியில் சிலேடை நயம் மிளிர்கிறது.

பார்வை இல்லாத புலவர் ஒருவர் அரசரால் கௌரவிக்கப்பட்டார். கஞ்சத்தனம் கொண்ட அமைச்சர், ஒரு கிழிந்த பொன்னாடையை அரசரிடம் கொடுக்க, அவர் அதைப் போர்த்தினார். அதனைத் தடவிப்பார்த்த புலவரிடம், அதன் வேலைப்பாட்டை அறிய முயல்கிறார் என்று எண்ணிய அரசர் அதில் மாங்காய் இருக்கிறது என்றார். புலவரோ, மாங்காய் மட்டுமல்ல.. பிஞ்சும் (பிய்ந்தும்) இருக்கிறது என்று கூறி, அதன் கிழிசலை ராஜாவுக்கு எடுத்துக் காட்டினார். அதன்பிறகு புலவருக்குப் புதிய பொன்னாடை அணிவிக்கப்பெற்றது.[133] இப்பகுதியில் புலவரின் சிலேடை நயத்தைப் படம்பிடித்துக்காட்டுகிறார் படைப்பாசிரியர். ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட எஞ்சிய நுஸல்களில் சிலேடை அணி இடம்பெறவில்லை.

## தொகுப்புரை

படைப்பாளியின் உள்ளத்தை வெளிப்படுத்திக்காட்டும் ஓவியமாக அமையும் நடை குறித்தும் நடையின் வகையை குறித்தும் ஆய்வில் புலப்படுத்தப் பெற்றுள்ளது.

ஆய்வு மேற்கொண்டுள்ள படைப்பாசிரியர் சுகி.சிவம் நூல்களில் பயின்று வரும் நடை வகைகளாக வருணனை நடை, எடுத்துரை நடை, சொற்பொருள் விளக்க நடை, ஆங்கிலக் கலப்பு நடை, வடசொற்கலப்பு நடை, வினா நடை, உணர்ச்சி வெளிப்பாட்டு நடை, இலக்கிய நடை, அங்கத நடை, தருக்க நடை, பேச்சுமொழி நடை ஆகியன ஆய்வின்வழி சான்றுகளுடன் எடுத்துக்காட்டப் பெற்றுள்ளன.

நடையியல் கூறுகளான திசைச்சொற்கள், கலைத்துறைச் சொற்கள், எதிரொலிச் சொற்கள், அடுக்குத்தொடர், சிலேடை அணி ஆகியன ஆய்வில் வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

**சான்றெண் விளக்கம்**

1. சு. வெங்கட்ராமன் (பதி.ஆ.) மு.வ. கருத்தரங்கக் கட்டுரைகள், ப.83.
2. இ. சுந்தரமூர்த்தி, நடையியல் சிந்தனைகள், ப.14.
3. மு. வரதராசன், இலக்கியத்திறன், ப.238.
4. பெ.கோ. சுந்தரராஜன் & கோ. சிவபாத சுந்தரம், தமிழ்நாவல் நூறாண்டு வரலாறும் வளர்ச்சியும், ப.270.
5. Style is always highly personal, because it is organic to the writer, he can no more change it than he can change the bone – Structure of his face" – Walter, Allen, Reading a Novel, P.38.
6. சா. வளவன், பெண் படைப்பாளர் தம் படைப்புகள், ப.73.
7. மா. இராமலிங்கம், புதிய உரைநடை, ப.13.
8. அகிலன், சித்திரப்பாவை, ப.24.
9. பொன்னீலன், புதிய தரிசனங்கள், ப.93.
10. சுகி.சிவம், கந்தர் அநுபூதி, ப.32.
11. சுகி.சிவம், கம்பன் : நேற்று - இன்று – நாளை, ப.84.
12. சுகி.சிவம், மனசே, நீ ஒரு மந்திரச் சாவி, ப.307.
13. சுகி.சிவம், ஞானமலர்கள், ப.19.
14. சா. வளவன், பெண் படைப்பாளர் தம் படைப்புகள், ப.79.
15. தமிழருவி மணியன், காமராஜரும் கண்ணதாசனும், ப.82.
16. கமலா கந்தசாமி, சீனத்து ஞானி கன்பூஷியஸ் சிந்தனைகள், ப.33.
17. மு. வரதராசன், அகல்விளக்கு, ப.21.
18. சுகி.சிவம், ஞானமலர்கள், ப.51.
19. சுகி.சிவம், நல்ல வண்ணம் வாழலாம், ப.34.

20. சுகி.சிவம், கனவு மெய்ப்படும், ப.69.

21. சுகி.சிவம், அச்சம் தவிர், ப.41.

22. மேலது. ப.18.

23. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.40.

24. மேலது. பக்.47 – 48.

25. மேலது. பக்149.

26. மேலது. ப.148.

27. மேலது. ப.148

28. மேலது. ப.148

29. சுகி.சிவம். நினைப்பதும்.. நடப்பதும், ப.104.

30. சுகி.சிவம். சுந்தர காண்டம், ப.24.

31. தா.வே. வீராசாமி, தமிழ் நாவல் இயல், ப.15.

32. சுகி.சிவம், கந்தர் அநுபூதி, ப.41.

33. சுகி.சிவம், சொன்னார்கள்! சொன்னார்கள்! – முதல்பாகம், ப.137.

34. சுகி.சிவம், வாழப் பழகுவோம். வாருங்கள்!, ப.15.

35. சுகி.சிவம், கம்பன் : நேற்று - இன்று – நாளை, ப.42.

36. மேலது. பக்.42-43.

37. மேலது. பக். 44, 49, 57, 71, 89, 90, 107.

38. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.82.

39. மேலது. ப.114.

40. சுகி.சிவம், இந்த நாள் இனிய நாள், ப.134.

41. சுகி.சிவம், கம்பன் : நேற்று - இன்று – நாளை, ப.107.

42. சுகி.சிவம், சொன்னார்கள்! சொன்னார்கள்! முதல் பாகம், ப.94.

43. சுகி.சிவம், கந்தர் அநுபூதி, ப.8.

44. சுகி.சிவம், கம்பன் : நேற்று - இன்று – நாளை, ப.128.

45. மேலது. ப.147.

46. மேலது. ப.154.

47. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.83.

48. மேலது. ப.84.

49. சுகி.சிவம், ஆன்மீகப் பூங்காவில் அதிசயத் துளசி, ப.13.

50. சுகி.சிவம், ஏமாற்றதே, ஏமாறாதே..! ப.57.

51. சுகி.சிவம், சிந்தனை முத்துக்கள், ப.68.

52. சுகி.சிவம், ஒருதலம், ஒரு பாடல், ஒரு நயம்! ப.125.

53. சுகி.சிவம், இந்த நாள், இனியநாள், ப.36.

54. சுகி.சிவம், கனவு மெய்ப்படும், ப.44.

55. சுகி.சிவம், கந்தர் அநுபூதி, பக்.32-33.

56. சுகி.சிவம், கம்பன் - நேற்று - இன்று – நாளை, பக்.106-107.

57. சுகி.சிவம், அர்த்தமுள்ள வாழ்வு, ப.132.

58. சுகி.சிவம், வாழ்ந்து பார்க்கலாம் வா, ப.35.

59. சுகி.சிவம், ஒரு தலம், ஒரு பாடல், ஒரு நயம்!, பக்.41-42.

60. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.92.

61. எம்.எஸ். உதயமூர்த்தி, என்னைச் செதுக்கிய எண்ணங்கள், ப.73.

62. ம. கோபிநாதன், எது அறிவு? எது அறிவீனம், ப.71.

63. மா. இராமலிங்கம், புதிய உரைநடை, ப.103.

64. இ. சுந்தரமூர்த்தி, நடையியல் சிந்தனைகள், ப.97.

65. கி. வீரமணி, வாழ்வியல் சிந்தனைகள், ப.28.

66. குன்றக்குடி அடிகளார், சமய இலக்கியம், ப.113.

67. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.142.

68. சுகி.சிவம், அச்சம் தவிர், ப.60.

69. சுகி.சிவம், சிந்தனை முத்துக்கள், ப.11.

70. சுகி.சிவம், வாழப்பழகுவோம் வாருங்கள்!, பக்.52-53.

71. சுகி.சிவம், வெற்றி நிச்சயம், ப.125.

72. சுகி.சிவம், வாழ்தல் - ஒரு கலை, ப.113.

73. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.123.

74. சுகி.சிவம், நல்லவண்ணம் வாழலாம், ப.22.

75. சுகி.சிவம், ஏமாற்றாதே, ஏமாறாதே!, ப.128.

76. சுகி.சிவம், ஆன்மீகப் பூங்காவில் அதிசயத் துளசி, ப.18.

77. சுகி.சிவம், கம்பன் : நேற்று - இன்று – நாளை, ப.128.

78. சுகி.சிவம், இந்த நாள் இனிய நாள், ப.115.

79. சுகி.சிவம், சுந்தர காண்டம், ப.42.

80. சுகி.சிவம், ஞானமலர்கள், ப.34.

81. மேலது. ப.61.

82. தொல்.பொருள். நூ. 1197.

83. A.S. Horby, Oxford Advanced Learner’s Dictionary of Current English, P.187.

84. சுகி.சிவம், ஞானமலர்கள், ப.31.

85. சுகி.சிவம், கம்பன் : நேற்று - இன்று – நாளை, ப.33.

86. சுகி.சிவம், ஏமாற்றாதே, ஏமாறாதே!, பக்.125-126.

87. சுகி.சிவம், மனசே நீ ஒரு மந்திரச் சாவி, ப.155.

88. குறள். 1062.

89. சுகி.சிவம், கனவு மெய்ப்படும், பக்.91-92.

90. சுகி.சிவம், வாழ்தல் - ஒரு கலை, ப.101.

91. சுகி.சிவம், ஞானமலர்கள், ப.93.

92. மேலது, ப.84.

93. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.57.

94. சுகி.சிவம், கனவு மெய்ப்படும், ப.102.

95. சுகி.சிவம், நல்ல குடும்பம் நமது இலட்சியம், ப.98.

96. சுகி.சிவம், உணவே, உயிரே, ப.70.

97. சுகி.சிவம், நினைப்பதும்.. நடப்பதும்…, ப.118.

98. சுகி.சிவம், நல்ல வண்ணம் வாழலாம், ப.18.

99. க. பஞ்சாங்கம், மறுவாசிப்பில் கி. ராஜநாராயணன், ப.129.

100. சுகி.சிவம், வாழ்தல் - ஒரு கலை, ப.8.

101. சுகி.சிவம், மனசே, நீ ஒரு மந்திரச் சாவி, ப.308.

102. மா. இராமலிங்கம், புதிய உரைநடை, ப.19.

103. சுகி.சிவம், வாழ்தல் ஒரு கலை, ப.110.

104. சுகி.சிவம், ஆன்மிகப் பூங்காவில் ஒரு அதிசயத் துளசி, ப.

105. மா. இராமலிங்கம், புதிய உரைநடை, ப.13.

106. சுகி.சிவம். வாழ்ந்து பார்க்கலாம், பா.1, ப.43.

107. மேலது. ப.54.

108. சுகி.சிவம், இந்தநாள் இனியநாள், ப.51.

109. சுகி.சிவம், வெற்றி நிச்சயம், பக்.158, 198.

110. சுகி.சிவம், மனசே, நீ ஒரு மந்திரச்சாவி, பக்.236, 237.

111. மேலது. ப.111.

112. இரா. அரங்கசாமி, தமிழ்மொழி வரலாறும் ஒப்பிலக்கணமும், ப.415.

113. சுகி.சிவம், நினைப்பதும்… நடப்பதும்…, ப.30.

114. சுகி.சிவம், நல்ல குடும்பம் நமது இலட்சியம், ப.138.

115. சுகி.சிவம், வாழ்ந்து பார்க்கலாம் வா, ப.63.

116. மேலது. ப.113.

117. சுகி.சிவம், அர்த்தமுள்ள வாழ்வு, ப.122.

118. சுகி.சிவம்,வாழ்தல் - ஒரு கலை, ப.37.

119. சுகி.சிவம், வெற்றி நிச்சயம், ப.172.

120. சுகி.சிவம், கந்தர் அநுபூதி, ப.6, 21.

121. சுகி.சிவம், கம்பன் : நேற்று - இன்று – நாளை, பக்.67,93.

122. சுகி.சிவம், வெற்றி நிச்சயம், பக்.8, 17, 118, 180.

123. சுகி.சிவம், நினைப்பதும்… நடப்பதும்…, பக்.32,82, 162.

124. சுகி.சிவம், நல்ல குடும்பம் நமது இலட்சியம், பக்.20,132,133,147,181.

125. சுகி.சிவம், வாழ்தல் - ஒரு கலை, ப.97.

126. சுகி.சிவம், கனவு மெய்ப்படும், பக்.14,59,75.

127. சுகி.சிவம், நல்ல வண்ணம் வாழலாம், பக்.75,93.

128. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், பக்.39, 185.

129. சுகி.சிவம், அர்த்தமுள்ள வாழ்வு, பக்.86-105.

130. சுகி.சிவம், சுந்தர காண்டம், ப.49.

131. சுகி.சிவம், இந்த நாள் இனிய நாள், ப.27.

132. மேலது. பக்.29 – 30.

133. சுகி.சிவம், அர்த்தமுள்ள வாழ்வு, பக்.145 – 146.

# இயல் -7

## சுகி.சிவம் படைப்புகளில் உளவியலும் மனிதநேயமும்

### முன்னுரை

இலக்கியம் மனித ஆளுமையின் ஒருவகை வெளிப்பாடு. உளவியல் அவ்வாளுமையை முழுமையாக அறிய உதவும் ஒரு அறிவுத்துறை. உளவியல் நோக்கில் மேற்கொள்ளப்படும் இலக்கிய ஆய்வு, உளவியல் இலக்கியத் திறனாய்வு ஆகும். இவ்வகைத் திறனாய்வு வளரக் காரணமாக இருந்த மிகச்சில உளவியல் அறிஞர்களுள் சிக்மண்ட் பிராய்டு, யூங் ஆகிய இருவரும் குறிப்பிடத்தக்கவர் ஆவர். மனத்தின் செயல்முறைகளைப் பற்றிய அறிவியலாகத் தோன்றி, வளர்ந்து, பல்வேறு பிரிவுகளாகக் கிளைத்திற்கும் உளவியல் கோட்பாடுகள், சுகி.சிவம் படைப்புகளில் பொருந்தியிருக்கும் விதம், மனிதனுக்கு மனிதன் இருக்கவேண்டிய தொடர்பு பற்றிய ஒருவிதமான மனநிலையும், அந்த மனநிலையினால் தூண்டப்பட்டு நடைபெறும் செயல் நிலையுமான மனிதநேயம் சுகி.சிவம் படைப்புகளில் வெளிப்படும் விதம் ஆகியன குறித்து இவ்வியல் விளக்கிச் செல்கிறது.

### ஆளுமை- சொற்பொருள் விளக்கம்

தமிழில் ‘ஆளுமை’ என்ற சொல், ஆங்கிலத்தில் ‘Personality’ என்னும் சொல்லின் வடிவமாகும். இச்சொல்லின் மூலம் இலத்தீன் மொழி ஆகும். நாடக மேடையில் நடித்துக் காட்டிய போது நடிகர்கள் தாங்கள் ஏற்றிருக்கும் பாத்திரத்தின் இயல்பிற்கேற்றவாறு முகமூடி அணிந்து வருவர். இம்முகமூடிதான் இலத்தின் மொழியில் ‘பர்ஸனர்’ (Parsana) என்று

அழைக்கப்பட்டது. சொற்பொருள் வளர்ச்சியின் காரணமாக இன்று அச்சொல்லின் பொருள், ஒரு தனிமனிதனின் நடத்தை முறையைக் குறிக்கிறது. தற்காலத்தில் இச்சொல் விரிவான பொருளைப்பெற்று ஒரு மனிதன் சீரான, தனிப்பட்ட நடத்தை முறையைக் (unique pattern of behaviour) குறிப்பதாயிற்று[1]. ஆளுமை என்பது ஒருவனது உடலமைப்பு என்றும், ஒருவனுடைய உடலமைப்பு, அவன் வாழும் சமூகச் சூழ்நிலை ஆகியவற்றின் தன்மைக்குத்தக அமையும் இயல்புகளெல்லாம் ஒன்று சேர்ந்தது என்றும், ஒருவகை இயல்பூக்கங்களும் உள்ளக்கிளர்ச்சிகளும் ஒருங்கே சேர்ந்தமைவது என்றும், பாரம்பரிய இயல்புகளும் (Heriditary traits), அனுபவத்தால் ஈட்டிய இயல்புகளும் (Acquired traits) ஒருங்கே சேர்ந்தமைவது என்றும் பலவாறு ஆளுமைக்குக் கலைக்களஞ்சியம் விளக்கம் தருகின்றது.[2] இக்கருத்தாக்கங்களின் மூலம் ஆளுமை என்பதை ஒரு மனிதனின் நடத்தை பற்றியது என்று கூறுவது பொருத்தமுடையதாகிறது.

மேலைநாட்டு அறிஞர்களான மக்டூகல், மார்டர் பிரின்ஸ், கில்போர்ட் ஆகிய மூவரும் ஆளுமையை வரையறை செய்துள்ளனர். “ஆளுமை என்பது கண்ணையும் கருத்தையும் கவரக்கூடிய உள்ளமும் அதனுடைய செயல்களும் ஒருங்கிணைந்து தோன்றக்கூடிய ஒரு கூட்டுத்தொகுதி”[3]

என்பார் மக்டூகல். இக்கருத்தினை அரண் செய்யும் வகையில் அமையும்,

> “ஆளுமை என்பது ஒருவனுடைய உயிரியல் தொடர்பான உளவியல் நிலைகள், உள்ளத்துடிப்புகள், உள்ளத்

> தூண்டல்கள், உள்தாக்கம், மனப்போக்கு, இயல்பூக்கம் போன்றவையும் ஒன்று சேர்ந்து மொத்தமாக உருவானதே"[4]

என்னும் மார்டர் பிரின்ஸின் இங்குச் சுட்டத்தக்கது. மேலும், 'ஆளுமை என்பது ஒருவனது பண்புகளின் தனித்தன்மை வாய்ந்த அமைப்பு'[5] என்பர் கில்போர்ட்.

இக்கருத்துகளின் வாயிலாக ஆளுமை என்பதற்கு, மனிதனுடைய உள்ளம், நடத்தை சார்ந்த அமைப்பு என்பது பெறப்படுகிறது. எனவே, மனித உள்ளம், உடல், உணர்ச்சிகள், நடத்தைகள் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்ட உளவியலை நடத்தைபற்றிய அறிவியல் என்று குறித்துள்ளனர். "தற்போதைய உளவியல், மனிதனின் நடத்தையை அறியும் ஒரு விஞ்ஞானவியலாகும். குறித்த மனிதனின் நடத்தையானது, குறித்த தாழ்நிலைத் தூண்டல்களினால் ஏற்படுவதன் காரணமாகச் சூழ்நிலை மனிதனின் நடத்தையை அறியவும் விவரிக்கவும் முக்கியமாக அமைகிறது"[6] என்பர் தா.ஏ.சண்முகம். அறிவியல் கண்ணோட்டத்துடன் உளவியல் பற்றி முதன் முதலில் விளக்கிய தெகார்ட் (Descartes) என்னும் பிரெஞ்சு அறிஞரின்,

> "ஒலி ஓசை போன்ற சூழ்நிலைத் தூண்டல்களினால் ஏற்படுவதே உள்ளம். சூழ்நிலையில் உள்ள தூண்டல்கள் புலன்களின் வழி மூளையைத் தூண்டுகின்றன. எனவே, மூளையில் ஒருவித மிருக சக்தி தோன்றுகிறது. அச்சக்தியே உடலின் தசைகளை அடைந்து, உடலைக் குறிப்பிட்ட

நடத்தையை மேற்கொள்ளச் செய்கிறது. அச்சக்தியே நடத்தையாக வெளிப்படுகிறது”[7]

என்னும் கருத்து இணைத்து நோக்கத்தக்கது. இலக்கியத்தில் அமையும் உளவியல் கோட்பாடுகளை வகைப்படுத்திக் காண்பது, அண்மைக்கால ஆய்வுப் போக்குகளில் குறிப்பிடத்தக்க ஒன்றாகிறது.

தொல்காப்பியர் ‘நோக்கு’ என்ற செய்யுளுறுப்பு பற்றிக் கூறும் கருத்து இங்கு இணைத்துக் காணத்தக்கது. ஒருமாத்திரை முதல் அடிவரை செய்யுள் முழுவதும் திட்டமிட்டு அமைக்கும் நோக்கு பற்றி,

“மாத்திரை முதலான அடிநிலை காறும்

நோக்குதற் காரணம் நோக்கு எனப்படுமே”[8]

என்று நூற்பா யாத்துள்ளார்.

**உளவியல் - விளக்கம்**

உளவியல், மனித மனத்தை ஆய்வு செய்யும் ஒரு துறையாக மருத்துவத் துறையில் தோற்றங்கண்டது. ஃபிராய்டு, யூங் போன்றவர்களால் ஆய்விற்குப் பயன்படுத்தப்பட்ட இத்துறை, இன்று இலக்கிய ஆய்விலும் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

“உளவியல் என்பது மனித உள்ளத்தின் தன்மைகளை எடுத்து விளக்குவது. சைக்கி (Psyche), லோகஸ் (Logus) என்னும் இரு கிரேக்கச் சொற்களும் இணைந்து ‘சைக்காலஜி’ (Psychology) என வழங்கப்படுகின்றது”[9]

என்னும் கருத்து, உளவியலின் விளக்கமாக அமைகிறது. மேலும்,

"உளவியல், உள்ளத்தின் கோலங்களையும் கோணங்களையும் அதன் விழைவுகளையும், விளைவுகளையும் ஆராய்கிற ஓர் அறிவியலாகும்"[10]

என்னும் கூற்று, உளவியல் துறையைப் பற்றித் தெளிவாகப் படம்பிடித்துக் காட்டுகிறது. இத்தகைய உளவியல் துறை பல்வேறு கூறுகளைக் கொண்டிலங்குகிறது.

**உளவியல் கூறுகள்**

அண்மைக் காலத்தில்தான் இலக்கிய ஆய்வில் உளவியல் பயன்படுத்தப்பட்டு வருகிறது. இலக்கியத்தில் காணப்படும் உளவியல் கூறுகளைப் பற்றி ரெனிவெல்லக், ஆஸ்டின் வாரென் மற்றும் சார்லஸ் ஆகியோர் குறிப்பிடும் கருத்து ஈண்டு சிந்திக்கத்தக்கது.

"இலக்கியத்தில் அமையும் உளவியல் கூறுகளைப் பின்வரும் நான்கு முறைகளில் ஆராயலாம்.

அ. பாத்திரங்களின் குணவேறுபாடுகளை, பண்பு நலன்களை உளவியலுடன் ஒப்பிட்டு ஆராய்வது

ஆ.நூல்களைப் பகுத்தாய்வதன் மூலம் படைப்பாசிரியனின் மனநிலையைக் கண்டறிவது.

இ.படைப்பில் அமைந்துள்ள உளவியல் அடிப்படையை, அப்படைப்பைக் கொண்டே ஆராய்வது.

ஈ. இந்த இலக்கியம், படிப்போரை எந்த அளவிற்குப் பாதித்துள்ளது என ஆராய்ந்து அவையோர் உளவியலைக் கண்டறிய முற்படுவது."[7]

இவ்வாறு அமையும். உளவியல், பல்வேறு வகைமைகளையும் அணுகுமுறைகளையும் தன்னகத்தே கொண்டுள்ளது.

**உளவியல் வகைகளும் அணுகுமுறைகளும்**

மனித உள்ளத்தின் தன்மையை ஆராயும் உளவியல் துறை பலவகைகளையும் பல அணுகுமுறைகளையும் கொண்டதாக அமைகிறது.

> "உயிரியலின் ஒரு பிரிவாக முன்னர் கருதப்பட்டு வந்த இது, குழந்தை உளவியல், மிகை (abnormal) உளவியல், தொழிற்சாலைப்பணி உளவியல் (Industrial Psychology), சமுதாய உளவியல் முதலிய பல வகைகளையும் மற்றும் நடத்தை முறை (behaviouristic), ஒன்றிப்பு முறை (gestalt) அலசல் முறை (analytic) முதலிய பல அணுகுமுறைகளையும் கொண்டுள்ளது. ஃப்ராய்டிசம் உளவியலை மருத்துவ முறைக்குட்பட்டு அலசல் முறையில் (Psycho analysis) ஆராய்கிறது"[12].

உளவியலில் பின்பற்றப்படும், இந்த அணுகுமுறைகள் இங்குக் குறிப்பிடத்தக்கன. மேலும் இலக்கிய ஆய்வில், உளவியல் திறனாய்வு பெறுமிடம் சிந்தித்தற்குரியது.

**உளவியல் திறனாய்வு பெறும் இடம்**

இலக்கிய ஆய்வில் பல்வேறு அணுகுமுறைகள் பின்பற்றப்பட்டு வருகின்றன. அவற்றுள் உளவியல் திறனாய்வும் குறிக்கத்தக்கது. "வாழ்க்கைத் துன்பங்களுக்குரிய காரணங்களைத் தெரிந்து அவை தீர

வழிகாண்பதற்கும் இத்தகைய அணுகுமுறை ஆய்வு உதவும். சமுதாயத்தை நல்ல முறையாக மாற்றி அமைக்கவும் உளவியல் சிந்தனை பயன்படும்"[13].

> "இலக்கியங்களில் இடம்பெறும் மனவுணர்வுகளை விளங்கிக் கொள்வதற்குத் துணைபுரியும் உளவியல் திறனாய்வு, இலக்கியத்தின் சில பிரத்தியேகமான உத்திகளையும் மொழிக்கூறுகளையும் புரிந்துகொள்ளவும் உதவுகிறது"[14]

என்னும் கருத்து இங்குச் சிந்திக்கத்தக்கது. மேலும்,

> "இலக்கியத்தின் புரியாத இடங்களைப் புரிந்து கொள்ளவும், முக்கியமான உட்பொருட்களை, குறிப்பிட்ட ஒரு கோணத்தில் விளங்கிக் கொள்ளவும், பெரிதும் உதவுகின்ற இவ் உளவியல் நெறி, இன்று இலக்கியக் கோட்பாட்டிலும் திறனாய்வுக் கோட்பாட்டிலும் முக்கியமான இடத்தைப் பெற்றுள்ளது"[15]

என்னும் கூற்றும் குறிப்பிடத்தக்கது. இத்தகைய பயன்பாட்டையும் இன்றியமையாத இடத்தையும் பெற்றுள்ள உளவியலின் பங்களிப்பு, இலக்கியத் திறனாய்வில் சிறப்பாகச் சுட்டத்தக்கது.

"இலக்கியத் திறனாய்வில் உளவியலின் பங்களிப்பு முக்கீயமாக ஆறு நிலைகளில் காணப்படுகிறதெனலாம். அவை;

1. இலக்கியப் படைப்பாக்கத்தின் அல்லது அது தோற்றம் பெறுவதன் வழிமுறைகளை உளவியல் நிலையில் புலப்படுத்துதல்.

2. படைப்பாளியின் உள்ளத்து நிலையையும் அதற்குரிய காரணங்களையுமு அறியக் கொண்டு வருதல். அதாவது படைப்பாளியின் சுயவரலாற்றைப் படைப்பில் காணுதல்.
3. குறிப்பிட்ட இலக்கியத்தில் காணப்பெறுகின்ற கதைமாந்தர்களின் உணர்வுகளையும் செயல்களையும் விளக்குதல்.
4. இலக்கியத்தில் தொல் படிமம் (Arche type) முக்கிய இடம்பெறுகிறது என்பதைக் கருதுகோளாகக் கொண்டு அதன் உருவாக்கத்தைப் புலப்படுத்துதல்.
5. குறிப்பிட்ட இலக்கியப் படைப்பிலுள்ள தனிச்சிறப்பான சொற்களையும் தொடர்களையும் மற்றும் சிறப்பான உத்தி முறைகளையும் உள்ளத்து உணர்வுப் பிரதிபலிப்புக்களாக இனங்கண்டு விளக்குதல்.
6. வாசகரிடம் இலக்கியம் ஏற்படுத்துகிற உறவையும் தாக்கத்தையும் காணுதல்”[16].

இலக்கியத் திறனாய்வில் உயர்ந்த பங்களிப்பைத் தரும் உளவியல், ஆய்வுக்குள்ளாகும் சுகி.சிவம் படைப்புகளில் இடம்பெற்றுள்ள பாங்கு சுட்டிக்காட்டத்தக்கது.

**மனப்பகுப்பு**

மனிதனின் மன நடவடிக்கைகள் பற்றிய அறிவியலே உளவியல் ஆகும். ‘மனித மனத்தை ஃபிராய்டு மூன்றாகப் பிரிக்கிறார்.

1. நனவு உள்ளம் (நனவு மனம். conscious mind)

2. மறைவு நனவு உள்ளம் (நனவு மனத்திற்கு முந்தைய நிலை- subconscious mind)
3. ஆழ்ந்த உள்ளம் (நனவிலி மனம்- unconscious mind)'[17]

பிராய்டு மனத்தின் செயல்முறைகளை ஈடு (Id) என்னும் தூண்டல் ஆற்றல், ஈகோ என்னும் தன்முனைப்பு, சூப்பர் ஈகோ என்னும் மனச்சான்று என மூன்று வகைகளாகப் பிரிக்கிறார். இதனை சி.இ.மறைமலை எளிமையாகப் பின்வருமாறு விளக்குகிறார். ஒரு கடையில் நன்கு பழுத்த வாழைப்பழங்கள் நிறைந்த ஒரு வாழைத்தார் தொங்கிக் கொண்டிருக்கின்றது; ஈடு (Id) உடனே இரண்டு பழங்களைப் பறித்துச் சாப்பிடத் தூண்டுகிறது. போதுமான பணம் இல்லாவிட்டாலும் கடைக்காரனுக்குத் தெரியாமல் பழங்களைத் திருடத் துண்டுகிறது. ஆனால் ஈகோ (Ego) இம்முயற்சியின்போது பிடிபட்டால் சமுதாயம் வழங்கக் கூடிய தண்டனையை முன்னிறுத்தி ஈடைக் (Id) கட்டுப்படுத்துகிறது. ஒருவேளை கடையிலும் யாரும் இல்லை; வெளியிலும் யாரும் இல்லை என்றால் ஈகோ (Ego) இச்செயலை அனுமதித்து விடும். சூப்பர் ஈகோ (Super Ego), யாரும் பார்க்கவில்லை என்றாலும் தவறான செயலைச் செய்யக்கூடாது என்று அறிவுறுத்தும்.[18] இந்த அடிப்படை உளவியல் சிந்தனை படைப்பாசிரியரிடத்திலும் காணப்பெறுகிறது. சான்றாகச் சில இடங்களைச் சுட்டமுடிகிறது.

"மனித மனம் இருபிரிவாகச் செயல்படுகிறது. மேல்மனம், ஆழ்மனம் என்கிறது உளவியல். தன்னைப் பற்றிய விழிப்பு நிலையில் ஜாதி, வயது, பால் பிரிவு, பதவி, அந்தஸ்து, தகுதி, கல்வி என்கிற

பலவிதமான விவரங்களைப் பதிந்து வைத்திருப்பது மேல்மனம். முகபாவங்கள் என்கிற முக ஜாலங்கள் என்கிற முகமூடிகளை மாற்றி மாற்றித் தருவது மேல்மனம். ஆனால், ஆழ்மனம் அப்படிப்பட்டது அல்ல. பொதுவாகவே இது மேல் மனத்தோடு அதிகம் ஒட்டாது. இந்த மேல் மனத்திற்கும் ஆழ்மனத்திற்கும் உள்ள இடைவெளி கூடக்கூட அந்த நபர் நிம்மதி இழக்கத் தொடங்குவார். சில சமயங்களில் மேல்மனமும் ஆழ்மனமும் பகைமை பாராட்டி மோதிக்கொள்ளும்போது அந்த நபர் மனநோயாளியாகவே மாறிவிடுகிறார்....உங்கள் ஆழ்மனத்தில் பொக்கிஷங்கள் இருக்கும். பொசுக்குகிற விசயங்களும் இருக்கும். அது சில நேரங்களில் களஞ்சியம். சில நேரங்களில் குப்பை மேடு. உங்கள் நிஜமனிதர் சில சமயம் புத்தர்! சில சமயம் கொலைகாரர்”[19]

என்று மனத்தின் பல்வேறு நிலைகளை ஆசிரியர் விளக்கிச் செல்கிறார். இதன் மூலம் ஆசிரியரது அடிப்படை உளவியல் சிந்தனையை அறியமுடிகின்றது. மேலும் மேல்மனம், ஆழ்மனம் ஆகியவற்றின் வலிமையை ஓர் இதிகாசப்பாத்திரத்தின் மூலம் விளக்கிச் செல்வதும் குறிப்பிடத்தக்கது.

“மகாபாரத்தில் தருமரை மிக மிக நல்லவர் என்று சொல்வார்கள். இது உண்மை. ஆனால், முழு உண்மை அல்ல. மகாபாரத்தில் நிகழ்ந்த பல அவலங்களுக்கும் காரணம் தருமருள் பதுங்கியிருந்த சூதாட்ட ஆர்வம். கர்ணன் கேலி பேசினான். சகுனி சீண்டினான்.

போரைத் தவிர்க்க சூதாடினான் என்று உபந்யாஸகர்கள் சமாதானம் சொன்னாலும் ஆழ்மனத்தில் சூதாட்ட ஆசை இல்லாமல் அவன் சூதாட இசைந்திருக்க முடியாது. சூதாட்டம் தருமரின் பலவீனம்"[20]

என்னும் இக்கருத்து ஆழ்மனம், மேல்மனத்தின் வலிமைக்குச் சான்று பகர்கிறது. உளவியலின்படி இருவகைப்படும் மனத்தின் செயற்பாடுகள், இச்சை, தான் எனும் உணர்வு, மனச்சான்று என மூவகைகளாக அமைகின்றன.

**இச்சை:**

இச்சை உணர்வு, நினைத்தவற்றை எல்லாம் நினைத்த நேரத்தில் நிறைவேற்றத் துடிக்கும் சுயநலப்போக்கு கொண்டது. திரௌபதியின் தந்தை துருபதன் வைத்த வில்போட்டியில் வெற்றி பெற்ற அர்ச்சுனன் பாஞ்சாலியை அடைகின்றான். அதில் பங்கேற்காதவர் தருமர். அர்ச்சுனனால் வெல்லப்பட்ட பரிசான பாஞ்சாலியைப் பங்கு போட்டுக் கொள்ளும் ஆசை மட்டும் தருமருக்கு இருந்தது. இதன் மூலம் அடக்கம், பணிவுமிக்க தருமருக்குள்ளும் ஒருகோர மிருகம் குடிகொண்டிருந்ததை[21] ஆசிரியர் விளக்குகிறர்.

போர்க்களத்தில் கர்ணன் தர்மரைத் தோற்கடிக்கின்றான். அவரைப் போர்க்களத்தை விட்டு விரட்டியடிக்கின்றான். போரை விட்டு விலகிய தருமர், அர்ச்சுனனைப் பார்த்து என்னை அவமானப்படுத்திய கர்ணனைக் கொல்; பழிவாங்கு. அவனைக் கொன்ற வெற்றிச் செய்தியுடன் வந்து என்னைப்பார். அதுவரை என் முகத்தில் விழிக்காதே என்கிறார். அர்ச்சுனன் கர்ணனைக் கொல்லாமல் திரும்பிய போது, என்ன ஏது? என்று

விசாரிக்காமலேயே அவனைத் திட்டுகின்றார். அவருடைய அடிமன சத்திரிய வெறி வெளிப்பட்ட இடம் இது[22] என்கிறார். இச்சான்றுகளின் மூலம் இச்சை என்னும் சுயநலப்போக்கினை வெளிப்படுத்துகின்றார்.

> "ஆசை உள்ளவர்கள் விலங்குகள். அன்பு உள்ளவர்கள் மனிதர்கள். அருள் உள்ளவர்கள் தெய்வங்கள்"[23]

என்னும் கூற்றும், இச்சை என்னும் தூண்டல் உணர்வுக்குச் சான்றாக அமைகிறது.

**ஈகோ (Ego)**

மனிதன் தன்னைத் தற்காத்துக் கொள்ள ஈகோ உதவுகிறது. மன ஆற்றலின் பகுத்தறிவுக் கூறாக ஈகோ விளங்குகிறது. ஈகோ பகுத்தறிவுக்கும் விழிப்புணர்ச்சிக்கும் அல்லது எச்சரிக்கை உணர்ச்சிக்கும் காரணமாக இருக்கின்றது.[24]

> "பிள்ளைகளை வழிக்குக் கொண்டுவர, நினைக்கும் சில பெற்றோர்கள், பிள்ளைகள் மிக மென்மையாக, மேன்மையாகக் கருதும் விஷயங்களில் பாய்ந்து சுபளீகரம் செய்வார்கள். இது அநாகரிகம். அவர்கள் உயிராக நேசிக்கும் நண்பர்கள் முன்னால் அவமானப்படுத்துவது, அல்லது வீடு தேடி வந்த அவர்களது நண்பர்களை அவமானப்படுத்துவது, அவர்கள் மிக மதிக்கும் நபர்களை அவமதித்து இன்சல்ட் செய்வது என்று குரூரமாக நடந்து கொள்வார்கள்"[25]

என்று கூறுவதன் மூலம், குழந்தைகளை வளர்க்கும் சில பெற்றோரின் ஈகோவை அறியவியலுகிறது. “நம்மில் பலருக்குத் ‘தான்’ என்னும் அகங்காரம் நிறையவே உண்டு. ஆனால் தான் என்னும் அறிவு எத்தனை பேருக்கு உண்டு. உண்மையாகத் ‘தான்’ என்பது எது? பலா் தங்கள் பதவிகளையே ‘தான்’ என எண்ணி விடுகிறார்கள். தொலைபேசியை எடுத்து, ‘நான் கமிஷனா் பேசுகிறேன். கிளாா்க் எங்கே போயிட்டார் என்று பதவிகளாலேயே தங்களை இனம் காணுகிறார்கள். இன்னும் உடம்பையே ‘தான்’ என்று எண்ணுவா்”[26] என்று கூறும் பகுதி, தான் என்னும் உணா்வு (ஈகோ) கொண்ட உளவியல் கோட்பாட்டைப் புலப்படுத்துகிறது.

**மனச்சான்று**

கட்டுப்படுத்தும் ஆற்றல் சூப்பர்-ஈகோ என்னும் மனச்சான்று ஆகும். இது சமுதாயத்தைக் காப்பதற்காகச் செயற்படுகின்றது.[27] நம்நாடு நல்லொழுக்கத்தையும், நற்பண்புகளையும் பெரிதும் போற்றும் பண்பாட்டினை உயிராக உடையது. அதனால் மனித மனத்தின் இருள் சூழ்ந்த சிகிச்சை உணா்வைக் கட்டுப்படுத்தி மனிதமனத்தைத் துலங்கச் செய்ய வேண்டும். நமது வீட்டில், ரமணா், விவேகானந்தா், புத்தா், வள்ளலாா், தாயுமானவா், அன்னை தெரசா ஆகியோரது உருவப்படங்களை மாட்டி வைக்கவேண்டும். இப்படங்களைப் பாா்க்கும்போது ஒவ்வொருமுறையும் நமக்குள் பரவசம் உருவாகும்.[28] இக்கூற்றின் மூலம் ஆசிரியா் வலியுறுத்தும் மனச்சான்றினை அறியமுடிகிறது. மேலும்

"இவர்கள் படங்களால் அவர்களுக்குக் கூடக் கற்பு உண்டாகும். பார்க்கிற ஒவ்வொரு முறையும் பரவசம், உயரவேண்டும் என்கிற உந்துதல் நமக்குள் உருவாகும்"[29]

என்னும் கருத்தும் மனச்சான்றினை எடுத்துரைக்கிறது.

"சமநிலையில் எடுக்கப்பட்ட முடிவுகள், சமவெளியில் உருவான நாகரிகம் போல.. பதற்றம் இல்லாத மனோநிலையில் விளைந்த தீர்மானங்கள் தீர்க்கமானவை. சத்தியமானவை. நியாயமானவை. சமூகத்திற்கு அவசியமானவை"[30]

என்று படைப்பாசிரியர் குறிப்பிடுவதும் மனச்சான்றினை அடியொற்றியேயாகும்.

"அடுத்தவர் சந்தோஷத்தில் தன் சந்தோஷம் அடங்கி இருக்கிறது என்று வாழ்வதே இனிய இல்லறம்"[31]

என்பதும் மனச்சான்றினையே வலியுறுத்துகிறது.

**ஊக்கிகள்:**

ஊக்கி என்பது ஒரு பொதுப்படையான சொல்லாகும். அது விடாய்கள் (needs), உந்துகள் (drives), இயல்பூக்கங்கள் (instincts) இவைகளை எல்லாம் குறிக்கிறது. ஊக்கியின் இயல்பு ஒரு நடத்தையைத் தொடங்கி வைப்பதோடு இல்லாமல் அந்த நடத்தை ஓர் இலக்கை (Goal) அடையும் வரை அதைத் தொடர்ந்து நடக்கச் செய்வது ஆகும்[32].

“மனிதவாழ்க்கை இரு இயல்பூக்கங்களை அடிப்பைடயாகக் கொண்டது. அவை 1) வாழத்தூண்டும் இயல்பூக்கம், 2) செத்து மடிய வேண்டும் என்ற இயல்பூக்கம்”[33]

என்னும் கூற்று, இயல்பூக்கத்தின் வகைகளை எடுத்தியம்புகிறது. ‘இருவரும் தம்மை இழந்து உண்டாக்கிய மூன்றாவது உயிரை முதன்மைப்படுத்திச் சிந்திக்கும்போது தான், சரியான குடும்பம் உருவாகிறது. எனவே, ஆணையும் பெண்ணையும் இணைக்கும் தாலி முடிச்சைவிட, முந்தானை முடிச்சைவிட, உயிர் முடிச்சாய், சதை முடிச்சாய்த் தோன்றுகிற குழந்தை என்கிற பந்தமே மாபெரும் முடிச்சு’[34] என்னும் கருத்து, வாழத்தூண்டும் இயல்பூக்கத்தின்பாற்படும். செத்துமடியும் இயல்பூக்கத்திற்குச் சான்றாக,

“நம்மவர்களில் பலர் கஷ்டங்களால் சாவதை விட, கஷ்டங்களைப் பற்றிய கற்பனைகளால் சாகிறார்கள். ஆபத்துக்களை விட ஆபத்துக்களை பற்றிய கற்பனைகள் ஆபத்தானவை”[35]

என்னும் கருத்தினைச் சுட்டமுடிகிறது.

**வழிபாடு பற்றிய உளவியல்:**

அச்ச உணர்வும் குற்ற உணர்வும் வழிபாட்டிற்குக் காரணம் என்று உளவியல் அறிஞர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

“தன் ஆற்றல் எல்லைக்கு உட்பட்டது. அதனால் எல்லா ஆபத்துகளையும் சமாளிக்க முடியாது என்பதை உணரும் மனிதன், தான் பயத்திலிருந்து விடுபட வேண்டுமென்பதற்காக, எல்லையற்ற

வல்லமையுடைய இறைவனிடம் தன்னை அடைக்கலமாக்கிக் கொள்கிறான். அதுதான் வழிபாடு!"[36]

என்னும் கருத்து இதனை அரண்செய்கிறது. இதற்கு உளவியல் ரீதியாக மேலும் விளக்கமும் தருகிறார். அனைத்துக் கடவுளரும் பாம்புகளை அணிந்திருக்கிறார்கள். இந்தப் பாம்புகளுக்கு மனோதத்துவ ரீதியாக மற்றொரு விளக்கமும் தரலாம். எல்லோருக்கும் பாம்பைக் கண்டால் பயம். சிறுவர்களின் மனத்தைப் புரிந்து கொள்ள உளவியல் வல்லுநர்கள் ஒரு சோதனை நடத்தினர். வெவ்வேறு விலங்குளைக் குழந்தைகளுக்குக் காட்டி எதிர் விளைவுகளைப் பதிவு செய்தார்கள். சிங்கம், புலி, கரடி ஆகிய விலங்குகளைக் காட்டிய போது ஹைசிங்கம், ஹை புலி, ஹை கரடி என்றனர். ஆனால் பாம்பைக் காட்டியபோது ஆ பாம்பு என்று அலறினர். ஹை என்பது சந்தோஷத்தை வெளிப்படுத்தும் ஓர் ஒலிக்குறிப்பு. தலைமுறை தலைமுறையாக மனிதர்களிடையே இருந்து வரும் பாம்பைப் பற்றிய பயம் அந்தப் பிஞ்சு நெஞ்சங்களில் பதிந்திருந்ததையே[37] இந்த விளைவு எடுத்துக்காட்டியிருக்கிறது. எனவே, அச்சத்தைத் தவிர்க்க வழிபாட்டில் மனதைச் செலுத்தவேண்டும் என்று அறிவுறுத்துகிறார்.

**காமம் பற்றிய உளவியல்**

மனிதனிடம் உள்ள பசிகளில் பாலியல் பசி முக்கியமானது என்பர் ஃபிராய்டு. எல்லா ஆசைகளுக்கும் அடிப்படை, காமமே என்பது உளவியல் அறிஞர்களின் கருத்து. இதே கருத்தினைப் படைப்பாசிரியரும் வலியுறுத்துகின்றார். ஏகபத்தினி விரதன் போல் வேசம் போடும் சிலர் அலுவலகத்தில் எல்லாப் பெண்களையம் வளைத்துப்போட முயல்கின்றனர்.

தாசிகள் வேறு வழியின்றி இத்தொழிலில் ஈடுபட்டதாகக் கூறுவது தவறு. அடிமன ஆசை காரணமாகவே இவர்கள் இப்படிச் செய்கின்றனர் என்பது படைப்பாசிரியரின் கருத்தாக உள்ளது. ஒருவர் காமம் பற்றிய நினைவில் இருக்கும்பொழுது அவர் பேசுவது சரியில்லாததாக இருக்கிறது. இதனை,

"கோபத்திலும் சரி காமத்திலும சரி சொல்லப்படுபவை உள்ளீடு அற்ற உளறல்கள்"[38]

என்று குறித்துச் செல்கிறார்.

**உணவில் உளவியல்:**

கணவன் தன்னைப் பாராட்ட வேண்டும் என்பது ஒவ்வொரு மனைவியின் எதிர்பார்ப்பு. இதனைப் படைப்பாசிரியர் சுகி.சிவம், 'காலையில் எழுந்து. தான் போட்டுக்கொடுத்த காபியைக் குடித்துவிட்டுத் தன் கணவன் முகமலர்ந்து பாராட்டுவான் என்று எதிர்பார்த்த மனைவிக்கு ஏமாற்றம். அவளே காபி எப்படி இருந்தது என்று கேட்கிறாள். அது காபியா? நான் டீ என்றல்லவா நினைத்தேன் என்று கணவன் சொல்கிறான். மனைவி தந்த காபியில் குறையில்லை. என்ன குடிக்கிறோம் என்பதே தெரியாமல் வயிற்றுக்குள் ஊற்றிய கணவனின் உணர்வில்தான் குறைபாடு'[39] என்று விளக்கிச் செல்கிறார்.

சுகி.சிவம் படைப்புகளில் தாழ்வு மனப்பான்மை, மனச்சோர்வு, சாலம், தவம், தவறுகளைத் திருத்துதல், கட்டுப்பாடு, எண்ணம் முதலான உளவியல் கூறுகளும் காணக்கிடக்கின்றன.

**தாழ்வு மனப்பான்மை:**

'ஊக்கமது கைவிடேல்'[40] என்பது ஔவையின் ஊக்கவுரை. தன்னுடைய வாழ்க்கையின் பொறுப்பை ஏற்பவரே ஆற்றல் மிக்கவா் என்பதை,

> "வாழ்க்கையில் நீந்தக் கற்றல் கல்விகளைக் காட்டிலும் முக்கியமானது"[41]

என்னும் கூற்று அரண் செய்கிறது. 'நமக்குச் சாதகமான சாத்தியக் கூறுகள் பற்றிய அழுத்தமான விரிவான கற்பனையும், ஆழமான தன்னம்பிக்கையும் கொண்டிருந்தால் அளவற்ற சக்தி தரும் ஆற்றலும் நமக்கு அபாரமாகக் கிடைக்கும். நமக்குள்ளே இருக்கும் தெய்வீகத்தை நாம் சரிவரப் புரிந்து கொண்டிருந்தால் தான், இப்படிப்பட்ட ஆணித்தரமான நம்பிக்கை நமக்குப் பிறக்கும். தாழ்வு மனப்பான்மை நம்மை முடமாக்கி விடுகிறது'[42] என்னும் கூற்றும் இங்கு இணைத்து நோக்கத்தக்கது.

> "வெற்றிக்குப் பின்னும் தோல்வி மறைந்து இருக்கிறது. தோல்வியே வெற்றிக்கான நெடும்பாதையாகும். பாறையை அடித்த நூறாவது அடியில் நீா் ஊற்று வருகின்றது என்றால் அடிக்கப்பட்ட தொண்ணூற்றொன்பது அடிகள் வீணான அடிகள் அல்ல; நீா் வருவதற்குக் காரணமான அடிகள்"[43]

என்னும் கருத்தும் ஈண்டு சிந்திக்கத்தக்கது. சிலா், தான் எதற்கும் உபயோகமற்றவா், அழகற்றவா் என்ற எண்ணத்துடன் இயங்குவா். சிலா் ஐம்பூதங்களும் தனக்கு எதிராகச் சதி செய்வதாகவும், தான் இராசியில்லாதவா் என்றும் எண்ணிக்கொள்வா். இம் மனப்பான்மை

மனமுறிவை ஏற்படுத்தும் என்னும் உளவியலாரின் கருத்திற்கேற்ப உபயோகமற்றவர் என்று எவரும் கிடையாது. அழகற்றவர்களாலும் சாதிக்கமுடியும். கோள்கள் எவற்றையும் குறித்து இயங்குவன அல்ல"[44] என்றும் குறிப்பிட்டுச் செல்வது தாழ்வு மனப்பான்மையைத் தோற்கடிக்கச் செய்யும் வழிமுறையாகும். உடல் தொடர்பான முறைகளை மூலதனமாக்கிக் கொண்டால் வெற்றிபெறலாம் என்பதே படைப்பாசிரியர் கருத்தாக அமைகிறது.

> "உடல் சம்பந்தமான தாழ்வு மனப்பான்மை ஒருபோதும் நமக்கு இருக்கக்கூடாது. அதில் சரி செய்ய வேண்டியவை சரிசெய்யப்பட வேண்டும். அதற்குத் தயங்கவும் கூடாது"[45]

என்று கூறுவதோடு, செயற்கைக் காலை வைத்துக்கொண்டு நாட்டியமாடிய மயூரி சுதா சந்திரனைச் சான்று காட்டி, உடல் குறைகளைக் குறைகளாகக் கருதாமல் அவற்றை மூலதனங்களாக்கி முன்னேறுங்கள் என்று இளைஞர்களுக்கு உளவியல் அடிப்படையில் அறிவுரை வழங்குகிறார்.

**மனச்சோர்வு:**

வாழ்க்கை வறண்டு விட்டது; உற்சாகம் செத்துவிட்டது; மனம் மரணித்துவிட்டது என்னும் நிலையை டிப்ரஷன் என்கிற மனச்சோர்வு எனக் குறிக்கின்றார் உளவியல் நூலார். இதனை,

> "உணர்வு, சிந்தனை, நடத்தை ஆகியவற்றிடையே ஒருங்கிணைவு இன்றிப் போய்விடுவதாலும், ஏனைய மனிதர்களிடமிருந்தும்,

யதார்த்த வாழ்க்கையிலிருந்தும் விலகிப் போய்விடுவதாலும் ஏற்படும் சீர்கேடுகளின் தொகுதியே 'மனச்சிதைவு' எனப்படுகிறது"[46]

என்னும் கூற்றால் அறியலாம். 'இரண்டாயிரத்து இருபதில் உலகம் ஒரு கொள்ளை நோயால் கொண்டு போகப்படும். அது எய்ட்ஸ் அல்ல, மனச்சோர்வு (Depression) என்பது அமெரிக்க உளவியல்'[47] என்ற புள்ளிவிபரத்தைக் கூறி, மனச்சோர்வைத் தீர்க்க வழியும் கூறிச்செல்கிறார். இதனை,

"கடல் அலைகளின் எழுச்சி, வீழ்ச்சியைப் பூமி தாங்கிக்கொள்ள முடியாத மாதிரி, மனசின் எழுச்சி, வீழச்சியை உடம்பு தாங்க முடிவதில்லை. எனவே உடம்பைப் பலப்படுத்தினால் பாதி வெற்றி. வாழ்வின் இயக்கத்தை விளங்கிக் கொண்டால் மீதிவெற்றி"[48]

என்னும் கூற்றினால் அறியலாம்.

மனிதனின் மனச்சிதைவை, பன்முகப் பாங்கான மனநிலை பெற்றுப் பேதுறுதலை எடுத்துக்காட்டும்.

"ஒவ்வொரு முறையும்
ஒவ்வொரு விதமாய்
எனக்கே என் முகமாய்
வேறு வேறுதான்"[49]

என்னும் கவிதையும் இங்குக் குறிப்பிடத்தக்கது.

சபலம்:

'பல குடும்பங்களின் அழிவுக்கு மூல காரணம் பாலியல் எல்லைமீறல்கள்! ஆணும் பெண்ணும் தன்னை, தன் உணர்ச்சி வேகத்தை நிர்வகிக்கத் தெரியாமல் எல்லை மீறும்போது, வேலி தாண்டும் போது குடும்பம் உடைவது தவிர்க்க முடியாதது. தியான வகுப்புகள், உணவுப் பழக்கங்கள், மனத்தை நிர்ணயிக்கும் பயிற்சி முறைகள் மூலம் பாலியல் வேலி மீறவைத் தடுத்தாலேயே குடும்பங்கள் சீரடையும்.[50] "படித்த சிந்திக்கிற அறிவாளியாக அறிவிக்கப்பட்ட ஆண்கள் கூட தயக்கம் இன்றிப் பெண்களுக்கு அநீதி இழைக்கிறார்கள்; தெருநாய் போல் நடந்து கொள்கிறார்கள்."[51] இக்கருத்துகள் சபலத்தின் கோரமுகத்தைப் படம்பிடித்துக்காட்டுகின்றன.

> "அழகான மனைவி இருக்கிற போதே அடுத்தவன் மனைவியிடம் வழிகிற அசடுகள். சாப்பாட்டில் மிளகாய் எண்ணெய் வேண்டாம் என்று மருத்துவர் தடுத்தாலும் வீட்டில் ஏமாற்றிவிட்டுக் கடையில் வாங்கித் தின்னும் கடையர்கள், சிகரெட் குடிக்கலாமா? வேண்டாமா? மது அருந்தலாமா, வேண்டாமா? முறையற்ற செக்ஸ் சுகம் தேடலாமா, கூடாதா? என்று சபலப்படுகிறவர்கள் நிம்மதி, நிதானம் இழந்து விடுகிறார்கள். அவர்கள் கண்களில் ஓர் ஏக்க நெருப்பு இருக்கும். குழப்பம் நெஞ்சில் குடியிருக்கும்"[52]

என்னும் கருத்து சபலமடைபவர்களின் உடல்நிலை எத்தகைய தன்மையைப் பெறும் என்பதைப் புலப்படுத்துகிறது. இக்கருத்தாக்கங்களின் வாயிலாக எழும் கோபத்தை வெற்றி கொள்ள வேண்டுமோ, அதே போல்

சபலத்தையும் வெற்றி கொள்ள வேண்டும் என்பதையே படைப்பாசிரியர் வலியுறுத்தியிருப்பதைக் காணமுடிகின்றது.

**தவம்:**

தவம் என்பதற்கு அபிராமி பட்டரின் பாடலை எடுத்துக்காட்டி விளக்கம் தருகிறார் ஆசிரியர். "சின்னஞ்சிறிய இடை. அதில் மின்னும் சிவப்புப் பட்டாடை. மலை போல் பெரிய முலை. முலையில் கிடக்கும் முத்து மாலை. பிச்சி மலர் மொய்த்த கரிய குழல். கண்கள் மூன்று. இவற்றை மனத்தில் தியானித்து, உலகிலிருந்து மனம் விலகித் தனிமையானால் அதைவிட வேறு தவம் ஒன்றும் இல்லை என்னும் பொருள்படும்,

> "சின்னஞ் சிறிய மருங்கினில் சாத்திய செய்ய பட்டும்
> பென்னம் பெரிய முலையும் முத்தாரமும் பிச்சி மொய்த்த
> கன்னம் கரிய குழலும் கண் மூன்று கருத்தில் வைத்துத்
> தன்னம் தனி இருப்பார்க்கு இதுபோலும் தவம் வேறு இல்லையே"

என்ற அபிராமி பட்டரின் பாடலை[53] எடுத்துக்காட்டி, இறைவனைத் தியானித்து உலகியலிலிருந்து மனம் விடுபடும் தனிமை நிலையைத் தவம் என்கிறார். அன்னையை, அடியார்களைச் சென்று சந்திக்க வேண்டும். அவளது வழிபாட்டுக்குரிய ஆகம நெறிகளையே அடியார்களுடன் பேசுதல் வேண்டும். இதுதான் தவம் செய்யும் வழி என்று அபிராமி பட்டர் கூறுவதை[54] எடுத்துக்காட்டுகிறார். 'சிவத்தைப் பேணின் தவத்திற்கு அழகு'[55] என்பதும் இங்குச் சுட்டத்தக்கது.

> ‘தபஸ் என்பது வடமொழிச்சொல். உண்மையில் பக்குவப்படுத்துதல் என்பது இதன் பொருள். பக்குவமற்ற உயிரைப் பக்குவப்படுத்தும் முயற்சியே தவம்”[56]

என்னும் கருத்தும் இங்குச் சிந்திக்கத்தக்கது. இவ்வாறு பக்குவப்படும்பொழுது இடையூறாக அமையும் கோபத்தை ஒழிக்கவேண்டும் என்றும் அதற்குத் தவத்தைப் பேண வேண்டும் என்றும் சுட்டிச்செல்வது சிறப்பிற்குரியது.

**தவறுகளைத் திருத்துதல்:**

செத்தபிறகு தவறுகளைத் திருத்திக் கொள்ள முடியாது. அடுத்த பிறவியில் அதற்கான தண்டனை தான் கிடைக்குமே ஒழிய, தவறைத் திருத்திக் கொள்ள வழிகிடையாது. எனவே, இந்தப் பிறவியின் தவறை இந்தப் பிறவியிலேயே திருத்துவது அவசியம். காற்றுள்ள போதே தூற்றிக்கொள் என்ற பழமொழிக்குப் படைப்பாசிரியர் புதுவிளக்கம் தருகிறார்.

> “விவசாயிகள் காற்றடிக்கும் போதே நெல்மணிகளை மேலிருந்து கீழே கொட்ட, தூசு, தும்பு போன்ற குப்பைகளைக் காற்று அடித்துச் செல்லும். அது வெளிப்பொருள். ‘உன் மூச்சுக்காற்று உள்ளபோதே உன் தவறுகளைத் தூற்று என்பது உட்பொருள்’ ”[57]

என்னும் கூற்றின் மூலம், காற்றுள்ள போது குப்பைகளை நீக்குவதுபோல மூச்சுக்காற்று உள்ளபோதே தவறுகளை உணர்ந்து திருத்தவேண்டும் என்பதை வலியுறுத்திச் செல்கிறார். மேலும் இதற்கு எடுத்துக்காட்டாக,

முரடராக இருந்த துளசிதாஸ், மனைவியால் தவறுகளைத் திருத்தி ராமபக்தனான கதையைச்[58] சுட்டிச்செல்கிறார்.

**கட்டுப்பாடு:**

வாழ்க்கையில் எல்லாவற்றிலும் கட்டுப்பாடு காப்பவர்களே முழு வெற்றிபெற முடியும். கட்டுப்பாடுகளை மீறுபவர்கள் வாழ்வில் உயரமுடியாது.

> "கட்டுப்பாடுகளை வெறுப்பவர்கள் மனித குலத்தின் புற்றுநோய். நியதிகளுக்குக் கட்டுப்பட மறுக்கிற மனிதர்கள் மனித குலத்தின் பக்கவாதம்"[59]

என்று கூறிக் கட்டுப்பாடு காப்பதே சிறந்த வாழ்வியல் முறை என்பதைப் புலப்படுத்துகிறார்.

**எண்ணம்:**

எண்ணம், சொல், செயல் ஆகிய மூன்றும் அதிக வேறுபாடின்றிக் காணப்பெறுதல் வேண்டும். ஆனால் அந்த எண்ணமும் நல்ல எண்ணமாக இருத்தல் வேண்டும். ஏனெனில்,

> "எண்ணங்கள் வலிமை மிகுந்தவை… எண்ணங்களே
> செயல்களாகப் பரிணமிக்கின்றன"[60]

என்று எண்ணத்தின் ஆற்றலைப்பதிவு செய்துள்ளார் எம்.எஸ்.உதய மூர்த்தி. இக்கருத்தை அடியொற்றியே படைப்பாசிரியர் சுகி.சிவத்தின்,

> “எண்ணங்கள்தான் வாழ்வை நிர்ணயிக்கின்றன. உயர வேண்டும், உயர வேண்டும் என்கிற எண்ணம் உள்ளவர்கள் உயர்வது நிச்சயம்”[61]

என்னும் கருத்தும் அமைகிறது. “ஒரு சிலந்தியை வீட்டில் நீங்கள் அனுமதித்தால் உங்களைக் கேட்காமலேயே ஒரு செத்த ஈயைத் தன் வலைக்குள் அது சேர்த்துக் கொள்ளும். அந்த மாதிரி ஒரு கெட்ட எண்ணத்தை மூளையில் பதியவிட்டால், அது ஒரு மட்டமான எண்ணத்தைப் பக்கத் துணையாக வைத்துக் கொள்ளும்”[62] என்னும் கருத்தின் மூலம், ஆசிரியர் எண்ணத்தூய்மையை வலியுறுத்துவதை அறியவியலுகிறது.

> “எண்ணங்கள் படருகிற கீரை மாதிரி. ஒன்றிலிருந்து ஒன்று என நூற்றுக்கணக்காகக் கிளை விட்டுப் படர்ந்து கொண்டே இருக்கும்”[63]

என்றும், ‘மூச்சு ஒழுங்கானால் எண்ணம் ஒழுங்காகி ஒரு நிலைப்படும்’[64] என்றும் கூறுவது அலைபாயும் எண்ணத்திற்கு அணைபோடும் வழியையும் காட்டுவதாக அமைகின்றது.

சிலர் எந்த முடிவையம் தாமாக எடுக்க மாட்டார்கள். பிறரிடம் ஆலோசனை பெற்றே செயல்படுவார்கள். இவர்களைக் குழப்பவாதிகள் என்பர் உளவியலார்.

> "பிறருடைய கருத்துக்களைக் கேளுங்கள். பரிசீலனை செய்யுங்கள். பிறர் அபிப்பிராயங்களை அறிந்து கொள்ளுங்கள். ஆனால் அவைதான் தீர்ப்பு என்று போய்விடாதீர்கள்"[65]

என்று இன்றைய தலைமுறையினருக்கு உளவியல் அடிப்படையிலான ஆலோசனை வழங்கவும் தவறவில்லை. மேலும் நூல்கள் பலவற்றிலும் ஆங்காங்கே குழந்தை வளர்ப்புமுறை, மாணவர்கள் கற்கும்முறை, இளைஞர்களின் பொறுப்புணர்வு, பெற்றோர் கவனிக்க வேண்டியவை, முதியோரின் மனநிலை, பொறுப்பில் உள்ளங்களின் கடமை உணர்வு, வேலையில்லாமல் தளரும் உள்ளங்கள். தோல்வியைத் தழுவித் துவள்பவர்கள், கடந்தகால வாழ்வில் கரைந்து கொண்டிருப்பவர்கள், எதிர்காலக் கனவில் தூங்குபவர்கள் எனப் பலரையும் விழிப்புணர்வு கொள்ளச் செய்யும் வகையில் உளவியல் ஆலோசனைகளை வழங்கியிருப்பதும் படைப்பாசிரியரின் தனிச்சிறப்பாகிறது. உளவியல் நோக்குடன் படைப்பாசிரியர் வெளிப்படுத்தியிருக்கும் கருத்துக்களின் மூலம் ஆசிரியரது உளநூல் அறிவு தெற்றெனப் பளிச்சிடுகிறது என்று கூறுவது பொருத்தமுடையதாகிறது.

உள்ளத்தின் கோபங்களையும் கோணங்களையம் உள்ளடக்கிய உளவியலைப்போன்றே, உள்ளத்தை அடிப்படையாகக் கொண்டு எழும் மனிதநேயச் சிந்தனைகளும் இங்குக் குறிக்கத்தக்கன.

**மனிதம் - சொல் விளக்கம்**

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றான ‘இனியவை நாற்பது’ முதன் முதலாக மனிதன் என்ற சொல்லைக் கையாண்டிருக்கிறது. சான்றாக,

“நில்லாத காட்சி நிறையில் மனிதரைப்

புல்லா விடுதல் இனிது”[66]

என்னும் பகுதியைக் குறிப்பிடலாம்.

“மனம் என்ற சொல்லின் அடியாகவே மனிதன் என்ற சொல்லும் தோன்றியிருக்க வேண்டும். மனத்தை உடையவன் ‘மனத்தன்’ என்றிருந்து பின்பு மனிதன் என்றாகியிருக்கலாம். அதுவே முதல் நீண்டு மானிடம் என்றும் ஆகியிருத்தல் வேண்டும்”[67] என்னும் கூற்று மனிதன் என்ற சொல்லின் தோற்றுவாயைத் தெளிவுபடுத்துகிறது.

ஆங்கிலச் சொல்லான ‘Humanism’ என்பதன் ஈற்றில் உள்ள ‘ism’ என்ற விகுதிக்கேற்ப ‘அம்’ என்ற விகுதியைச் சேர்த்து ‘மனிதம்’ என்ற நிலையில் இச்சொல் கையாளப்பட்டுள்ளது என்று கூறலாம். திரு.வி.கல்யாண சுந்தரமும், க.த.திருநாவுக்கரசும் Humanism என்ற ஆங்கிலச் சொல்லிற்கு இணையாக ‘மனிதம்’ என்ற சொல்லைக் கையாண்டுள்ளனர். எனவே, மனிதம் என்ற சொல்லே Humanism என்பதற்கு இணையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

கிரேக்க, உரோமானிய இலக்கியத்தின் புதிய மறுமலர்ச்சிக்குக் காரணம் கலை இலக்கியத் தொடர்புடைய புதிய மறுமலர்ச்சியான

‘மனிதம்’ என்றே கூறவேண்டும். மறுமலர்ச்சி என்பது உண்மையில் இங்கு மறுமலர்ச்சிக்காகவே ஏற்பட்டது.

மனிதன் சுயமாகத் தன் சிந்தனையில் மனதைச் செலுத்தி நல்லது தீயது போன்றவற்றைத் தானே நிருணயம் செய்தலே மனிதமாகும். மதத்தின் உதவியோ, மற்றொன்றின் தேவையோ இன்றித் தாமே தனித்துச் சுதந்திரமாகப் பொறுப்புணர்ச்சியுடன் சிந்தித்து மனித மதிப்பீடுகளை வளர்த்தனர். அதனால் இந்தப் பழைமையான கிரேக்க, உரோம இலக்கியங்களை மனிதப்பண்புகளுக்கு இடம் தந்த ஒரு மறுமலர்ச்சியாகவே கருதினர்.

பதினைந்தாம் நூற்றாண்டில் வழங்கிவந்த ‘Humanista’ என்ற இத்தாலி மொழிச் சொல்லிருந்து ‘Humanism’ என்னும் ஆங்கிலச் சொல் உருவாக்கப்பட்டது. மனிதன் தொடர்புடைய செய்திகளைக் கற்றுத்தருகின்ற ஆசிரியனை ‘ஹ்யூமனிஸ்டா’ என்றனர். ‘மனிதம்’ என்பது பழைமையான இன்றைய இருபதாம் நூற்றாண்டில் புதுமையுடையதாய் விரிந்த பொருளில் பயன்படுகிறது. மனிதம் எதையும் சார்ந்திராது. தனித்துச் சுதந்திரத்துடன் கல்வியறிவோடு செயல்படுவது என்று ஆங்கில அகராதி விளக்கம் தந்துள்ளது[18] இங்குக் குறிப்பிடத்தக்கது. ஆங்கிலம்-தமிழ் அகராதியில்,

“மனித இனநலக் கோட்பாடு, மனித உலக வாழ்க்கை இயல், மனிதப் பொதுமை நல இயல், மனித இனப் பொதுச் சமய அமைதி, மனித இன இயல் பண்பாய்வுத் துறை, பண்டை கிரேக்க, உரோமக்கலை இலக்கியப் பண்பு”[69] என்ற விளக்கம் காணப்படுகிறது. மேலும் ஆங்கிலத்

தமிழ் கையகராதியில் கா.அப்பாத்துரை, "மனித்தன்மை மனிதப்பற்றுக் கோட்பாடு"[70] என்று குறிப்பிட்டுள்ளார்.

**மனிதநேயம் - சொற்பொருள் விளக்கம்:**

மனிதம், மனிதநேயம் என்னும் இருசொற்களும் ஒரே பொருளுடையன. மனித மனத்தில் பொதிந்துள்ள நற்பண்புகள் பிற உயிர்களிடம் வெளிப்படும்போது அது நேயமாக அமைகிறது.

"மனிதநேயம் என்பது மனத்தின் தன்மையைக் குறிப்பதாகும். அது மனிதனுக்கும் அவனுடைய நடவடிக்கைகள், செய்திகள், பேரார்வம், நலன்கள் ஆகியவற்றுக்கும் முதன்மை முக்கியத்துவம் அளிப்பதாகும்"[71] என்று பிரிட்டானிகா கலைக்களஞ்சியம் மனிதநேயம் என்பதற்கு விளக்கந்தருகிறது. மனித உணர்வுகளை, மனிதப்பண்புகளை மீட்டெடுக்கும் விதமாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டில் மனிதநேயவாதம் தொடங்குகிறது.

"மனிதநேயம் என்பது மனித வாழ்வின் மாண்புகளை உணரவும் மனித வாழ்வின் இன்பங்களை நுகரவும் முடியாத வண்ணம் தடுக்கப்பட்டு இழிவுக்கும் பழிக்கும் ஆளாக்கப்பட்டுக் கிடந்த மனிதனை மீட்டெடுக்கவும் மாண்புறச் செய்யவும் வந்த உயரிய கோட்பாடாகும்"[72] என்னும் கருத்து மனிதநேயத்தைச் சுட்டுகிறது.

"மனிதநேயம் என்பது வெறும் மனிதாபிமானம் மட்டுமன்று; மனிதனுடைய எல்லையில்லாத, எல்லை காட்ட இயலாத முழுமையான அறிவாற்றலும் ஆன்மிகச் செல்வமும் மனிதனுடைய பண்புகளும் ஆகிய இவையனைத்தையும் தன்னுட்கொண்டது"[73] என்னும் கருத்தும் இங்குச்

சிந்திக்கத்தக்கதாகிறது. “மனிதநேயம் என்றால் என்ன? மனிதர் அனைவரும் ஒரே இனம் என்பதாலேயே மனிதரை மனிதர் நேசித்தல். இதுதான் மனிதநேயம்”[73] என்று படைப்பாசிரியர் சுகி.சிவம் தரும் விளக்கமும் சுட்டத்தக்கது.

அடிப்படையான மனித உறவு, உணர்வு சார்ந்த மனிதநேயம் என்பது காலம், இடம், பின்னனிகளில் மனிதன் எப்படி எப்படி இயங்கவேண்டும் என்பதற்கான வரையறைகளைக் குறித்தது. அதாவது தமிழ் வரலாற்றில் சங்க காலத் தமிழர்கள் எந்த எந்த இலக்குகளை முன் வைத்துத் தங்கள் வாழ்க்கையை நடத்தினார்களோ அவைகைளப் பின்புலமாகக் கொண்டு அவர்கள் நடத்திவைத்த நாகரிகமான செயல்களைக் குறிக்கிறது”[74] என்று சாலனி இளந்திரையன் விளக்கம் அளிக்கிறார். இக்கருத்துகளின் அடிப்படையில் மனிதநேயம் என்பது அன்பை, இரக்கத்தை மற்றோர் உயிரிடம் வெளிப்படுத்தும் செயற்பாடு என்று பொருள் கொள்வது பொருத்தமுடையதாக அமையும். மனிதநேயம் கொண்ட மனிதப்பிறவியின் நோக்கம் ஈண்டுச் சிந்திக்கத்தக்கது.

**மனிதப்பிறவியின் நோக்கம்**

மனித உருவம், உடல்பெற்ற அளவில் ஒருவனது பிறவி நோக்கம் நிறைவேறிவிட்டது. மனிதப்பிறவியின் நோக்கம் உயிரை அறியாமை என்னும் கட்டினின்றும் விடுதலை செய்து அதை அருள்நெறியில் நிறுத்தி முழுமையான அறிவுநிலை என்னும் கடவுள் நிலையை அதற்குக் கூட்டுதல் ஆகும். இதுவே வீடுபேறு என்று அழைக்கப்படும். உலகத்தில் உள்ள எல்லா உயிர்களும் இயற்கையோடு இயைந்த வாழ்க்கையில்

ஈடுபட வேண்டும். அப்போது தான் இயற்கையாகிய தாய் அறிவை ஈந்து அறியாமையை முற்றும் போக்குவாள். பிறவியின் நோக்கத்தை நிறைவேற்றுவதற்கு உடலோம்பல் மிகவும் இன்றியமையாதது.

இயற்கையானது தன்னலம் கருதாத பிற உயிர்கள் மீது அருளைச் செலுத்துவதுபோல இயற்கையோடு இயைந்து வாழும் மனிதனும் தனக்கென வாழாது பிறர்க்கென வாழவேண்டும். அதுவே மனிதனுக்குரிய அருள்நெறியை விரும்பி அதைப் பெறுவதே பிறவியின் நோக்கமாகும்.

கல்வி கேள்விகளில் அறிவு பெற்றிருந்தும் எல்லாவற்றிற்கும் மேலாகப் பேசப்படும் மனிதப் பண்பு இல்லையென்றால் அனைத்துமே உயிரற்ற உடல்போல் ஆகிவிடும். மனிதப்பண்பு உலகத்தோரால் பாராட்டப்படும்.

மனிதநேயத்தை வெளிப்படுத்தும் செயல்களாக அன்புடைமை, நட்பு, உயிரிரக்கம், விருந்தோம்பல், செய்ந்நன்றியறிதல், பகைவர்க்கருளுதல் பொதுவுடைமை எனப் பலவும் குறிக்கப்பெறுகின்றன. இவற்றை வெளிப்படுத்தும் சூழல்களுள் முதன்மையானதாக அமைவது இல்லறமாகும்.

**இல்லறத்தின் இலக்கணம்**

கல்வியும் தாய் தந்தையர் வழிபாடும் மனிதன் பிறர் பொருட்டு வாழ்தல் வேண்டும் என்னும் பெருவாழ்விற்குக் கடைக்கால் போன்றன. அக்கால்கள் மீது இல்லறம் என்னும் நிலையம் எழுப்பப்படல் வேண்டும். அந்நிலையத்தில் அன்பு என்னும் தெய்வம் கோயில் கொள்ளும். அன்பு அரும்புதற்குரிய இடம் இல்வாழ்க்கையாகும். அன்பு வளர்வதற்கு

நிலைக்களனாய் உள்ள இல்வாழ்க்கை உலகில் இனிது நடைபெறல் வேண்டும் என்னும் அருட்பெருக்கால் இறைவன் உயிர்களை ஆண் பெண் வடிவமாகப் படைத்திருக்கிறான். ஆணும் பெண்ணும் கூடிக்குலாவி அன்புநெறி காணவேண்டும் என்பது இறைவனுடைய படைப்பு நோக்கம். இல்லறம் அன்பு வளர்வதற்குரிய இடமாகும். ஒருவரிடத்துக் கட்டுப்பட்டுக் கிடக்கும் அன்பைப்பிறகு இருவரிடத்தும் பின்னர்ச் சில உயிர்களிடத்தும் முடிவில் எல்லா உயிர்களிடத்தும் பரப்பும் தன்மையுடையது இல்லறமாகும்.

தலைவனும் தலைவியும் தொடங்கிய இல்லறம், மக்கள், சுற்றம் எனப் பல்வேறு உறுப்பினர்களைக் கொண்ட பெரியதொரு அமைப்பாக வளர்ச்சிபெறுகிறது. இவ்வாறு மக்களும் சுற்றமும் புடைசூழ வாழும் தலைவனும் தலைவியும் சிறந்ததை அவர்களுக்குப் பயிற்றுவித்தலே அறமாகும். இதுவே இல்லற வாழ்க்கையின் பயனாகும் என்பதனை,

“காமஞ் சான்ற கடைக்கோட் காலை

ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி

அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்

சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே”[75]

எனத் தொல்காப்பியர் கற்பியலில் வகுத்துரைத்துள்ளார்.

“இல்லற இன்பமும் பயனும் குறைவின்றிக் கண்டபின் இறுதிக்காலத்தில் நம் சொல்லாலும் செயலாலும் இந்தச் சமுதாயத்திற்கு

நற்பணியாற்றிட வேண்டும் என்பதைச் சிறந்தது பயிற்றலாகிய அறம் எடுத்துரைக்கின்றது"[76] என்பர் முத்துலக்குமி.

"காமஞ்சான்ற வாழ்க்கை, அதன் விளைவாகப் பிறந்த மக்கள் உற்றாரும் உறவினருமாகிய நல்லவர்களின் தொடர்புறவு, அதனால் சிறந்தது பயிற்றலாகிய புதிய வினைப்பாடு என்னும் இவைகளில் வளர்த்துக் காட்டப்படுவதுதான் முறையான மனிதநேயம். இரண்டு பேரின் அன்பு இருவருக்கே உரியது போலத் தோன்றி ஒரு சிலருக்கு மட்டும் உரியது போல விரிந்து பிறருக்கு நாம் உதவும் பெருவாழ்வாகப் பின் மலர்வதே இந்த நூற்பாவின் அடிப்படைக்கருத்து. இரண்டே இரண்டு பேருக்காக வாழத் தொடங்கியவர்கள் உலகத்து எல்லோருக்குமாக வாழவேண்டும் என்னும் கோட்பாட்டை இதன் மூலம் வாழ்க்கை இலக்கணமாக வகுத்துத் தருகிறது தொல்காப்பியம்"[77] என்பர் சாலினி இளந்திரையன்.

இத்தரவுகளின் அடிப்படையில் நோக்குமிடத்து இல்லறப்பணியோடு சமுதாயப் பணியையும் இணைத்து ஆற்றுவதே இல்லறத்தின் இலக்கணம் என்ற கருத்துப் புலனாகிறது. மேலும் தன்பெண்டு, தன்பிள்ளை, தன் வீடு என்ற குறுகிய வட்டத்தோடு நில்லாமல் எல்லோருக்குமாக வாழவேண்டும் என்ற மனிதநேயத்தைப் பின்பற்றுவதே வாழ்க்கை இலக்கணம் என்பதும் சுட்டத்தக்கதாகிறது. மனிதநேயச் செயல்களுள் தியாகம் என்பதும் குறிக்கத்தக்கது.

**தியாகம்**

இல்லறத்தின் உயிர்நிலை தியாகத்தில் பொருந்தியிருக்கிறது எனலாம். தியாமில்லாத இல்லறம் இல்லறமாகாது. தியாகம் முதிர முதிர அன்பு பெருகிப் பெருகிப் பொங்கும். தன்னலத்தில் அன்பு அருள் இல்லாததால் இல்லறத்திற்கு இன்றியமையாதது தியாகம். ஒருவரது ஆத்ம சக்தியை ஒளிரச் செய்வது தியாகம்தான். தனக்குள்ள எல்லாவற்றையும் மகிழ்ச்சியோடு பிறர்க்கு அளிக்கும் மனமுடைமை தியாகத்தின் இயல்பாகும்.

மனிதன் தன் அடிமனத்தே தோன்றும் அன்பின் வெளிப்பாடுகளை பாசம், பற்று, கருணை, கொடை, பகிர்வு, தியாகம் போன்றவற்றைப் பிற உயிர்களோடும் பிற உயிரினங்களோடும் பகிர்ந்து கொள்கின்றான். இத்தகைய சூழலில் மனிதநேயம் தன்னைத் தான் நேசிப்பதுபோல் பிறரையும் பிற உயிரினங்களையும் நேசித்தல் என்னும் கோட்பாட்டைக் கொண்டதாக அமைகிறது. எனவே தான் மனிதநேயச் செயல்பாடுகளில் தியாகம் முதன்மையிடம் பெறுகிறது. இக்கருத்திற்கு அரண் சேர்க்கும் வகையில், ‘சாதி சமய வேறுபாடுகளைக் கடந்து விருப்பு வெறுப்புகளைப் புறந்தள்ளி ஏற்றத்தாழ்வுகளைக் கருத்தில் கொள்ளாது ஆண், பெண், நண்பன்-பகைவன், வேண்டியவர், வேண்டாதவர், உயர்திணை, அ.்.றிணை என எவ்வித வேறுபாடுகளையும் மனத்தில் கொள்ளாது செயல்படும் மனிதநேய உணர்வுகளில், செயல்களில் முதன்மை பெறுவது தியாகம்”[78] என்னும் கருத்து அமைகிறது.

பொதுவாகத் தியாகம் என்பது பொருள் தியாகம், பதவித்தியாகம் வாழ்க்கைத்தியாகம், உயிர்த்தியாகம் என நான்காகப் பகுக்கப்படுகிறது.

**பொருள் தியாகம்**

ஒருவர் தனக்குரிய பொருளைத் தனக்கெனக் கொள்ளாது தன் நலன் கருதாமல், பிறிதொருவருக்கு முற்றிலுமாகக் கொடுப்பது பொருள் தியாகமாகும்.

"மன்னுக பெரும நீயே தொன்னிலைப்

பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட

சிறியிலை நெல்லித் தீங்கனி குறியா

தாத னின்கைத் தடக்கிச்

சாத னீங்க வெமக்கீந் தனையே"[79]

என்னும் பாடல் அதியமான் நீண்டநாள் வாழவைக்கும் நெல்லிக்கனியினை ஔவைக்குக் கொடுத்ததைக் கூறுகிறது. அந்த நெல்லிக் கனியினைத் தான் உண்டால் நீண்டநாள் வாழலாம் என்பதை நன்கு அறிந்திருந்தும் அதனைத் தான் உண்ணாமல் ஔவைக்குக் கொடுத்தமை மனிதநேயத்தின் உச்சத்தில் பிறந்த செயலாகவும் பொருள் தியாகமாகவும் சிறப்புப்பெறுகிறது.

**பதவித்தியாகம்**

பதவித் தியாகம் என்பது ஒருவர் தனக்குரிய பதவியினை, தனக்குக் கிடைக்கவிருக்கும் பதவியினை எந்த எதிர்பார்ப்புமின்றித் தனது

உள்ளுணர்வின் தூண்டுதலக்கேற்ப மகிழ்வுடன் பிறிதொருவருக்குத் தானாகவே கொடுப்பதாகும்.

“குணவாயிற் கோட்டத் தரசுதுறந் திருந்த

குடகோச் சேரல் இளங்கோ வடிகட்கு”[80]

என்னும் சிலப்பதிகாரப் பதிகத்தின் வழி இளங்கோவடிகள் அரசப் பதவியினைத் தியாகம் செய்து துறவறம் பூண்டமை தெரியவருகிறது. இச்செய்தி பதவித்தியாகத்திற்குச் சான்றாக அமைகிறது.

**வாழ்க்கைத் தியாகம்**

சமுதாயக் கோட்பாடுகளுக்கு உட்பட்ட முறையான வாழ்க்கை வாழாது. பிறர் நலத்திற்காக அதனை இழப்பது ஒரு தியாகச் செயலாக மனிதர்களிடம் காணப்படுகிறது. காரைக்காலம்மை துறவறம் பூண்டமை வாழ்க்கைத் தியாகத்திற்குச் சான்றாகும்.

**உயிர்த்தியாகம்:**

உயிர்த்தியாகம் தற்சார்பு, பிறர்சார்பு என இருநிலைகளில் அமைகிறது. தன் நிலையினின்று தாழாமல் தாழ்வு வந்துற்றால் தன் உயிர் நீக்கும் செயல் தற்சார்பு உயிர்த்தியாகமாகும்.

“பொன்செய் கொல்லன் தன்சொற் கேட்ட

யானோ அரசன் யானே கள்வன்

மன்பதை காக்கும் தென்புலங் காவல்

என்முதற் பிழைத்தது கெடுகவென் ஆயுளென

மன்னவன் மயங்கிவீழ்ந் தனனே”[81]

என்று சிலம்பு கூறும் பாண்டியன் நெடுஞ்செழியனின் செயல் தற்சார்பு உயிர்த்தியாகமாகும்.

சமுதாய நலனுக்காக, நாட்டு நலனுக்காகத் தன் உயிரையே கொடுக்க முன்வருதல் பிறர்சார்பு உயிர்த்தியாகமாகும்.

“பாடி நின்றனெ னாகக் கொன்னே
பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தலென்
நாடிழந் ததனினு நனியின் னாதென
வாடந் தனனே தலையெனக் கீயத்
தன்னிற் சிறந்தது பிறிதொன் றின்மையின்
ஆடுமலி யுவகையொடு வருதல்
ஓடாப் பூட்கைநின் கிழமையோற் கண்டே”[82]

என்னும் புறப்பாடலை இதற்குச் சான்றாகக் குறிப்பிடலாம். இரவலர்க்கு இல்லை என்னாது பரிசில் கொடுத்து வந்த தன்னிடம் கொடுக்கப் பொருள், நாடு ஒன்றும் இல்லாத போது, பரிசில் வேண்டிய புலவனிடம் தன் தலையினைக் கொண்டு வருபவர்க்குப் பரிசு வழங்கப்படும் என அறிவித்த அரசனிடம் தன் தலையினை எடுத்துச் சென்று பரிசு பெறுக எனக் கூறிய குமணனின் செயல் பெரும் தியாகமே. இவ்வாறு மனிதநேயச் செயல்களுள் முதன்மையிடம் பெறும் தியாகச் செயல்கள் பல அக்கால மக்கள் வாழ்க்கையில் நடைபெற்றுள்ளன. தன்னைப்போல் பிறரையும்

நேசிக்கும் மனிதநேயச் செயல்கள் நடைபெறக் காரணம் மனிதன் பிற உயிர்களைச் சார்ந்திருப்பதே ஆகும்.

**உயிர்களைச் சார்ந்திருத்தல்:**

மனிதன் இல்வாழ்க்கையில் ஈடுபட்டு மற்றவரோடும் கூட்டுறவு கொள்ளவேண்டும். ஏனெனில் மனிதன் கலந்துவாழும் இயல்புடையவன்; தனித்து வாழும் இயல்புடையவன் அல்லன். மனிதன் தன்னிடமுள்ள தன்னலம் என்னும் கொடுமையை அகற்றப் பிற மக்களோடு கலந்து பல வழிகளிலும் வாழ்ந்து பின் வருந்துவான். அங்ஙனம் வருந்த அவனுக்குப் பிறர் துன்பத்தை அறியும் உணர்வு பிறக்கும்; அவ்வுணர்வு துன்புறும் பிறர்க்கு அவனாலியன்ற உதவி புரிய அவனைத் தூண்டும். பிறர் துன்பதை உணர்வது தன் துன்பத்தைப் போக்க அடிகோலுவதாகும்.

பிறர் துயரைப் போக்கக் கடமையாற்றுபவன் தன் துயரைப் போக்கிக் கொண்டவன் ஆவான். மனிதனின் துன்பத்தைப் போக்க வல்லது ஒப்புரவு. எவ்வுயிரையும் தன்னுயிரெனக் கொண்டு அவ்வுயிர்கள் நலன் கருதி நாளும் உழைக்கும் ஒருவன் உள்ளத்தில் ஒப்புரவிற்குரிய அன்பாகிய தெய்வம் விளங்கும். அவனே துன்பமறியாத் தூயவன்.

"இன்பமே எந்நாளும் துன்பமில்லை"[83]

என்றார் அப்பர். இன்பத்திற்கு உயிர்களைச் சார்ந்திருத்தல் இன்றியமையாதது. இல்வாழ்க்கையிலிருந்து தொழில் பல புரிந்து அறவழியில் பொருளீட்டி உயிர்ச்சார்பு கொண்டு எல்லா உயிர்களையம் நேசித்து இயன்ற உதவி செய்து வாழும் வாழ்வே மக்கட்குரிய சிறந்த

வாழ்வாகும். இவ்வாறு பலரும் கலந்து ஒருவருக்கொருவர் உதவி வாழ்தலைப் பட்டினப்பாலை எடுத்துக்காட்டுகிறது.

"மொழி பல பெருகிய பழிநீர் தேஎத்துப்
புலம்பெயர் மாக்கள் கலந்து இனிது உறையும்
முட்டாச் சிறப்பின் பட்டினம்"[84]

எனும் பாடல், கரிகாலனின் காவிரிப்பூம்பட்டினத்தைச் சிறப்பிக்கிறது. வெவ்வேறு நாடுகளைச் சேர்ந்த மக்கள், வேறுமொழிகளைப் பேசும் அவர்கள் காவிரிப்பூம்பட்டினத்துத் தமிழ்மக்கள் மத்தியில் தனித்து மகிழ்ச்சியோடு வாழ்ந்தார்கள் என்பதைப் பற்றியது இப்பாட்டு. தங்களோடு வந்துசேர்ந்த அயலவர்கள் தங்களோடு 'கலந்து இனிது உறையும்' சீரிய வாழ்வுக்குச் சங்ககாலத் தமிழர்கள் தளம் அமைத்துக் கொடுத்திருப்பது இதன்மூலம் புலனாகிறது. ஓர் இனத்தவரின் பழக்கவழக்கப் பண்பாடுகளை மதித்து அவர்களை அரவணைத்துச் செல்லும் இத்தகைய மனிதநேயச் சீர்மைக்கு மக்களின் உயிர்ச்சார்பே பெரிதும் காரணமெனலாம். மனித இயல்பும் இங்கு எண்ணற்குரியது.

**மனித இயல்பு**

மனிதன் என்பவன் உடல் மட்டுமல்லாமல் சிறந்த உயிராகத் திகழ்கிறான். அவன் தன்னை உயிரென்று நினைத்தால்தான், அவன் இயல்பாகிய அகிம்சை என்ற பண்பு விளங்கும். அகிம்சா தர்மம் என்பது மனிதனுக்குரிய இயற்கை அறம். இதனைத்தான்

"தன்னுயிர் தான்பரிந்து ஓம்புமாறு போல

மன்னுயிற் வைகலும் ஓம்பி வாழுமேல்"[85]

என்று கூறிச் செல்கிறார் திருத்தக்கத் தேவர்.

உலகில் தோன்றிய மனிதர்கள் பிறப்பு முதல் இறப்புவரை பல்றேபட்ட குணநலன்களை உடையவராக வாழ்கின்றனர். இச்சூழலில், சாதி, மதம், நாடு, இனம் என்பதைக் கடந்து உலகளாவிய மனித நேயத்தைப் போற்றுவதே மனித இயல்பாகக் கருதப்படுகிறது. இக்கருத்தை,

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா

செய்தொழில் வேற்றுமை யான்"[86]

என்று வள்ளுவரும் கூறியிருப்பதும் ஈண்டு மனங்கொளத்தக்கது.

**மனிதநேயம் மலரும் முறை:**

ஒரு மனிதன் பிறக்கும்பொழுது கள்ளங்கபடமற்ற உள்ளத்துடன் குழந்தையாக இருக்கின்றான். அதன் பின்பு வளர்கின்ற சூழலுக்கேற்ப மனிதநேயத்துடனோ, மனிதநேயமின்றியோ உருவாகின்றான். ஒரு மனிதனை மனிதநேயமிக்கச் சிறந்த குடிமகனாக வளரச்செய்யும் முறையைப் படைப்பாசிரியர் சுகி.சிவம், தம் படைப்புகளில் தெளிவாகப் படம்பிடித்துக்காட்டியுள்ளார். மனிதனுள் உறைந்திருக்கும் மனிதநேயப் பண்பை எழுப்பிச் செயல்பட வைப்பதற்கு அவனுடைய உள்ளத்தில் ஊற்றெடுக்கும் அன்பே அடிப்படையாகிறது. எனவே தான், இறைவன்

சிவபெருமான் மீது கண்ணப்பர் கொண்ட அன்பைச் சான்றுகாட்டி மனிதநேயம் மலரும் முறையை விவரித்துச் செல்கிறார்.

திருக்காளத்திநாதர் மீது கண்ணப்பர் கொண்ட அன்பு, எல்லையற்றது; முடிவிலா இன்பத்தைத் தருவது. எலும்பும் உருகத்தக்க வகையிலான அன்பு கொண்ட கண்ணப்பரின் திறத்தைக் கூறப்புகுந்த சேக்கிழார்,

“முன்புசெய் தவத்தின் ஈட்டம்

முடிவிலா இன்ப மான

அன்பினை எடுத்துக் காட்ட

அளவிலா ஆர்வம் பொங்கி

மன்பெருங் காதல் கூர

வள்ளலார் மலையை நோக்கி

என்புநெக்கு உருகி உள்ளத்து

எழுபெருவேட்கை யோடும்”[87]

திருக்காளத்திமலை நோக்கிக் கண்ணப்பர் சென்றார் எனக் குறிப்பிடுவது ஈண்டு நினைவுகூரத்தக்கது. மேலும்,

“இவர்தமைக் கண்டே னுக்குத்

தனியராய் இருந்தார் என்னே

இவர் தமக்கு அமுது செய்ய

இறைச்சியும் இடுவார் இல்லை

இவர் தமைப் பிரிய ஒண்ணாது

என் செய்கேன் இனியான் சால

இவர் தமக்கு இறைச்சி கொண்டிங்கு

எய்தவும் வேண்டும் என்று”[88]

என்ற பாடலில், குழந்தையைத் தனியே விட்டுச் செல்லும் தாயின் தவிப்பைக் கண்ணப்பர் உருவில் வெளிப்படுத்திக் காட்டியுள்ளார் சேக்கிழார்.

இத்தாயன்பைத் தான் படைப்பாசிரியர் சுகி.சிவம்,

“கோவிலுக்குள் இருந்து சிவலிங்க மூர்த்தியை ஆர்வத்துடன், ஆச்சர்யத்துடன் பார்த்தான் திண்ணன். ஓடிப்போய்க் கட்டிப்பிடித்துக் கொண்டு அழுதான். முற்றிய நல்லன்பு வெளிப்பட்டது… காட்டில்

இவர் தனியாக இருக்கிறாரே என்ற அதிசயமான கவலை அவனுக்கு. ‘இவருக்குப் பசிக்குமே’ என்று தாய்மனம் கொண்டு தட்டழிந்தான். கீழே போய் உணவு கொண்டு வர முடிவெடுத்தான்”[89]

என்று பதிவு செய்துள்ளார். மேலும், “தட்சிணேஸ்வரம் காளிகோவில் முன்பு புழு துளைத்துக்கிடந்த பிச்சைக்காரனைக் குளிப்பாட்டிச் சோறு போட்டார் அன்னை தெரசா. தன்னை அலட்சியப்படுத்திய சமூகத்தில் தன்னை அரவணைத்துக் காப்பாற்றிய அன்னை தெரசாவைப் பார்த்து உதடுகள் துடித்தன. “அம்மா, நான் பல நாட்கள் காளி கோவில்

வாசலிலேயே கிடந்திருக்கிறேன். ஆனால் அந்த காளி மாதாவை இன்று தான் நேரில் தரிசிக்கிறேன். நீங்கள் தான் எனக்கு அந்தக் காளி தெய்வம்' என்றான்"[90] என்றும் குறித்துச் செல்வது தாய்ன்பையே வெளிப்படுத்துகிறது. இவ்வாறு அன்பின் மேன்மையை, தூய்மையை உணர்த்தத் தாயன்பைக் குறியீடாக்கி மனிதநேயத்தை மலரச் செய்திருக்கும் படைப்பாசிரியரின் பாங்கு சிறப்பாகச் சுட்டத்தக்கது.

**மனிதநேயக் கூறுகள்**

மனத்தில் எழும் எண்ணமே, சொல்லாக, செயலாக வெளிப்படுகிறது. எனவே, மனிதநேயப் பண்பு செயல் வடிவம் பெற, அது எண்ணமாகப் பதிவாதல் முதல் தேவையாக அமைகிறது.

"ஓர் அழகான கவிதை படித்தேன். 'மரங்கள் சொல்லின
எங்களிடத்திலே இன்னொரு சிலுவையைச் செய்வதற்குப்
போதுமான மரங்கள் இருக்கின்றன. ஆனால் உங்களிடத்தில்
இன்னோர் இயேசுவைச் செய்வதற்குப் போதுமான மனிதர்
இருக்கிறதா?' இந்த மனித சமூகத்திற்குள்ளே இன்னோர்
இயேசுவைச் செய்வதற்குரிய மனிதநேயம் இருக்கிறதா?
என்று அந்தக் கவிஞர் கேட்டார். யோசிக்க வேண்டும்"[91]

என்னும் பகுதி எண்ணப்பதிவிற்குச் சான்றாக அமைகிறது.

**சொல்**

மனிதநேயம் மிகுந்த சொற்கள், துன்பப்படுவோர்க்கு அருமருந்தாக அமையும் என்பதனைப் படைப்பாசிரியர் சுகி.சிவம் சுட்டிச் சொல்கிறார். ஒரே மாதிரியான வேலையைக் காலம் காலமாகச் செய்து வருவதால்

மனம் சலிப்படைந்து புலம்பும் மனிதர்களுக்குப் படைப்பாசிரியர் ஆறுதல் தரும் சொற்களைத் தருகிறார்.

"'தினம் தினம் விதமான மனிதர்களால் தொந்தரவு பட வேண்டியிருக்கிறது' என அலுத்துக்கொள்ளாமல், 'ஆஹா, தினம் தினம் எத்தனையோ மனிதர்களோடு பழகும் வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறதே! வேறு யாருக்கு இம்மாதிரியான பாக்கியம் கிட்டும்' என்னும் ரீதியில் சிந்தித்து, வருகின்ற மனிதர்களின் முகங்களையும் நடையுடை பாவனைகளையும் ரசித்து மகிழலாம். சிரித்து மகிழலாம்"[92]

என்று அமையும் நயமொழிகள், மனம் உடைந்து புலம்புவோருக்குப் படைப்பாசிரியர் கூறும் ஆறுதல் மொழிகளாக அமைகின்றன. இவ்வாறு மனவேதனையால் துயருற்றாரை அவர்களின் மனம் புண்படா வண்ணம் தகுந்த சொற்களால் நல்வழிப்படுத்துவது படைப்பாசிரியரின் மனிதநேயத்தைத் துலக்கிக் காட்டுகின்றது.

**செயல்**

பிற உயிர்களின் துயர் துடைக்கச் செய்யப்படும் அனைத்துச் செயல்களும் மனிதநேயக் கூறுகளுள் ஒன்றான இதில் அடங்கும். வேலை காரணமாக வெளிநாடுகளுக்குச் சென்றிருப்போர் குழந்தையின் புன்னகை, அன்பு முத்தம், மழலைச் சொல் ஆகியவற்றை அனுவிக்காமல் பணத்தைத் தேடி ஓடுபவராக இருக்கிறார்கள். இதையெல்லாம் அனுபவிக்காத அவர்களின் துயரத்தைக் கண்டு மனமிரங்கி,

"குடும்பத்தை விட்டு விட்டு வெளிநாடுகளில் வேலைபார்க்கும் நண்பர்களுக்குச் சொல்லுகிறேன். விரைவில் நீங்கள்

குடும்பத்திற்கு வேண்டாதவராக ஆகிவிடுவீர்கள். நன்றாக நினைவில் வையுங்கள். பிற்காலத்தில் குடும்பம் உங்கள் பணத்தைக் கொண்டாடிய அளவு உங்களைக் கொண்டாடாது"[93]

என்று குறித்துச் செல்வது, படைப்பாசிரியரின் உயிரிரக்கத்தைப் பறைசாற்றுவதாக அமைகிறது.

**அன்பு செலுத்துதல்**

காலத்துக்குக் காலம், நாட்டுக்கு நாடு, இனத்துக்கு இனம், சமயத்துக்குச் சமயம், அறங்கள் பலவாயினும் அவை எல்லாவற்றிற்கும் அடிப்படையாய் அமைவது மாந்த அன்பாகிய மனித நேயமே ஆகும். அது 'எவ்வுயிரும் தம்முயிர் போல்' எண்ணி உள்ளே ஒத்துரிமை உடையவராய் உவக்கின்ற வள்ளலார் வகுத்த அறம். உலகத்தை ஒன்றிணைக்கும் ஒப்பற்ற அறம்.

"அன்புள்ளவர்கள் மனிதர்கள். பிறர் உணர்ச்சிகளை மதிப்பார்கள் உதவுவார்கள். பிறர் அழுதால் தானும் அழுவார்கள்"[94]

என்று அன்பு கொண்ட மனிதனின் தன்மையை எடுத்துரைக்கும் படைப்பாசிரியர்,

"தானும் நன்றாக இருக்கவேண்டும். அவனும் நன்றாக இருக்க வேண்டும், அதே மாதிரி தானும் கஷ்டப்படக் கூடாது, அவனும் கஷ்டப்படக்கூடாது என்கிற எண்ணம் அன்பின் இலக்கணம்"[95]

என்றும் குறிப்பிட்டுள்ளார். இதனை,

“மனிதர்நோக மனிதர் பார்க்கும்

வாழ்க்கை இனி உண்டோ”[96]

என்று பாருக்குப் பறைசாற்றிய பாரதி வரிகளின் எதிரொலியாகக் கொள்ளலாம்.

மனிதர்கள் மிருகங்களையும் நேசிக்க வேண்டும். துன்புறுத்தக் கூடாது என்னும் கருத்தினைப் பல சான்றுகளுடன் விளக்கிச் செல்கிறார் படைப்பாசிரியர். இராமனின் அருள்பார்வை அணிலிற்குக் கிட்டியது. கால் உடைந்த ஆட்டுக் குட்டியைத் தோளில் போட்டுச் சென்றனர் புத்தரும் இயேசுவும்.[97] இப்பகுதி மூலம் மனிதர்களிடம் மட்டுமல்லாமல், அனைத்து உயிரினங்களிடமும் அன்பு செலுத்தும் மனிதநேயத்தைப் படைப்பாசிரியர் வலியுறுத்துவதை அறியவியலுகிறது.

**மக்கள் துயர் தீர்த்தல்**

கடவுள் வழிபாட்டைவிட மனிதன் துயர் துடைத்தலே முதன்மையானது என்று கருதிச்செயல்பட்ட ஞானசம்பந்தரின் வாழ்வில் நடந்த நிகழ்ச்சியைச் சுட்டிக்காட்டி மனிதநேயத்தை வலியுறுத்துகிறார் படைப்பாசிரியர். ஞானசம்பந்தர் கோயிலுக்குப் போனார். அந்த வாசலில் ஒரு பெண் அழுது கொண்டிருந்தார். கணவன் இறந்து கீழே கிடந்தான். கோயிலுக்குள் போய் சாமி கும்பிடவில்லை. முதலில் அந்தப் பெண்ணின் துயரம் என்ன என்று கேட்டு அதைத் தீர்த்துவிட்டுப் பிறகு கோயிலுக்குள்ளே போகிறார்.[98] இவ்வரலாறு மூலம் மக்களின் துயர் தீர்க்க முயலவேண்டும் என்னும் மனிதநேயத்தைச் சொல்லால் வடித்துக் காட்டியுள்ளார்.

“நீங்கள் பொன்னோ, பொருளோ, பாலோ, பழமோ, பிறருக்குக் கொடுக்க முடியவில்லை என்றாலும் பரவாயில்லை. ‘உதவும் கரங்கள்’ சேவை நிறுவனம் அவற்றைத் தாய் தந்தையற்ற பிள்ளைகளுக்குத் தருகிறது. ஆனால் அங்கிருக்கும் நூற்றுக்கணக்கான பிள்ளைகளையும் அங்குள்ள சமூக சேவர்களே எவ்வளவு நேரம் கொஞ்சிக் கொண்டிருக்க முடியும்.. நேரத்தை ஒதுக்கி அந்தக் குழந்தைகளோடு விளையாட, கொஞ்ச முன்வாருங்கள்”[99]

என்று அழைப்பதில், துயருற்றிருப்போருக்கு மனமிரங்கி அத்துயரினை நீக்க வேண்டும் என்ற மனிதநேயச் சிந்தனை வெளிப்படுவது உறுதிப்படுகிறது என்றே கூறலாம்.

**எதிர்பாரா விபத்திலிருந்து காத்தல்**

கண்முன் நிகழும் எதிர்பாரா விபத்தில் பாதிக்கப்பட்டோரை அவர் முன்பின் அறியாதவராக இருப்பினும் மனிதநேயமுடையவர் காப்பாற்றத் துணிவர். ஓர் உயிர் துன்பத்தில் துடிக்கின்ற பொழுது, அதைப்பார்த்து மனிதமனம் இரக்கம் கொள்கிறது. ஏனெனில் தான் பட்ட துன்பத்தை மற்ற உயிர்கள் படக்கூடாது என்ற உயர்ந்த எண்ணம் ஒருபுறம் இருப்பினும், தான்பட்ட இதே வலியும் வேதனையும்தான் பிற உயிர்களும் படுகிறதே என்று நினைக்கின்றபொழுது மனிதமனம் துடிக்கிறது. தம் உயிரையும் பொருட்படுத்தாமல் விபத்தில் துன்பப்படுவோரைக் காக்க முற்படுவர். சேக்கிழார், பெரியபுராணத்தில் படைத்துக் காட்டும் எதிர்பாரா

விபத்திலிருந்து இறைவனின் உயிரைக் காக்கக் கண்ணப்பர் செய்யும் மனிதநேயச் செயலைச் சான்றாகச் சுட்டலாம்.

இறைவன் கண்ணில் குருதி வருவதைக் கண்ட கண்ணப்பர் தன் கண்ணைத் தோண்டி அப்பிக் குருதி வடிவதை நிறுத்துகிறார். இச்செயல் இறைவன் மீது கொண்ட அளவற்ற பக்தியாகக் கருதப்பட்டாலும், எதிர்பாராமல் ஏற்பட்ட பாதிப்பால் துன்புறும் ஓர் உயிருக்குச் செய்யும் உதவியாகக் கொள்வதே பொருத்தமுடையதாகிறது.

"இதற்கினி என்கண் அம்பால்
இடந்து அப்பின் எந்தையார்கண்
அதற்கு இது மருந்தாய்ப் புண்ணிர்
நிற்கவும் அடுக்கும் என்று
மதர்த் தெழும் உள்ளத் தோடு
மகிழ்ந்துமுன் னிருந்து தம்கண்
முதல்சரம் அடுத்து வாங்கி
முதல்வர்தம் கண்ணில் அப்ப"[100]

என்ற பாடலின்வழி ஊனுக்கு ஊன் என்ற அடிப்படையில் தன் கண்ணைத் தோண்டி இறைவன் கண்மீது அப்பிக் குருதியை நிறுத்துவது தன் உயிரையும் பொருட்டாக மதியாமல் செய்த மனிதநேயச் செயலின்பாற்படுவதாகிறது. மனிதநேயச் சிந்தனையை விளக்குவதற்குக் கண்ணப்பர் கதையையே படைப்பாசிரியரும் எடுத்துக் காட்டியுள்ள பாங்கு நோக்குதற்குரியது.

காட்டிற்கு வேட்டையாடச் சென்ற கண்ணப்பர், மலை மீதுள்ள கோயிலில் இருந்த சிவலிங்கத்தின் கண்ணிலிருந்து வடிந்த இரத்தத்தைப் பார்த்த பாத்திரத்தில் இரத்தத்தை நிறுத்துவதற்கு என்ன வழி என்று சிந்தித்துப் பார்த்து முதலுதவியாகப் பச்சிலைச் சாறுகளைக் கண்ணுக்குப் பிழிந்து வைக்கிறார். அதற்கும் இரத்தம் நிற்காததால் தன்னுடைய கண் ஒன்றைச் சிவலிங்கத்திற்கு எடுத்து ஒப்படைக்கிறார். இரத்தத்தைப் பார்த்து கண்ணப்பர் வருத்தமடைவது, மனித மனத்தின் இரக்கத்தை, மனிதநேயத்தைக் காட்டுவதாக உள்ளது.

> “சிவபெருமான் கண்ணில் இருந்து ரத்தம்! பாமர அறிவு படபடத்தது. ‘யார் செய்தார்கள் இந்த அநியாயத்தை?’ என்று சண்டைபோட ஆள் தேடியது. அந்த வேட்டுவப் புத்தி! அடுத்த விநாடி அன்பு விழித்தது. மருந்து தேடி, பச்சிலைகளைப் பறித்துப் பிழிந்து பார்த்தான். ரத்தம் நிற்கவில்லை. ஊனுக்கு ஊன் என்று தன் கண்ணை அம்பால் பெயர்த்து, அந்தக் கண்ணில் அப்பினான். ரத்தம் நின்றது. ஆனந்தக் கூத்தாடினான்!”[101]

என்னும் செய்திகள் மனிதநேயத்தை எடுத்துக்காட்டுவதாக உள்ளன.

## தொகுப்புரை

உள்ளத்தின் கோலத்தையும் கோணத்தையும் எடுத்துக்கூறும் உளவியலின் விளக்கம் வரையறை செய்யப்பட்டுள்ளது. உளவியலின் கூறுகள், வகைகள், அணுகுமுறைகள், உளவியல் திறனாய்வு ஆகியவை குறித்துக் கோடிட்டுக் காட்டப்பட்டுள்ளது.

இலக்கிய ஆய்வில் மிகப் பெரும் தாக்கத்தைச் செலுத்திவரும் பிராய்டிக் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்ட உளவியல் கூறுகள் இலக்கிய ஆய்வில் பெறுமிடம் குறித்து விளக்கப்பட்டுள்ளது. படைப்பாசிரியரின் படைப்புகளில் இடம்பெற்றுள்ள இச்சை, ஈகோ, மனச்சான்று என அமையும் மனப்பகுப்பு, வாழத்தூண்டும் இயல்பூக்கம், செத்து மடிய வேண்டும் என்ற இயல்பூக்கம், வழிபாடு பற்றிய உளவியல், காமம் பற்றிய உளவியல், உணவில் உளவியல், தாழ்வு மனப்பான்மை, மனச்சோர்வு, சபலம், தவம், தவறுகளைத் திருத்துதல், கட்டுப்பாடு, எண்ணம் முதலான உளவியல் கூறுகள் ஆய்வில் கண்டறியப்பட்டுள்ளன.

மனிதன் என்ற சொல்லாட்சியும் அதன் தோற்றுவாயும் ஆய்வில் புலப்படுத்தப்பட்டுள்ளன. மனிதமனத்துள் பொதிந்து கிடக்கும் நற்பண்புகள் பிற உயிர்களிடத்து வெளிப்படும்போது நேயமாக அமையக் கூடிய மனிதநேயம் என்னும் சொல்லுக்குப் பொருள் விளக்கம் ஆய்வில் தரப்பட்டுள்ளது.

மனிதப் பிறவியின் நோக்கம் குறித்தும் விரிவாக விளக்கப்பட்டுள்ளது. இல்லற இன்பம் நுகர்ந்த தலைவனும் தலைவியும், இறுதிக்காலத்தில் மக்களுக்குச் சிறந்ததை எடுத்துரைக்கும் சமுதாயப் பணியும் ஆற்றுவதே இல்லறத்தின் இலக்கணம் என்பதும், அதன் வழிப்புலப்படும் மனித நேயமும் ஆய்வில் வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

இல்லறத்தின் உயிர்நிலையாக அமைவது தியாகம் என்பதும், தியாகத்தின் நான்கு நிலைகளும் கோடிட்டுக்காட்டப்பட்டுள்ளன.

மனிதநேயச்சீர்மைக்கு உயிர்ச்சார்பும் ஒரு காரணமென்பதும் மனித இயல்பும் ஆய்வில் புலப்படுத்தப்பட்டுள்ளன.

மனிதநேயம் மலர்வதற்குத் தாயன்பே காரணம் என்பதும் ஆய்வில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

மனிதநேயக் கூறுகளான எண்ணம், சொல், செயல் ஆகியன சான்றுகளுடன் விளக்கப்பட்டுள்ளன. மனிதநேயச் செயல்பாடுகளுள் குறிக்கத்தக்கவையாக, அன்பு செலுத்துதல், மக்கள் துயர் தீர்த்தல், எதிர்பாரா விபத்திலிருந்து காத்தல் முதலானவை சான்றுகளுடன் ஆய்வில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. எஸ். சந்தானம், கல்வி உளவியலின் அடிப்படைகள், ப.447.
2. மேலது. ப.461.
3. மேலது. ப.447.
4. மேலது. ப.448.
5. தா.ஏ. சண்முகம், உளவியல், ப.448.
6. மேற்கோள், சி.இ. மறைமலை, இலக்கியமும் உளவியலும், ப.2.
7. தா.ஏ. சண்முகம், உளவியல், ப.15.
8. தொல். நூ. 1361.
9. செ.ரா. பரமேஷ், சமூக உளவியல், ப.3.
10. தி.சு. நடராசன், திறனாய்வுக் கொள்கைகள், பக்.104-105.
11. முத்துச்சண்முகம், இராம. பெரியகருப்பன் (பதி.ஆ), அகிலன் கருத்தரங்க ஆய்வு உரைகள், ப.57.
12. தி.சு. நடராசன், திறனாய்வுக் கொள்கைகள், பக்.104-105.
13. அ.நா. பெருமாள் (கட்.ஆ), இலக்கியத் திறனாய்வில் உளவியல் அணுகுமுறைகள், கு. பகவதி (பதி.ஆ), திறனாய்வு அணுகுமுறைகள், ப.105.
14. இ.எஸ். தேவசிகாமணி (தொகு.ஆ), இலக்கிய இஸங்கள், ப.19.
15. மேலது. ப.22.
16. மேலது. பக்.10-11.
17. இரா. காஞ்சனா, இலக்கியமும் உளவியலும், ப.47.
18. சி.இ. மறைமலை, இலக்கியமும் உளவியலும், பக்.19-20.∴.
19. சுகி.சிவம், மனசே நீ ஒரு மந்திரச்சாவி, ப.50.

20. மேலது. ப.51.

21. மேலது. ப.51.

22. மேலது. ப.53.

23. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.8.

24. சி.இ. மறைமலை, இலக்கியமும் உளவியலும், பக்.17-18.

25. சுகி.சிவம், நல்ல குடும்பம் நமது இலட்சியம், ப.178.

26. சுகி.சிவம், கனவு மெய்ப்படும், பக்.85-86.

27. சி.இ. மறைமலை, இலக்கியமும் உளவியலும், ப.18.

28. க. சிவனேசன் (கட்.ஆ), 'மனிதனும் தெய்வமாகலாம் நூல் காட்டும் சுகி.சிவத்தின் உளவியல் சிந்தனைகள்', துரை அங்குசாமி (தொகு.ஆ), சுகி.சிவம் ஒரு பன்முகப்பார்வை, ப.185.

29. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.23.

30. சுகி.சிவம், கனவு மெய்ப்படும், ப.64.

31. சுகி.சிவம், நல்ல குடும்பம் நமது இலட்சியம், ப.30.

32. தா.ஏ. சண்முகம், உளநலவியல், ப.30.

33. ச. கணேஷ்குமார் (கட்.ஆ), சுகி.சிவம் அவர்களின் உளவியல் சிந்தனைகள், துரை அங்குசாமி (தொகு.ஆ), சுகி.சிவம் ஒரு பன்முகப்பார்வை, ப.92.

34. சுகி.சிவம், நல்ல குடும்பம் நமது இலட்சியம், ப.152.

35. சுகி.சிவம், கனவு மெய்ப்படும், ப.65.

36. சுகி.சிவம், அச்சம் தவிர், ப.50.

37. மேலது. பக்.55-56.

38. சுகி.சிவம். மனசே, நீ ஒரு மந்திரச்சாவி, ப. 34.

39. சுகி.சிவம், வாழ்தல் - ஒரு கலை, ப.26.

40. நீதிக்களஞ்சியம், ஆத்திச்சூடி, ப.1.

41. கிரண்பேடி, நான் துணிந்தவள், ப.295.

42. மு.சிவலிங்கம், சிந்தித்தால் சிகரம் எட்டும், ப.12.

43. பொன்னம்பல அடிகளார், காற்றில் வந்த கருத்துமழை, ப.50.

44. சுகி.சிவம், மனசே நீ ஒரு மந்திரச்சாவி, பக்.24-26.

45. மேலது. ப.39.

46. சி.இ.மறைமலை, இலக்கியமும் உளவியலும், ப.85.

47. சுகி.சிவம், வெற்றி நிச்சயம், ப.99.

48. மேலது. ப.100.

49. மு. மேத்தா, அவர்கள் வருகிறார்கள், ப.23.

50. சுகி.சிவம், நல்ல குடும்பம் நமது இலட்சியம், ப.238.

51. மேலது. ப.75.

52. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.112.

53. சுகி.சிவம், ஆன்மிகப் பூங்காவில் அதிசயத் துளசி, ப.105.

54. மேலது. ப.105.

55. நீதிக்களஞ்சியம், கொன்றை வேந்தன், ப.14.

56. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.96.

57. சுகி.சிவம், ஞானமலர்கள், ப.75.

58. மேலது. பக்.77-78.

59. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், பக்.63-64.

60. எம்.எஸ். உதயமூர்த்தி, எண்ணங்கள், ப.22.

61. சுகி.சிவம், மனசே, நீ ஒரு மந்திரச்சாவி, ப.14.

62. மேலது. ப.66.

63. மேலது. ப.86.

64. மேலது. ப.87.

65. மேலது. ப.105.

66. இனியவை நாற்பது, ப.26.

67. கரு. நாகராசன், தமிழர் கண்ட மனம், ப.6.

68. Encyclopedia Americana, Vol.14, p.553.

69. அ. சிதம்பரநாதன் செட்டியார், ஆங்கில – தமிழ் அகராதி, ப.504.

70. கா. அப்பாத்துரை, ஆங்கிலத்தமிழ் கையகராதி, ப.245.

71. Humanisam : The Attitude of Mind Which Attaches Primary Importance to Man and to his Faculties, Affairs, Temporial Aspirations and Well Being – Encyclopedia.

72. எம்.ஏ. சவேரியார், (கட்.ஆ), 'பாரதியும் மனித நேயமும்', இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்ற முப்பத்தோராம் கருத்தரங்க ஆய்வுக்கோவை, பக்.708-709.

73. மங்கையர்க்கரசி மயில்வாகனன் (கட்.ஆ.), 'பண்டைத்தமிழர் தம் மனித நேயச்சிந்தனை', தமிழியல் ஆய்வு, கருத்தரங்கக் கட்டுரைகள் தொகுப்பு, ப.155.

74. சாலினி இளந்திரரையன், சங்கத்தமிழரின் மனிதநேய மணிநெறிகள், ப.2.

75. தொல்.பொருள்.கற்.நூ. 190.

76. வே முத்துலக்குமி, பண்டைத் தமிழ் இலக்கியங்களில் அறநெறிகள், ப.57.

77. சாலினி இளந்திரையன், சங்கத்தமிழரின் மனிதநேய மணிநெறிகள், ப.9.

78. செ. ஜீன்லாரன்ஸ் (கட்.ஆ.), ‘மனிதநேயம் தியாகம்’, சா. கிருஷ்ணமூர்த்தி, சூ. நிர்மலா தேவி (பதி.ஆ), தமிழிலக்கியத்தில் மனிதநேயம், ப.73.

79. புறம். 91 : 7 – 11.

80. சிலம்பு, பதிகம் : 1 – 2.

81. மேலது. வழக்குரை காதை, 74 – 78.

82. புறம். 165 : 9 – 15.

83. திருநாவுக்கரசர் தேவாரம், ஆறாம் திருமுறை, பதி.31, பா.1.

84. பட்டினப்பாலை. 216 – 219.

85. சீவகசிந்தாமணி, முக்தி, இலம், ப.509.

86. குறள். 972.

87. பெரியபுராணம், கண்ணப்ப நாயனார் புராணம், ப.102.

88. மேலது. ப.111.

89. சுகி.சிவம், நல்ல வண்ணம் வாழலாம், ப.96.

90. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.143-144.

91. சுகி.சிவம், இந்த நாள் இனிய நாள், ப.62.

92. சுகி.சிவம், வாழ்தல் - ஒரு கலை, ப.95.

93. மேலது. ப.36.

94. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.7.

95. மேலது. ப.8.

96. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப.166.

97. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.110.

98. சுகி.சிவம், இந்த நாள் இனிய நாள், ப.61.

99. சுகி.சிவம், மனிதனும் தெய்வமாகலாம், ப.144.

100. பெரியபுராணம், கண்ணப்ப நாயனார் புராணம், ப.178.

101. சுகி.சிவம், நல்ல வண்ணம் வாழலாம், பக்.98-99.

# ஆய்வு நிறைவுரை

சுகி.சிவத்தின் படைப்புகளை ஆய்வு செய்ததன் வழியே கீழ்க்கண்ட முடிவுகள் கண்டறியப்பட்டுள்ளன.

1. ஆன்மிகம் என்பது, ஆன்மாவைத் தூய்மை செய்து பக்குவப்படுத்தும் செயல் என்பதும், பண்படுத்திப் பக்குவப்படுத்தப்பட்ட வாழ்க்கை முறையே சமயம் என்பதும் ஆய்வில் வெளிக்கொணரப்பட்டுள்ளது.
2. கொள்கை, உணர்வு, மானுட வாழ்வின் நடைமுறை எனப் பலவாறாகக் கூறப்பெறும் பக்தியைக் காலத்தே மேற்கொள்ளுதல் நாட்டுக்கு நன்மை பயக்கும் என்பதும், உள்ளத்தைத் தூய்மையாக வைத்திருந்தால் அதுவே கோயிலாகும் என்பதும் ஆய்வுப்படைப்புகளின் வழியே எடுத்துரைக்கப்பட்டுள்ளது.
3. எல்லாவற்றையும் கடந்து நிற்கும் கடவுளை நம்பினோர் கைவிடப்படார் என்றும், ஓர் உயிர் தன் உய்விற்காகச் செய்யும் அறிவு உணர்வுப் பயிற்சி வழிபாடு என்றும், தன்னை இழத்தல் வழிபாட்டின் நோக்கம் என்றும் கருதமுடிகிறது.
4. விதியை வெல்லமுடியும் என்பதைப் புரியவைப்பதற்காகவே இந்து மதத்தில் வற்புறுத்தப்பெறும் விதிக்கொள்கையை, மனிதனை நல்வழிப்படுத்தப் பெரியோர்கள் கண்ட பேருண்மை என்று துணியலாம்.
5. உண்மைப் பொருளாகச் சுட்டப்படும் தத்துவம் காட்டும் தெய்வநிலை, எதனாலும் சபலப்படாத மனோநிலையான சந்நியாசம்,

உடம்பைவிட உள்ளத்தை வலுப்படுத்தும் சக்தியான பிரம்மச்சரியம் போன்றவை இளைஞர்கள் அனைவரும் கடைப்பிடிக்க வேண்டிய நெறிகள் என அறிவுரைக்கப் பெறுகின்றமையைக் காணமுடிகின்றது.

6. படைப்பாசிரியர் சுகி.சிவம், ஆன்மிகவாதி என்றாலும், சமயத்தின் பெயரால் பேசப்படும் குப்பைகளையும் சாக்கடைச் சடங்குகளையும் துணிவாக மறுதலிப்பவர் என்று கருதமுடிகின்றது.
7. படிப்பவரின் மனத்தில் பதியவைக்கும் விதத்தில் தாம் கூறவந்த கருத்திற்கு இடையிடையே சங்க இலக்கியங்கள், திருக்குறள், சிலப்பதிகாரம், பெரியபுராணம், கம்பராமாயணம், மகாபாரதம் போன்ற இலக்கியங்களைக் கையாண்டுள்ள படைப்பாசிரியர் சுகி.சிவத்தின் திறம் போற்றுதற்குரியது.
8. சைவ, வைணவ பக்தி இலக்கியங்களில் இருந்து மேற்கோள் காட்டிக் கருத்தை விளக்கும் திறமும், ஒரு கருத்தை நிலை நாட்டுவதற்காகவும், சமூகத்திற்கு அறிவுரை கூறுவதற்காகவும் புதுக்கவிதையைக் கையாண்டுள்ள போக்கும் இவண் சுட்டுதற்குரியது.
9. பேச்சினாலும் எழுத்தினாலும் சமூகத்திற்கு நல்ல செய்தியைக் கொண்டு செல்லவேண்டும் என்பதற்காக, இடையாறாத இலக்கியப் பயிற்சியின் மூலமாக இலக்கிய ஆளுமையோடு நற்சிந்தனைகளை வெளியிட்டிருப்பது இவண் கருதுதற்குரியது.
10. சமூகத்தின் எல்லா நிலைகளிலிருந்தும் பெண் விடுதலை கோருவதும், நவீன சிந்தனைகளை உருவாக்குவதுமான

பெண்ணியம் குறித்தும், அதன் வகைகள் குறித்தும் ஆய்வில் எடுத்துக்காட்டப்பெற்றுள்ளன.

11. தாராளவாதப் பெண்ணியம், மனைப்பெண்ணியம், சமதர்மப்பெண்ணியம், பழமைவாதக் குடும்பம் சார்ந்த பெண்ணியம் முதலான பெண்ணியவாதக் கருத்துகளோடு ஒத்த கருத்துகளை வெளியிட்டிருக்கும் ஆசிரியர், குடும்பம், திருமணம் போன்ற சமூக அமைப்புகளை உடைத்தெரிய முயலும் தீவிரவாதப் பெண்ணியவாதிகளைக் கண்டிக்கவும் தவறவில்லை.

12. பெண்விடுதலை, பெண்உரிமை, விதவை மறுமணம், தந்தைவழிச் சமூகம், அலுவலக மகளிர் நிலை முதலான பெண்ணியவாதம் தொடர்பான கருத்தாக்கங்களைச் சிறப்பாகப் பதிவு செய்துள்ளார் படைப்பாசிரியர்.

13. மாமியார் – மருமகள் உறவுச் சிக்கலை அலசிய படைப்பாசியர், தாயின் எதிர்காலப் பாதுகாப்பிற்கு மகன் உத்திரவாதம் கொடுப்பதும், மாமியார்கள் விலைமதிப்பற்ற தாய்மார்களாக மாறவேண்டும் என்பதும் சிக்கலுக்கான தீர்வுகளாக முன்வைத்திருப்பதைக் காணமுடிகிறது.

14. உலகமயச் சூழலில் தோன்றிய பின்நவீனத்துவ ஆணாதிக்கத்தை எதிர்த்துப்போராடுவதும், குடும்ப நிறுவனத்தைக் காப்பதும் உண்மையான பெண்ணியவாதியின் கடமையாகும் என்பதே படைப்பாசிரியரின் பெண்ணிய நோக்கு என ஆய்வில் புலனாகிறது.

15. நம்மீது நாம் வைக்கும் நம்பிக்கையே தன்னம்பிக்கை என்பதும் பிறரின் மீது ஒருவர் வைப்பது நம்பிக்கை என்பதும் ஆய்வில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.
16. தன்னம்பிக்கைக் கூறுகளாக நம்பிக்கை, முயற்சி, உழைப்பு, சுயமதிப்பீடு, கவலையற்ற மனம், தியானம், மனக்கட்டுப்பாடு, மன ஒருமைப்பாடு, திறமை, பொறுமை ஆகியன புலனாகின்றன.
17. படைப்பாசிரியர் சுகி.சிவத்தின் பேச்சும் எழுத்தும் இளைய சமுதாயத்திற்குக் கிரியா ஊக்கியாக அமைந்திருத்தலைக் காணமுடிகின்றது.
18. படைப்பாளியின் உள்ளத்தை வெளிப்படுத்திக் காட்டும் ஓவியமாக அமையும் நடை பற்றியும் அதன் வகைமைகள் குறித்தும் ஆய்வில் சுட்டப்பட்டுள்ளது.
19. படைப்பாசிரியர் மேற்கொண்ட நடைவகைகளாக, வருணனை நடை, எடுத்துரை நடை, சொற்பொருள் விளக்கநடை, ஆங்கிலக் கலப்பு நடை, வடசொற்கலப்புநடை, வினா நடை, உணர்ச்சி வெளிப்பாட்டு நடை, இலக்கிய நடை, அங்கத நடை, தருக்க நடை, பேச்சு மொழி நடை ஆகியன புலனாகின்றன.
20. புராணம் மற்றும் இலக்கியம் தொடர்பான செய்திகளைக் கூறும் போது வருணனை நடை, இலக்கிய நடை, சொற்பொருள் விளக்க நடை முதலான நடைகளைக் கையாண்டுள்ளமையைக் காணமுடிகின்றது.
21. சமூகத்தைச் சாடுவதற்கும் அறிவுறுத்துவதற்கும் அங்கத நடை, தருக்க நடை ஆகியவற்றைக் கையாண்டிருப்பது போற்றுதற்குரியது.

22. வடசொற்கலப்பு நடையும், ஆங்கிலக் கலப்பு நடையும் மிகவும் அருகிக் காணப்படுவதன் மூலம், நடையமைப்பில் படைப்பாசிரியர் மொழியைப் பெரிதும் போற்றியுள்ளமை எண்ணத்தக்கது.

23. நடைவகைகளில் படைப்பாசிரியர் சுகி.சிவம் பெரும்பாலான இடங்களில் எளிமையான எடுத்துரைநடையையே கையாண்டுள்ளார் என்பது ஆய்வு மேற்கொண்ட நூல்களின் வழியே எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

24. படைப்பாசிரியரின் நடையமைப்பில் காணப்பெறும் நடையியல் கூறுகளாகத் திசைச்சொற்கள், கலைத்துறைச் சொற்கள், எதிரொலிச்சொற்கள், அடுக்குத்தொடர், சிலேடை அணி ஆகியவை ஆய்வில் வெளிக்கொணரப்பட்டுள்ளன.

25. இலக்கிய ஆய்வில் பெரும் தாக்கத்தைச் செலுத்திவரும் பிராய்டியக் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்ட உளவியல் கூறுகளான இச்சை, ஈகோ, மனப்பகுப்பு, வாழத்தூண்டும் இயல்பூக்கம், செத்து மடிய வேண்டும் என்ற இயல்பூக்கம், வழிபாடு பற்றிய உளவியல், காமம் பற்றிய உளவியல், உணவில் உளவியல், தாழ்வு மனப்பான்மை, மனச்சோர்வு, சபலம், தவம், தவறுகளைத் திருத்துதல், கட்டுப்பாடு, எண்ணம் ஆகியவை ஆய்வில் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

26. மனிதனிடமிருக்கும் நற்பண்புகள் பிறஉயிர்களிடத்து வெளிப்படும் போது மனிதநேயமாக அமைகிறது. எண்ணம், சொல், செயல் முதலான மனிதநேயக் கூறுகளும், அன்புசெலுத்துதல், மக்கள்

துயர்தீர்த்தல், எதிர்பாரா விபத்திலிருந்து காத்தல் முதலான மனிதநேயச் செயல்களும் ஆய்வில் புலப்படுத்தப்பெற்றுள்ளன.

27. படைப்பாசிரியர் சுகி.சிவம், ஆன்மிகச் சொற்பொழிவாளர் என்ற அளவோடு நின்று விடாமல், ஆண் -பெண், இருப்போர் - இல்லாதார் என்பன போன்ற ஏற்றத்தாழ்வுகளை அகற்றிச் சமத்துவச் சமூதாயம் அமைய, அதற்கேற்ற உளவியல் பார்வையோடும், மனிதநேயத்தோடும் கருத்துக்களை வழங்கி வருகிறார் என்றே எண்ணமுடிகின்றது.

**மேலாய்விற்குரிய வழிகள்:**

'சுகி.சிவம் படைப்புகள் - ஓர் ஆய்வு' என்ற தலைப்பில் அமைந்த இவ்வாய்வு, சுகி.சிவம் படைப்புகளில் பெண்ணியச் சிந்தனை என்பது குறித்து ஆய்வு செய்ய வழிவகுக்கும். படைப்பாசிரியரின் படைப்புகளில் சுயமுன்னேற்றச் சிந்தனைகள் பரவலாகக் காணப்பெறுகின்றன. இவற்றை அடிப்படையாகக் கொண்டு சுகி.சிவம் படைப்புகளில் தன்னம்பிக்கைச் சிந்தனை என்பது குறித்தும் தனியான ஆய்வு நிகழ்த்த வாய்ப்பிருக்கிறது.

இன்றைய சமுதாயத்தில் பல சிக்கல்களுக்கும் ஆன்மிகம் ஒரு தீர்வாகச் சுட்டப்படுகிறது. போலியான ஆன்மிக நிலையையும், நேர்மையான ஆன்மிகத்தையும் எடுத்துக்காட்டும் வகையில் பல கருத்துக்கள் படைப்பாசிரியரின் நூல்களில் இடம்பெற்றுள்ளன. இவற்றின் அடிப்படையில் சுகி.சிவம் படைப்புகளில் அமையும் ஆன்மிகம் குறித்துத் தனியே ஆய்வு செய்யவும் இவ்வாய்வு வழிகாட்டுகிறது.

உளவியல் அடிப்படையில் ஆய்வு செய்யும் போக்கு பெருகி வருவதால், சுகி.சிவம் படைப்புகளில் காணப்படும் உளவியல் கோட்பாடுகள் என்பது பற்றி ஆய்வாளர்கள் தொடர்ந்து ஆய்வு நிகழ்த்தவும் இவ்வாய்வு வழிவகை செய்கிறது.

## பின்னிணைப்பு -1

படைப்பாசிரியர் சுகி.சிவம் அவர்களிடம் கடிதம் மூலமாக ஆய்வாளர் கண்ட பேட்டி.

நாள்: 05.11.12

ஆய்வாளர் : சட்டத்துறையில் பட்டம் பெற்ற தாங்கள் ஆன்மிகச் சொற்பொழிவாளர் ஆனதற்குக் காரணம் ஏதும் உண்டா?

தகவலாளி : அரசியலில் நுழைந்து நாட்டையே மாற்ற நினைத்த ஆர்வத்தில் சட்டம் பயின்றேன். எனக்கு அரசியலும் அரசியலுக்கு நானும் பொருத்தமில்லை என்று சட்டம் முடித்ததும் உணர்ந்தேன். அதுபோது தவத்திரு. குன்றக்குடி அடிகளார், திரு.கி.வா.ஜ, வாரியார் சுவாமிகள் போன்றோர் அன்பும் அரவணைப்பும் இருந்தமையால் ஆன்மிக மேடைகள் ஏறும் வாய்ப்புக் கிடைத்தது. அதன் மூலம் நாட்டுக்கான நல்ல கருத்துக்களைச் சொல்ல முடிந்ததால் அத்துறை என்னை வெகுவாக ஈர்த்தது.

ஆய்வாளர் : ஆன்மிகச் சொற்பொழிவுத் துறையில் தாங்கள் யாரை முன்மாதியாகக் கொண்டுள்ளீர்கள் என்பதைக் கூற முடியுமா?

தகவலாளி : பலரும் பலவகையில் வழிகாட்டிகள். ஒரு பாடலை எடுத்து இரண்டு மணி நேரம் விளக்குவது கி.வா.ஜ பாணி. ஒரு நிமிடத்தில் நான்கு பாடல்களை அடுக்குவது வாரியார் பாணி. நாடகயுக்தி வேறு இருக்கும். பாத்திரங்களாக மாறி மாறி நடிப்பார். அவரிடமிருந்து இசையை விட்டு விட்டு இலக்கியத்திற்கு முக்யத்வம் கொடுத்தது புலவர் திலகம் தீரன் பாணி. வரிக்குவரி கலகலப்பாக்கி நயம் சேர்ப்பது திருச்சி இராதிகிருஷ்ணன் பாணி. இதனைவிடுத்து

வரிக்குவரி சமூக அக்கறையுடன் சிந்தனைகளைப் பொழிவது குன்றக்குடி அடிகளார் பாணி. எல்லா வெற்றி நுணுக்கங்களையும் கவனித்து எனக்கென ஒருபாதை வகுத்துக் கொண்டேன். ஒவ்வொருவர் ஒவ்வொரு வகையில் குரு. ரமணர், ராமகிருஷ்ணர்,ஓஷோ இப்படிப்பட்ட குருமார்களும் எனக்கு உண்டு.

ஆய்வாளர் : நான் ஆன்மிகவாதி என்றாலும் சமயத்தின் பெயரில் இருக்கும் குப்பைகளுக்கும், சாக்கடைச் சடங்குகளுக்கும் விரோதமானவன் என்று குறிப்பிட்டிருப்பதற்கு அடிப்படைக் காரணம் என்ன?

தகவலாளி : தன் சமயம்தான் உயர்வு என்கிற வகையில் பேசும் சிலர் தன் சமயத்தின் பிழைகளைக் கூட பெருமையாகப் பேசுவது எனக்கு அருவருப்பாக இருந்தது. நியாயம், நேர்மை, வேண்டும். நம்பக்கம் தவறு இருந்தால் திருத்திக்கொள்ள தைரியம் வேண்டும் என்று நம்புகிறேன். எனவே மறுதலிக்க வேண்டியவற்றை மறுதலித்தேன். எல்லாமே பரிசீலனைக் குரியவை. ஒட்டுமொத்த ஏற்பும், நிராகரிப்பும் தவறு.

ஆய்வாளர் : தங்கள் பேச்சிலும் எழுத்திலும் பல்வேறு இலக்கியத்தின் ஆளுமை தென்படுவதற்குக் காரணம் என்ன?

தகவலாளி : என் தமிழாசிரியர் சிதம்பரம் சுவாமிநாதன், டாக்டர். அவ்வை நடராசன், சிலம்புச் செல்வர் ம.பொ.சி போன்ற பலரது ஆளுமையின் தாக்கம் பலவித இலக்கியங்களைப் படிக்கும் பாக்கியம் ஆனது. பரவலான படிப்புக்கு இது காரணம். ஆழமாக ஒன்றில் நிற்காது போய் விட்டதுபோல் சிலசமயம் வருத்தம் வரும். ஆனால் அது தேக்கம் என்றும் தோன்றும்.

ஆய்வாளர் : திருமணம், குடும்பம் என்பவற்றை உடைத்தெறியும் போக்கில் முன்வைக்கப்படும் பெண்ணியவாதம் குறித்துத் தங்கள் கருத்து என்ன?

தகவலாளி : நல்ல குடும்பம் என்கிற என் புத்தகத்தில் விரிவாக எழுதி இருக்கிறேன். Harmones கோளாறு காரணமாகவும் சமூகத்தில் தனக்கு நேர்ந்த சங்கடங்களால் மனச்சிதைவுக்குள்ளானதாலும் தன் இஷ்டம்போல் வாழ சௌகர்யமாக இருக்கிறது என்பதாலும் சில பெண்கள் குடும்ப அமைப்பை உடைக்கிறார்கள். அவர்களை எதிர்க்கின்றேன். சிலர் அறிவுபூர்வமாகவே அதற்கு எதிரானவர்கள். அவர்களோடு எனக்கு அதிகம் சண்டை இல்லை. கம்யூனிஸ இயக்கங்கள் பேசும் பெண்ணுரிமையை மதிக்கிறேன். குடும்ப அமைப்பைக் காரணம்காட்டி போக்கிரி ஆண்கள் பெண்களை அடிமைபோல் நடத்துவதை வெறுக்கிறேன்.

ஆய்வாளர் : இன்றைய இளம் பெண்களுக்குத் தாங்கள் கூறும் அறிவுரை யாது?

தகவலாளி : பெண்ணே நீ வாழ்க என்ற என் புத்தகம் பார்க்கவும். ஆணின் இடத்தைப் பெண் பிடிப்பது சமத்துவம் என்பது முட்டாள்தனமான வாதம். சமத்துவம் ஆழமாகப் புரிந்து கொள்ள வேண்டியது ஒன்று.

ஆய்வாளர் : சுயமுன்னேற்றம், தன்னம்பிக்கைச் சிந்தனைகளுக்குத் தாங்கள் முன்னுரிமை கொடுத்துப் பேசியும் எழுதியும் வருவதற்குச் சிறப்புக் காரணம் ஏதும் உண்டா?

தகவலாளி : என் தன்னம்பிக்கையே காரணம். நான் சுயமாக முன்னேறியதே காரணம். நாட்டுக்கு அது தேவை என்பதே அதைவிட முக்கியகாரணம்.

ஆய்வாளர் : இன்றைய கல்லூரி மாணவர்களின் நிலை குறித்த தங்களின் கருத்து என்ன என்பதைக் கூறுங்கள்?

தகவலாளி : தான் யார்? தன்கடமை என்ன? தான் எங்கே இருக்கிறோம், என்னவாக ஆகவேண்டும் என்கிற விழிப்பின்றி பலரும் மந்தையோடு மந்தையாகச் சந்தைக்கு வந்து விடுகிறார்கள் என்று வருந்துகிறேன்.

ஆய்வாளர் : இன்றைய சமுதாயத்தில் பரவலாகப் பேசப்படும் மணமுறிவைப் போக்கத் தாங்கள் கூறும் கருத்து யாது?

தகவலாளி : யாரையும் அடிமைப் படுத்தாதே
யாருக்கும் அடிமை ஆகாதே.

இந்தச் சூத்திரம் புரிய வேண்டும். நாம் நல்ல நண்பர்கள் என்று கணவன் மனைவி உணரவேண்டும். மணமுறிவு செய்து வேறு மணம் முடித்தாலும் துணை இதே சமூகத்தின் சரக்கு தான் என்று புரிந்து கொள்ள வேண்டும்.

ஆய்வாளர் : தமிழகப் பள்ளிகளில் பகவத் கீதையைப் பாடமாக வைக்கவேண்டும் என்று கூறியுள்ளீர்கள். அது குறித்துத் தமிழக அரசிடம் தாங்கள் கோரிக்கை ஏதும் வைத்துண்டா?

தகவலாளி : அரசிடம் கோரிக்கை வைக்கவில்லை. இதுவரை வந்த எந்த அரசும் என்னை மதித்து அறிவுரை கேட்கும் மனோநிலையில் இல்லை.

## பின்னிணைப்பு -2

## ஆண்டுவாரியாக வரிசைப்படுத்தப்பட்ட சுகி.சிவம் நூல்களின் பட்டியல்

| வ.எண் | நூலின் பெயர் | வெளியிடப் பெற்ற ஆண்டு | வெளியிட்ட பதிப்பகம் |
|---|---|---|---|
| 1 | கந்தர் அநுபூதி | 1999 | சுகி புக்ஸ் |
| 2 | ஒரு தலம், ஒருபாடல், ஒரு நயம் | 2003 | வானதிபதிப்பகம் |
| 3 | படிக்க..ஜெயிக்க… | 2005 | சுகி புக்ஸ் |
| 4 | நல்ல குடும்பம் நமது லட்சியம் | 2005 | கவிதா பப்ளிகேஷன் |
| 5 | சொன்னார்கள்..! சொன்னார்கள்..! சொன்னார்கள்…! முதல்பாகம் | 2005 | கவிதா பப்ளிகேஷன் |
| 6 | சுந்தரகாண்டம் | 2005 | கவிதா பப்ளிகேஷன் |
| 7 | கம்பன் நேற்று-இன்று-நாளை | 2006 | வானதி பதிப்பகம் |
| 8 | மனசே, நீ ஒரு மந்திரச்சாவி | 2006 | விகடன் பிரசுரம் |
| 9 | மனிதனும் தெய்வமாகலாம் | 2006 | கற்பகம் புத்தகாலயம் |
| 10 | வெற்றி நிச்சயம் | 2006 | சுகி புக்ஸ் |
| 11 | ஞானமலர்கள் | 2006 | கவிதா பப்ளிகேஷன் |
| 12 | நல்ல வண்ணம் வாழலாம் | 2006 | கவிதா பப்ளிகேஷன் |
| 13 | அர்த்தமுள்ள வாழ்வு | 2006 | கவிதா பப்ளிகேஷன் |
| 14 | இந்தநாள் இனியநாள் | 2006 | கவிதா பப்ளிகேஷன் |
| 15 | உணவே உயிரே… | 2006 | கவிதா பப்ளிகேஷன் |
| 16 | சிந்தனை முத்துக்கள் | 2006 | சுகி புக்ஸ் |
| 17 | சொன்னார்கள், சொன்னார்கள் பாகம்-2 | 2006 | சுகி புக்ஸ் |
| 18 | வாழ்தல் ஒருகலை | 2006 | கற்பகம் புத்தகாலயம் |
| 19 | நினைப்பதும்… நடப்பதும்.. | 2006 | கற்பகம் புத்தகாலயம் |
| 20 | ஆன்மிகப்பூங்காவில் அதிசயத்துளசி | 2006 | வானதி பதிப்பகம் |
| 21 | அச்சம் தவிர்! | 2006 | கற்பகம் புத்தகாலயம் |
| 22 | கனவு மெய்ப்படும் | 2007 | கவிதா பப்ளிகேஷன் |
| 23 | வாழ்ந்து பார்க்கலாம் வா! | 2007 | சுகி புக்ஸ். |
| 24 | ஏமாற்றாதே, ஏமாறாதே! | 2007 | கவிதா பப்ளிகேஷன் |

## பின்னிணைப்பு - 3

## துணைநூற்பட்டியல்

### 1. முதன்மைச் சான்றாதாரங்கள்


சிவம், சுகி., கந்தர் அநுபூதி- தெளிவாக்கம், சுகி புக்ஸ் வெளியீடு, சென்னை, இ.ப., 1999.

-----------------------------------------, ஒரு தலம், ஒரு பாடல், ஒரு நயம், வானதி பதிப்பகம், சென்னை, மூ.ப., 2003.

-----------------------------------------, படிக்க… ஜெயிக்க…., சுகி புக்ஸ், சென்னை, மு.ப., 2005.

-----------------------------------------, நல்லகுடும்பம் நமது லட்சியம், கவிதா பப்ளிகேஷன், சென்னை, ஆ.ப., 2005.

-----------------------------------------, சொன்னார்கள்…! சொன்னார்கள்…! சொன்னார்கள்…! முதல்பாகம், கவிதா பப்ளிகேஷன், சென்னை, மு.ப., 2005.

-----------------------------------------, சுந்தரகாண்டம், கவிதா பப்ளிகேஷன், சென்னை, மூ.ப., 2005.

-----------------------------------------, கம்பன் நேற்று -இன்று- நாளை, வானதி பதிப்பகம், சென்னை, ஐ.ப., 2006.

-----------------------------------------, மனசே, நீ ஒரு மந்திரச்சாவி, விகடன் பிரசுரம், சென்னை, ஒ.ப., 2006.

-----------------------------------------, மனிதனும் தெய்வமாகலாம், கற்பகம் புத்தகாலயம், சென்னை, ப.ப., 2006.

-----------------------------------------, வெற்றி நிச்சயம், சுகிபுக்ஸ், சென்னை, எ.ப., 2006.

----------------------------------------, ஞானமலர்கள், கற்பகம் புத்தகாலயம், சென்னை, பதினொன்றாம் பதிப்பு, 2006.

----------------------------------------, நல்லவண்ணம் வாழலாம், கற்பகம் புத்தகாலயம், சென்னை, பன்னிரண்டாம் பதிப்பு, 2006.

----------------------------------------, அர்த்தமுள்ள வாழ்வு, கற்பகம் புத்தகாலயம், சென்னை, 2006.

----------------------------------------, இந்தநாள் இனிய நாள், கவிதா பப்ளிகேஷன், சென்னை, மு.ப. 2006.

----------------------------------------, உணவே உயிரே..., கவிதா பப்ளிகேஷன், சென்னை, நா.ப., 2006.

----------------------------------------, சிந்தனை முத்துக்கள், சுகி புக்ஸ், சென்னை, மூ.ப., 2006.

----------------------------------------, சொன்னார்கள், சொன்னார்கள் பாகம்-2, சுகி புக்ஸ், சென்னை, மு.ப., 2006.

----------------------------------------, வாழ்தல் ஒரு கலை, கற்பகம் புத்தகாலயம், சென்னை, எ.ப., 2006.

----------------------------------------, நினைப்பதும்... நடப்பதும்..., கற்பகம் புத்தகாலயம், சென்னை, ஆ.ப., 2006.

----------------------------------------, ஆன்மிகப்பூங்காவில் அதிசயத் துளசி, வானதி பதிப்பகம், மு.ப., 2006.

----------------------------------------, அச்சம் தவிர்!, கற்பகம் புத்தகாலயம், சென்னை, மு.ப., 2006.

----------------------------------------, கனவு மெய்ப்படும், கவிதா பப்ளிகேஷன், சென்னை, பதினொன்றாம் பதிப்பு, 2007.

-----------------------------------------, வாழ்ந்து பார்க்கலாம் வா!, சுகி புக்ஸ், சென்னை, மு.ப., 2007.

-----------------------------------------, ஏமாற்றாதே, ஏமாறாதே!, கவிதா பப்ளிகேஷன், சென்னை, மு.ப.,2007.


2. **துணைமைச் சான்றாதாரங்கள்**

**அ.தமிழ்:**


அகிலன், வெற்றியின் ரகசியங்கள், தாகம வெளியீடு, சென்னை, மு.ப.

அங்குசாமி, துரை (தொகு.ஆ.), சொல்வேந்தர் சுகி.சிவம் ஒரு பன்முகப்பார்வை, கவிதா பப்ளிகேஷன்ஸ், சென்னை, மு.ப., 2004.

-----------------------------------------, சுகி.சிவம் வாழ்வியல் சிந்தனைகள், கற்பகம் புத்தகாலயம, சென்னை, மறுமதிப்பு, 2009.

அப்துற்றஹீம், படியுங்கள்! சிந்தியுங்கள்! யுனிவர்சல் பப்ளிஷர்ஸ், சென்னை, 2002.

-----------------------------------------, படியுங்கள்! சுவையுங்கள்!., யுனிவர்சல் பப்ளிஷர்ஸ், சென்னை, எ.ப., 2009.

அரங்கராசன், தி.ரா. (மொ.பெ.ஆ.), பொது உளவியல் (இரண்டாம் தொகுதி), தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, மு.ப, 1972.

அறிவு நம்பி, அ., இலக்கியங்களும் உத்திகளும், அமுதன் நூலகம், புதுச்சேரி, மு.ப., 2001.

அன்புமீனாள், பழ., முத்து இலக்குமி, சு., ஜாஸ்மின் கமலவதினி, ஜே.அ. (பதி.ஆ.), இலக்கியத் தரவுகளில் மகளிர் பதிவுகள், தாமரை பப்ளிகேஷன்ஸ் (பி) லிட்., சென்னை, இ.ப., 2008

பூதைமிய்யா, பெண்ணுரிமை பேசும் இஸ்லாம், யாசிர் பப்ளிகேஷன்ஸ், மதுரை, மு.ப., 1992.

இரவிக்குமார் (தொகு.ஆ.), கல்விச்சிந்தனைகள்- அம்பேத்கர், இந்திய மாணவர் சங்கத்துடன் இணைந்து புக்ஸ் / பார் சில்ரன் வெளியீடு, சென்னை, மு.ப., 2007.

இராகவையங்கார், ரா., நல்லசைப் புலமை மெல்லியலாளர்கள், நாம் தமிழர் பதிப்பகம், சென்னை, மு.ப., 2009.

இராமராசு, தே., இன்றைய சமுதாயமும் பெண்களும், சக்தி பிராசஸ், சென்னை, மு.ப., 2003.

இராமலிங்கம், மா., புதிய உரைநடை, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1980.

-------------------------------------., நோக்குநிலை, இராசி பதிப்., கும்பகோணம், மு.ப., 1984.

-------------------------------------., இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, மு.ப.,1985.

இராஜகோபாலன், இரா., நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் சரணாகதி நெறி, என்னெஸ் பப்ளிஷேன்ஸ் வெளியீடு, பொள்ளாச்சி, மு.ப.

இலிங்கசாமி, சி., பொன்மொழிகள், ராம்பிரசாத் பப்ளிகேஷன்ஸ், சென்னை, மு.ப.,2007.

இளம்பூரணர் (உரை.ஆ.), தொல்காப்பியம்- பொருளதிகாரம், கழக வெளியீடு, சென்னை, 1982.

இறையன்பு, வெ., ஏழாவது அறிவு, நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை.

| | |
|---|---|
| -------------------------------------., | வாழ்க்கைப் ஒரு வழிபாடு, விஜயா பதிப்பகம், கோவை. |
| இன்னாசி, சூ. (பதி.ஆ.), | சமயமும் சமுதாயமும், பதிப்புத்துறை, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, மு.ப.,1983. |
| கந்தசாமி, இல.செ., | குறிக்கோளை நோக்கி, கலைச்செல்வம் பதிப்பகம், கோயம்புத்தூர், மு.ப. |
| கடிகாசலம், ந.(பதி.ஆ.), | தமிழும், பிறதுறைகளும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, மு.ப., 1994. |
| கமலா, பொ.நா., | நவீன கோட்பாட்டு ஆய்வுகள், காவ்யா வெளியீடு, பெங்களுர், மு.ப.,1999. |
| கமலா கந்தசாமி, | வாழ்க்கை அது நம் கையில், நர்மதா பதிப்பகம், சென்னை. |
| கமலா பத்மகிரீஸ்வரன், | ஜே.கிருஷ்ணமூர்த்தி வாழ்வும் வாக்கும், நர்மதா பதிப்பகம், சென்னை. |
| கருப்பையா, பழ., | பட்டினத்தார் ஒரு பார்வை, மணிவாசகர் பதிப்பகம், சிங்கர்தெரு, சென்னை, மு.ப. |
| கல்யாணசுந்தரனார், திரு.வி., | சீர்திருத்தம் அல்லது இளமை விருந்து, சாது அச்சுக் கூடம், சென்னை, ஏ.ப.1958. |
| -------------------------------------., | தமிழ்ச் சோலை அல்லது கட்டுரைத் திரட்டு, சாது அச்சுக் கூடம், சென்னை, 1935. |
| -------------------------------------., | சைவத்துறவு, வலம்புரி பதிப்பகம், திருநின்றவூர், மு.ப.,1999. |

காஞ்சனா, இரா., இலக்கியமும் உளவியலும், விஷ்ணுப்பிரியா பதிப்பகம், மதுரை, இ.ப., 2000.

கார்த்திகேசு சிவத்தம்பி, தமிழ் இலக்கியத்தில் மதமும் மானுடமும், நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, இ.ப., 1994.

கிரிஜா அன்பழகன், கா., பாரதி படைத்த பெண்கள், விஷால் பதிப்பகம், திருவண்ணாமலை, மு.ப., 2010.

கீதா, கோ., தமிழ்ச் சிறுகதை வரலாற்றில் பெண்கள், ஜெயகீர்த்தி பதிப்பகம், திண்டிவனம், மு.ப., 2007,

குணசேகரன், அ., பெண்ணெனும் ஊடகம், நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை, மு.ப., 2003.

குருநாதன், இராம., தேவிப்பிரியா (தொகு.ஆ), பெண்ணியம், கலைஞன் பதிப்பகம், சென்னை, மு.ப., 2001.

குன்றக்குடி அடிகளார், சமய இலக்கியங்கள், இந்தியா புக் ஹவுஸ், சென்னை, மு.ப., 1981.

கோட்டை அம்பிதாசன், கவி., பெரியாரின் பெண்ணியச் சிந்தனைகள், குறிஞ்சி வெளியீடு, சென்னை, மு.ப., 2009.

கோதண்டம்,கொ.ம., பழமொழிகள் புதிய உண்மை விளக்கம், ஸ்ரீசெண்பகா பதிப்பகம், சென்னை, மு.ப., 2007.

கோபாலகிருட்டிணமாசாரியர்,வை.மு., கம்பராமாயணம்- ஆரண்யகாண்டம், வை.மு.கோ.கம்பெனி, சென்னை, மூ.ப.,1957.

-------------------------------------., கம்பராமாயணம் - சுந்தரகாண்டம், வை.மு.கோ.கம்பெனி, சென்னை, ஏ.ப.,1963.

| | |
|---|---|
| கைலாசபதி, க., | இலக்கியமும் திறனாய்வும், பாட்டாளிகள் வெளியீடு, சென்னை. 1976. |
| சண்முகம், தா.ஏ., | உளநலவியல், தமிழ் வெளியீட்டுக் கழகம், சென்னை, மு.ப., 1970. |
| சண்முக சுந்தரம், சு., | நாட்டுப்புறவியலில் உளவியல் பார்வை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,சென்னை, மு.ப., 1991. |
| …………….(தொகு.ஆ), | பெண்ணியம், காவ்யா வெளியீடு, பெங்களுரு, மு.ப., 1994. |
| சந்திரசேகரன்,இரா., | பாரதி பார்வையில் இளமையும் பெண்மையும், நாம் தமிழர் பதிப்பகம், சென்னை, மு.ப., 2008. |
| சபீதா ஜோசப், | ஆன்மிகச் செம்மல் விவேகானந்தர் 100, நக்கீரன் பப்பளிகேஷன்ஸ், சென்னை, மு.ப.,2009. |
| சாயபு மரைக்காயர், மு.(தொகு.ஆ.), | கம்பர் ஆய்வுக் கோவை, கங்கை புத்தக நிலையம், சென்னை, மு.ப., 1995. |
| சாவித்திரி, எசு., | பொது உளவியல், அரவிந்த் பப்ளிகேஷன்ஸ், சென்னை, மு.ப., 1989. |
| சிவஞானம், ம.பொ., | ஆன்மிகமும் அரசியலும், விசாலாட்சி பதிப்பகம், சென்னை, மு.ப., 1980. |
| சிவலிங்கம், மு.(மொ.பெ.ஆ.), | சிந்தித்தால் சிகரம் எட்டும், கண்ணதாசன் பதிப்., சென்னை, மு.ப. |
| சீனிவாசன், ப., | சமூகப்புரட்சியாளர் டாக்டர் அம்பேத்கர், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, நா.ப., 2007. |

சுந்தரமூர்த்தி, இ., நடையியல் சிந்தனைகள், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை, மு.ப., 1994.

சுப்பிரமணியன், ச.வே., கம்பன் இலக்கிய உத்திகள், மெய்யம்மை பதிப்பகம், சென்னை, 1982.

சூர்யகுமாரி, சரித்திரம் படைத்த சாதனைப் பெண்கள், நர்மதா பதிப்கம், சென்னை.

ஞானசம்பந்தன், அ.ச., இலக்கியக் கலை, கழக வெளியீடு, திருநெல்வேலி, நா.ப.,1964.

ஞானமூர்த்தி, தா.ஏ., இலக்கியத் திறனாய்வியல், ஐந்திணை பதிப்பகம், சென்னை, இ.ப., 1986.

தங்கசாமி, எஸ்.ஏ., இந்திய அரசியல், பண்பாட்டு வரலாறு, பாவை பதிப்பகம், மதுரை, மு.ப., 1995.

தந்தை பெரியார், பெண் ஏன் அடிமையானாள்?, பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவன வெளியீடு, சென்னை, இருபதாம் பதிப்பு, 1997.

தண்டாயுதம் இரா., தற்காலத் தமிழ் இலக்கியம், தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, மு.ப., 1973.

-------------------------------------., சமய இலக்கிய விளக்கம், தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, மு.ப

தமிழண்ணல், இலக்குமணன், எம்.எசு., ஆய்வியல் அறிமுகம், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, மூ.ப., 1986.

நடராசன், தி.சு., திறனாய்வுக் கொள்கைகள், அன்னம் (பி) லிட்., சிவகங்கை, மு.ப., 1980.

நலங்கிள்ளி, அரங்க., இலக்கியமும் உளப்பகுப்பாய்வும்,

| | |
|---|---|
| | வாணிதாசன் பதிப்., பாண்டிச்சேரி, மு.ப., 1992. |
| நீதிவாணன், ஜெ., | நடையியல், முல்லை வெளியீடு, மதுரை, 1979. |
| பகவதி, கு. (பதி.ஆ.), | திறனாய்வு அணுகுமுறைகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, மு.ப., 1989. |
| பரமேஷ், செ.ரா., | சமூக உளவியல், தமிழ்நாட்டுப்பாடநூல் நிறுவனம், சென்னை, மு.ப., 1973. |
| பழநிச்சாமி, தி., | பெரியார் கண்ட பேருண்மைகள், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, மு.ப., 1997. |
| பாஸ்கல் கிஸ்பர்ட், | சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், தமிழ் வெளியீட்டுக் கழகம், சென்னை, 1964. |
| பாண்டுரங்கன், அ. (பதி.ஆ.), | நோக்கு, தமிழ்த்துறை, புதுவைப் பல்கலைக்கழகம், காரைக்கால், ஐந்திணை பதிப்பகம் (விற்பனை உரிமை), சென்னை, மு.ப., 1989. |
| பாலச்சந்திரன்,சு., | இலக்கியத் திறனாய்வு, அணியகம், சென்னை, மூ.ப., 1981. |
| பாலசுப்பிரமணியன், கு.வெ., | ஆய்வுக் களங்கள், உமாநூல் வெளியீட்டகம், தஞ்சாவூர், மு.ப., 1998. |
| பாலசுப்பிரமணியன், எம்.கே., | சமய இலக்கியச் சிந்தனைகள், திருவரசு புத்தகநிலையம், சென்னை, மு.ப., 1999. |

| | |
|---|---|
| பிச்சமுத்து, ந., | திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும், சக்தி வெளியீடு, சென்னை, 1986. |
| பிரேமா, இரா., | பெண் விடுதலையும் பெண் உரிமையும், அறிவு பதிப்பகம், சென்னை, மு.ப., 2008. |
| ………………., | பெண்ணியம், தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, நா.ப., 2010. |
| பெரியகருப்பன், இராம & முத்தையா, இ., | தமிழியல் ஆய்வு, பதிப்புத்துறை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, இ.ப., 1988. |
| பெசண்ட் கிரீப்பர் ராஜ் (மொ.பெ.ஆ.), | பிறழ்நிலை உளவியல், தமிழ் வெளியீட்டுக் கழகம், சென்னை, மு.ப., 1965. |
| பொற்கோ, | ஆராய்ச்சி நெறிமுறைகள், ஐந்திணை பதிப்பகம், சென்னை, இ.ப., 1998. |
| பொன்னீலன், | தவத்திரு குன்றக்குடி அடிகளார் தமிழகத்தின் ஆன்மிக வழிகாட்டி, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, மு.ப., 1991. |
| மகாத்மா காந்தி, | சமூகத்தில் பெண்கள் தமிழ்நாடு காந்தி நினைவுநிதி, மதுரை, இ.ப., 1974. |
| | பாவேந்தரின் உரைநடைத்திறன், முத்து பதிப்பகம், விழுப்புரம், மு.ப., 1990. |
| மதியழகன், மு., | தமிழியல் ஆய்வு வரலாறு, பரீத் வெளியீட்டகம், புதுவை, 1996. |
| மல்லிகா, அரங்க., | தமிழ் இலக்கியமும் பெண்ணியமும், நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை, மு.ப., 2002. |

மறைமலை அடிகள், தனித்தமிழ் மாட்சி, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, மூ.ப., 2002.

மறைமலை சி.இ., இலக்கியமும் உளவியலும், மணிவாசகர் பதிப்., சென்னை, மூ.ப., 2002.

மீனாட்சி சந்தரம், தெ.பொ., சமயத்தமிழ், களஞ்சியம் பதிப்பகம், சென்னை, மு.ப.

மீனாட்சி முருகரத்தினம், மேலை இலக்கியத் திறனாய்வு அறிமுகம், என்னெஸ் பப்ளிகேஷன்ஸ் (விற்பனை உரிமை), மதுரை, 1987.

முத்துச்சண்முகன்,
பெரியகருப்பன், இராம. (பதி.ஆ.), அகிலன் கருத்தரங்க ஆய்வுரைகள், தமிழ்த்துறை வெளியீடு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, மு.ப., 1976.

முத்துச்சண்முகன், தமிழ் இலக்கியக் கோட்பாடுகள், கழக வெளியீடு, சென்னை, விரிவாக்கிய முதற்பதிப்பு, 1989.

வரதராசன், மு., இலக்கியத்திறன், தாயக வெளியீடு, சென்னை, மு.ப., 1959.

…………………………., தமிழ் இலக்கிய வரலாறு, சாகித்திய அகாதெமி, புதுதில்லி ஆ.ப., 1986.

…………………………., இலக்கிய மரபு, தாயக வெளியீடு, பாரிநிலையம் (விற்பனை உரிமை), சென்னை, நா.ப., 1997.

விசுவநாதன், ஈ.ச., ஆய்வு நெறிமுறைகள், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, இ.ப., 1981.

வேங்கடராமன், சு.(பதி.ஆ.), மு.வ. கருத்தரங்கக் கட்டுரைகள், பதிப்புத்துறை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 1987.

வேங்கடராஜீலு, ரா.(மொ.பெ.ஆ.), சத்திய சோதனை, நவஜீவன் பிரசுராலயம், அகமதாபாத், முப்பத்தைந்தாம் பதிப்பு, 2007.

ஜான் சாமுவேல், ஜி., திறனாய்வுச் சிந்தனைகள், மணி பதிப்பகம், சென்னை, மு.ப., 1977.

தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் (தொகு.ஆ.), தமிழ்க்கவிதைகளில் பெண்ணியம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட்., சென்னை, மு.ப., 2008.

**ஆ. ஆங்கிலம்:**

Hudson, W.H. An Introduction to the study of literature, George G.Harrap & Co.Ltd., London, Reprint, 1957.

Kate Friedlander, The Psycho-Analytical Approach to Juvenile Delinguency, Routledge & Kegan Paul Ltd., London, Third Impression, 1951.

Pillai, K.K., Educational System of the Ancient Tamils, the south India Saiva Sidthantha Works publishing society Thirunelveli Ltd, Madras, First Edition, 1972.

Srinivasa I. Yangar, M. Tamil Studies, The Gurdian Press, Madras, First series, 1914.

Subramanian, S.V.& Murugan, V.L. (Ed.,) Papers on Tamil Studies, International Institute of Tamil studies, Madras, 1980.

Welleck, Rene & Wareen Austin, Theory of Literature, A Harvest Book, Harcourt Brace of World Inc., Newyork, IV Edition, 1956.

**3. கட்டுரைகள்**

**அ.தமிழ்**

ஆறுமுகம் (கொ.,) 'பெரியபுராணம் புலப்படுத்தும் சமுதாய உணர்வுகள்', சமயமும் சமுதாயமும், பதிப்புத்துறை, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1983.

கணேஷ்குமார், ச., 'சுகி.சிவம் அவர்களின் உளவியல் சிந்தனைகள்', சுகி.சிவம் ஒரு பன்முகப் பார்வை, கவிதா பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2004.

குணசேகரன், இரா., 'சுகி சிவம் காட்டும் வாழ்வியல் தத்துவம்', சுகி.சிவம் வாழ்வியல் சிந்தனைகள், கற்பகம் புத்தகாலயம், சென்னை, 2009.

சவேரியார், எம்.ஏ., 'பாரதியும் மனிதநேயமும்', முப்பத்தோராம் கருத்தரங்க ஆய்வுக்கோவை, இ.ப.த.ம.வெளியீடு, 2000.

சாதிக்பாட்சா, மு., 'சுகி.சிவத்தின் நல்ல குடும்பம் நமது இலட்சியம்- ஒரு பெண்ணியப் பார்வை', சுகிசிவம் ஒரு பன்முகப்பார்வை, கவிதா பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2004.

சிதம்பரம், சி., 'சுகி.சிவத்தின் வாழ்வியல் சிந்தனைகள்',

சுகி.சிவம் வாழ்வியல் சிந்தனைகள், கற்பகம் புத்தகாலயம், சென்னை, 2009.

சிவனேசன், க., ‘மனிதனும் தெய்வமாகலாம் நூல் காட்டும் சுகி.சிவத்தின் உளவியல் சிந்தனைகள்’, சுகி.சிவம் ஒரு பன்முகப்பார்வை, கவிதா பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2004.

செல்வகணபதி, அண., ‘சுகி.சிவம் அவர்களின் ஆன்மிகச் சிந்தனைகள்’, சுகி.சிவம் ஒரு பன்முகப்பார்வை, கவிதா பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2004.

செல்வ விநாயகம், சி., ‘சுகி.சிவத்தின் தன்னம்பிக்கை பற்றிய சிந்தனைகள்’, சுகி.சிவம் வாழ்வியல் சிந்தனைகள், கற்பகம். புத்தகாலாயம், சென்னை, 2009.

சேதுபாண்டியன், தூ., ‘மு.வ.வின் நாவல்களில் மொழிநடை’, மு.வ. கருத்தரங்கக் கட்டுரைகள். மதுரை காமராசர் பல்கலைக்கழகப் பதிப்புத்துறை வெளியீடு, 1987.

தமிழரசி.இரா., ‘தமிழ் இலக்கிய உத்திகள்- ஓர் அறிமுகம்’, Papers on Tamil Studies, International Institute of Tamil Studies, Madras, 1980.

நீதிவாணன்.ஜெ. ‘பின்புலமும் மொழிநடையும்’, அகிலன் கருத்தரங்க ஆய்வுரைகள், மதுரைப்

பல்கலைக்கழகத் தமிழ்த்துறை வெளியீடு, மதுரை, 1976.

புனிதா, ஆ., இன்றைய நடைமுறை வாழ்க்கையில் பெண்ணியச் சிந்தனைகள், பெண்ணியம், காவ்யா வெளியீடு, பெங்களூரு, 1994.

பெரியசாமி, தி., 'சுகி.சிவத்தின் தன்னம்பிக்கைச் சிந்தனைகளில் ஒரு சில கூறுகள்', சுகி.சிவம் ஒரு பன்முகப் பார்வை, கவிதா பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2004.

பெருமாள், அ.நா., 'இலக்கியத் திறனாய்வில் உளவியல் அணுகுமுறைகள்', திறனாய்வு அணுகுமுறைகள், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1989.

மங்கையர்க்கரசி மயில்வாகனன், 'பண்டைத்தமிழர் தம் மனிதநேயச் சிந்தனை', தமிழியல் ஆய்வு, கருத்தரங்கக் கட்டுரைகள் தொகுப்பு.

ஜீன் லாரன்ஸ், செ., 'மனிதநேயம் தியாகம்', தமிழலக்கியத்தில் மனிதநேயம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, மு.ப., 2005.

மல்லிகா, நா., 'தன்னம்பிக்கை பற்றிய சிந்தனைகள்', சுகி.சிவம் வாழ்வியல் சிந்தனைகள், கற்பகம் புத்தகாலயம், சென்னை, 2009.

**ஆ. ஆங்கிலம்:**

Andra Beteille, 'The Social System of a Tami Village', Culture and Society, Thomson Press (India) Ltd., Delhi, 1975.

Hanumanathan. K.R., 'Origin of the Untouchability of South India', Proceedings of the Thirty- Ninth Session, Vol.I, Indian Hisotry Congress, Centre of Advanced study in History, Aligarth, 1978.

Max Weber., 'Class, status and Party', Essays in Sociology, Oxford University Press, New York, 1946.

**4. ஆய்வேடுகள்:**

மேரி, இ., 'வீரமாமுனிவரின் உரைநடை நூல்கள்- ஓர் ஆய்வு', பி.ப.ஆ., அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, 1999.

முருகேசன், ச., 'சாகித்திய அகாதெமி விருதுபெற்ற புதினங்களில் சமுதாயப்பார்வை', பி.ப.ஆ., சென்னைப் பல்கலைக்கழகம், 2002.

மஞ்சுளவல்லி, பூ., 'சிவசங்கரி நாவல்களில் குடும்ப உறவுகள்', பி.ப.ஆ., அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, 2004.

சற்குணம், இரெ., 'குன்றக்குடி ஆதீனத் தமிழ்ப்பணி', பி.ப.ஆ., அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, 2009.

கண்ணாத்தாள், கே., ‘விக்கிரமனின் நாவல்களில் பெண்ணியம்’, பி.ப.ஆ., அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, 2006.

திரிவேணி, வெ., ‘கலைஞரின் புலப்பாட்டுத்திறன்’, பி.ப.ஆ., அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, 2007

முகமது சலீம், எச்., ‘தக்கலை செய்கு பீர்முகம்மது அப்பாவின் ஞானப்புகழ்ச்சியில் பெண்மை நலம் பேசும் கூறுகள்’, பி.ப.ஆ., அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, 2009.

பாத்திமா அமுதா., ‘பாரதியின் உரைநடையில் பெண்மை’, எ.ப.ஆ., அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, 1995.

இந்திரா, கா., ‘அவள் விகடனும் பெண்களும்’, எ.ப.ஆ., அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, 2001.

**5. கலைக்களஞ்சியங்கள்:**

**அ. தமிழ்:**

பெரியசாமித்தூரன், ம.பெ., தொகுதி-இரண்டு, தமிழ் வளர்ச்சிக்கழகம், சென்னை, மு.ப., 1968.

………………………….., தொகுதி-எட்டு, தமிழ் வளர்ச்சிக்கழகம், சென்னை, மு.ப., 1959.

………………………….., தொகுதி-பத்து, தமிழ் வளர்ச்சிக்கழகம், சென்னை, மு.ப., 1968.

**ஆ. ஆங்கிலம்**

Abrams, M.H. — A Glossary of Literary Terms, the Macmillan company of India Ltd, Madras, Third edition, 1971.

Shiplley, Joseph T.(Ed.)., — Dictionary of world Literary Terms, George Allen and Unwin, London, 1970.